# முக்கூடல்

சரித்திர நவீனம்

விமலா ரமணி



வானதி பதிப்பகம்
தி.நகர் • சென்னை-17

# முன்னுரை

சரித்திரக் கதைகள் என்பது 'பசித்தவன் பழங் கணக்குப் பார்த்த' வரலாறு! 'தமக்கென உலை யேற்ற' தமிழர் தம் தனிப் பண்பு, 'ஈதல் அறம்' என வாழ்ந்திட்ட பழந்தமிழர் பெருமை, 'வினையே ஆடவர்க்கு உயிரே'—என்ற ஆண்மையின் திறம் பற்றிப் பேசப்படுகின்ற நிகழ்ச்சிகள்—இவைகள் கடந்த கால இலக்கியங்கள் நமக்குக் காட்டுகின்ற கற்பகத் தருக்கள்! வெயிலில் வாடி இளைத்திருக்கும் போது குளுமையான நிழலின் தன்மையைப் பற்றி நெஞ்சு நினைப்பது இயற்கையல்லவா?

இனிக்கின்ற கற்பனைகளுடன், இயல்பான பழைய வாழ்வின் நெறி முறைகளுடன், சரித்திரச் சம்பவங்களின் பின்னணியுடன் சில குணச் சித்திரங் களைப் படைக்கும்போது அந்தச் சூழ்நிலையின் ஏற்றத் தால் அப்பாத்திரங்கள் குணக் குன்றுகளாகத் தோன்றுதல் இயல்பு. அப்போதும் அன்பு, பண்பு, அறிவு, ஆணவம்—போன்ற பலதரப்பட்ட மனிதக் குணநலப் பண்புகள் இருந்திருக்கின்றன. சரித்திர மானாலும், சமூகமானாலும் வாழ்வின் அடிப்படை தத்துவம் ஒன்றாக—அதுவும் உயர்ந்ததாகத்தான் இருக்க வேண்டும். வேம்பு கசப்பதும், மா புளிப் பதும், பலா இனிப்பதும் அதனதன் இயல்பு. ஆனால் இந்த அற்புத இயல்புகளுடன் மரம் 'வேரூன்றி' தான் உயர வளர்கிறது என்பதுதான்

அடிப்படை தத்துவம், உரிமை. சின்னஞ்சிறு கண்ணடி ஒரு பெரிய மலையைத் தன்னுள் பிரதி பலித்துக் காட்டுவதைப் போல ஒரு சின்னஞ்சிறு 'இலக்கியம்' கூட பல உண்மைகளைப் பிரதிபலித்துக் காட்டும். சரித்திர நாயகனுக இருப்பினும், சமூக நாயகனுக இருப்பினும் மனமெனும் குகைக்குள் மண்டிக் கிடக்கின்ற பல உணர்வுகளை 'கதைகள்', 'நாவல்கள்' நமக்குக் காட்டுகின்றன. இதே அடிப் படையில் பிறந்ததுதான் இந்தச் சரித்திரச் சின்னஞ்சிறு நவீனம். சிறிய மலருக்குக் குறைவான மணம்தான் இருக்க வேண்டும் என்கிற நியதி இல்லை!

கோவையிலிருந்து வெளி வந்து கொண்டிருந்த ''வான்மதி'' என்ற பத்திரிகைக்காக அதன் ஆசிரியர் என்னை ஒரு சரித்திரத் தொடர்கதை எழுத அன்புடன் பணித்தபோது, மேற்படி பத்திரிகையின் அமைப்புக்கு ஏற்றமாதிரி சிறுசிறு அத்தியாயங்களாக எழுதி சிறிய நாவலாக இதை முடிக்க வேண்டிய நிலையில் இருந்தேன். இதை மனமுவந்து அன்புடன் வெளியிட்ட வானதி பதிப்பகத்தாருக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்ற இதே நேரத்தில் வாசகர்களுக்கு ஒரு வேண்டுகோள். இரு அழகு நதிகளின் (காவிரி, அமராவதி) ஆழமான 'சங்கமத்தை (மணிமாறன்) விவரிக்கின்ற கதை இது. இந்தச் சின்னஞ்சிறு 'முக்கூடலில்' வாசக அன்பர்கள் மூழ்கி அன்பெனும் வெள்ளத்தில் நனைந்தால் அதுவே என் படைப் பினுக்கு ஓர் வெற்றியாகும் என்று கூறிக் கொள்ள ஆசைப்படுகிறேன். வணக்கம்.

கோவை—9
18—11—'71

அன்புடன்
**விமலா ரமணி**

முக்கூடல் :

ஒரு சங்கமத் துறை. அமராவதி, காவிரி, மணிமுத்தாறு ஆகிய மூன்று நதிகள் கூடுமிடம்.



பரணர் கூற்று :

நாடு வளம் பொழிய உலகம் புரை இச்
செங்குணக் கொழுகுங் கலுழி மலிர் நிறைக்
காவிரியன்றியும் பூவிரி புனலொடு
மூன்றுடன் கூடிய கூடலனையை...



ஒவ்வொரு மனித உடலுக்குள்ளும் ஒரு சங்கமத் துறை, உணர்ச்சிகளின் கூடும் இடம் இருக்கின்றது. அதனுடைய பெயர்தான் இதயம். எண்ணற்ற ஆயிரமாயிரம் உணர்வுகளின் பிறப்பிடமும் இங்கேதான். கடந்தவைகள் சரித்திரங்களாகிக் கற்பனையில் சிரிக்கும்போது கோடி 'முக்கூடல்'களில் முழுகி எழ வாய்ப்பு உண்டு.

# 1. இலவந்திகை வெள்ளி மாடம்

'மஞ்சு சூழுஞ்' சோலைகளைக் கொண்ட மலைவளம் மிக்க சேரநாட்டின் இனிமையான இயற்கைக் காட்சிகள். குன்றக் குரவை நிகழ்த்தும் மலை மகளிருடைய பாடல் களினால் இந்த மலைநாடு எதிரொலிகளைக் கிளப்பிக் கொண்டே இருக்கிறது. மலையில் முருக பூசனை செய்யும் வேட்டுவர்கள் பாடும் வேலனது பாடல்கள் இனிமை நிறைந்தனவாய் இருக்கின்றன. தினைமா இடிப்பவர் களது உலக்கையின் வன் ஒலியும், தேனெடுக்கும் குறவர் களின் கூப்பாடும், 'ஒல்'லென்று ஆர்ப்பரிக்கும் அருவியின் ஓசையும், மலைக்காடுகளில் திரிந்தலைகின்ற யானைகளின் பிளிறல்களும் நிறைந்து...... எல்லாமாகி ஒலிக்கின்ற இனிய ஒலி. தினைப்புனங்களில் காவல் காத்து நிற்கின்ற பெண்களின் ஆலோலக் கூச்சல்... எல்லாம் கலந்து காதிலே பாய்கின்றபோது 'ஆஹா... இந்தச் சேர நாட்டின் வளமே வளம். இம்மலை மக்களின் உயர்வே உயர்வு. 'மாரி பொய்ப்பினும் தான் பொய்யா' சேரர் பரம்பரையை அல்லவா தம் தலை மகனாகப் பெற்றுள் ளனர் - என்று எண்ணத் தோன்றுகிறது.

அதுவும்?

சேரன் செங்குட்டுவனின் ஆட்சி! இளமையிலேயே துறவறம் பூண்டிட்ட 'ராஜரிஷி' இளங்கோ அடிகளின் அன்புத் தமையன். அக்கினி குலத்தோன்றல்.

'வடவருட்கும் வான்றோய் நல்லிசைக் குடவர் கோமான் நெடுஞ் சேரலாதன்' -என்று புகழப்பட்ட கீர்த்தி மிக்க தந்தையின் வீரமிகு தனயன்.

[1]இமயம் வரை படையெடுத்துச் சென்று அம் மலை மேல் தன் இலச்சனையாகிய வில்லைப் பொறித்து, தமிழக முழுவதையும் தன் செங்கோலின் கீழ் ஆண்டு, தன்னுடன் பொருதிய ஆரிய அரசர்களை வென்று, யவன அரசர்களை வீழ்த்தி, கடலிடைத் தீவின் பகைவர்களை அழித்து-அவர்கள் காவல் மரமாகிய கடம்பை வெட்டி, பற்பல வீரச் செயல்களைப் புரிந்து வஞ்சியம்பதியைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்த கோமான் இமயவரம்பன் நெடுஞ் சேரலாதன், இச் செங்குட்டுவனின் தந்தை. புலிக்குப் பிறந்தது பூனையாகுமா?

உதியஞ்சேரல் பரம்பரையில் தோன்றிய உத்தமக் குலத் தோன்றல் அல்லவா?

அவன் ஆட்சியில் நாடு அமைதி பெற்றிருந்தது. மக்கள் நல் அறங்களைச் செய்துவந்தனர்.

முறைசெய்து காக்கும் மன்னவனே அந் நாட்டு மக்களின் 'இறை'யாகி நிற்கும்போது மக்களுக்கு என்ன கவலை?

இதோ, சேரனைக் காண, அவன் தரிசனம் பெற, மக்கள் 'இலவந்திகை வெள்ளி மாடம்' - என்ற அவன் அரண்மனை மாளிகையின் கண்ணே காத்து நிற்கின்றனர். மான் மயிர்க் கவரியும், மதுவின் குடங்களும், சந்தனக் குறையும், சிந்தூரக் கட்டிகளும், அஞ்சனத் திரளும், அணியரிதாரமும், பீலி மஞ்ஞையும், நாவின் பிள்ளையும்,

1. இமயப் படையெடுப்பு : இமயம் வரை படை எடுத்துச் சென்று வெற்றிக் கொடி நாட்டிய நெடுஞ்சேரலாதனைப் பற்றி இளங்கோ அடிகளும் சிலப்பதிகாரத்தில் கூறியுள்ளார்.

''மாநீர் வேலிக் கடம்பு எறிந்து, இமயத்து
வானவர் மருள, மலையில் ஆட்டிய
வானவர் தோன்றல்''...
'' கடம்பு முதல் தடித்த காவலன் '' *

கானக் கோழியும், தேமொழிக் கிள்ளையும் இவை போன்ற பண்டங்களைச் சுமந்து நிற்கும் மக்கள் கூட்டம்.

இதயம் பெருமிதத்தால் விம்ம சேரன் அம்மக்களின் கூட்டத்தை ஆவலுடன் பார்த்தான்.

போர் முரசின் ஒலி கேட்டே புளித்துப்போயிருந்த அவன் காதுகளில் மக்கள் கூவும்...

''மன்னன் வாழ்க!''

''செங்கோல் செம்மல் வாழ்க!''

''திங்கட் செல்வன் வாழ்க!''

- என்பன போன்ற ஒலிகள் தேமதுரமாய்ப் பாய்ந்தன.

போர்த் தழும்பேறிய வீர உடல் புல்லரித்தது. வீரம் உரமாக ஏறியிருந்ததால் மென் உணர்வுகள் இற்றுப் போய்விட்ட கல் இதயத்தில் கூட ஈரம கசிந்தது.

மன்னன் கைகூப்பி மக்களைத் தொழுதான். வில்லை இலச்சனையாகக் கொண்டிருந்த சேரனின் கொடி காற்றில் சலசலத்தது.

''அன்புப் பெருமக்களே ....உங்கள் அன்பினுக்கு நன்றி... நன்றி'' - என்று மீண்டும் மீண்டும் கூறியவனுய்க் கூப்பிய கரங்களைப் பிரிக்காமலே நன்றி தெரிவித்த வண்ணமிருந்தான்.

திடீரென ஒரு பரபரப்பு -

''புலவர் பரணர் வருகிறுர்'' என்கிற சலசலப்பு. கூட்டத்தினரின் சலசலப்பினூடே, வழி விட்டு ஒதுங்கிய மக்கள் வெள்ளத்தின் இடையே இருந்து அந்தப் புலவர் பெருமான் வெளிப்பட்டார். பாவேந்தன் எழுந்து நாவேந்தனை வரவேற்ருன். மகிழ்ச்சியடைந்த பரணர் மன்னனைப் பார்த்தார். மன்னவனும் தன் முன் நின்றவரைப் பார்த்தான்.

''ஓ... என் அன்பு மன்னவா! [2]வண் தமிழ் மறையோர்க்கு வான் உறை கொடுத்த திண் திறல் சேரர் பரம்பரைக் குலத் தோன்றலே! குடவர் கோமானே.. ... [3]'கொடு கூரெறிந்த கோமானே' நீ வாழ்க! நின் கொற்றம் வாழ்க!''

''என் அன்பு பரணரே... செந்தமிழ்ச் செல்வரே! என் வீரச் செயல்களைப் புகழ்ந்து பாடிய புலவர் பெரும! அறிவிலும், வயதிலும் மூத்த என் நண்பரே, வருக... வருக'

வாய் மொழியின்றி கண்கள் பேசிக்கொண்ட கதைகள் இவை.

இன்னும் இதயத்தில் என்ன என்ன இருக்கின்றனவோ? மன்னனும், புலவர் தலைமகனும் தம் தம் நிலை மறந்து உணர்ச்சிப் பெருக்கோடு நிற்பதைக் கண்ட மக்கள் கூட்டம் மெல்ல மெல்லக் கலைய ஆரம்பித்தது.

மாமன்னனின் கோப்பெருந்தேவி [4] இளங்கோ வேண்மாள் மெல்லத் தன் தலைவன் அருகில் வந்தாள்.

2. செங்குட்டுவனின் தந்தையான நெடுஞ்சேரலாதனின் தம்பி பல் யானைச் செங்கழுகுட்டுவன். இவனைப் 'பதிற்றுப் பத்தின் மூன்றும் பத்தால் பாலைக் கௌதமனுர் என்ற புலவர் புகழ்ந்து பாடியுள்ளார். இப் புலவரின் வேண்டுகோளின்படி இச் சேரன், பத்துப் பெரும் வேள்விகளைச் செய்வித்து, முடிவில் அப்பார்ப்பனப் புலவரும், அவர் மனைவியும் சுவர்க்கம் சென்றனர் என்பது வரலாறு.

3. கொடுகூர் என்பது கொங்கர்களுடன் சேரன் போரிட்டபோது சேரன் செங்குட்டுவனுல் அழிக்கப்பட்டது. இந்நாடு பின் சேரனின் உடைமையாயிற்று.

4. சேரனின் கோப்பெருந்தேவி. வேளிர்க் குலக் கொழுந்து இவள். 'இளங்கோ வேண்மாளுடனிருந்தருளி' - 'வதுவை வேண்மால் மங்கல மடந்தை' - என்றும் சிலப்பதிகாரம் கூறுகிறது.

"பிரபு"

தேவியின் வீணை நாதம் ஒத்த குரல் உணர்ச்சி பெருக்குடன் நின்றவர்களை நினைவு உலகிற்கு மீட்டு (டி) க் கொண்டு வந்தது.

"அமருங்கள், பரணரே"- சேரன் சுய நினைவு பெற்றவனாய் புலவரை உபசரித்தான்.

"நன்றி, மன்னா!" - பரணர் அமர்ந்தார்.

இதற்குள் தேவியின் குறிப்பால் உணர்ந்து கொண்ட சேடிகள் பரணர் அருந்தப் பாலும் பழமும் கொண்டு வந்தனர்.

"ரொம்பவும் தளர்ந்துதான் போய்விட்டீர்கள், பரணரே."- சேரன் மெல்லக் கூறினான்.

பரணர் நிதானமாகச் சிரித்தார்.

தூய வெண்மையாகப் பளபளத்த அந்தப் பற்கள் அநுபவம் நிறைந்த அவர் தலை முடியுடனும் தாடியுடனும் போட்டி போட்டன.

"செங்கதிர்ச் செல்வ... இந்த உடல்தானப்பா தளர்ந்து விட்டது. இன்னும் இந்த உள்ளத்தில் பலமிருக்கிறது, மன்னா......பலமிருக்கிறது. இல்லையெனில் உன் தந்தை நெடுஞ்சேரலாதனுக்கும், சோழன் பெருவிறற்கிள்ளிக்கும் மண்ணாசை காரணமாகப் போர் மூண்டதே... நான் எவ்வளவோ தடுத்தும் கேளாமல் இரு மாபெரும் வேந்தர்களும் அதே போர்க்களத்தில், அதே மண்ணில் மடிந்து வீழ்ந்தனரே! அவர்களின் கொற்றக் குடைகளும் மண்ணைக் கவ்வ, போர் முரசம் மண்ணில் வீழ, இரு மன்னர்களும் ஒருவரை ஒருவர்

கொன்றொழிந்தார்களே. அந்தக் காட்சியை நேரில் கண்டும் என் இதயம் அப்போதே வெடிக்கவில்லையே..... வைரம் பாய்ந்த இந்த இதயத்தில் பலமிருந்ததால்தான் மன்னு, அந்தக் கோரக் காட்சியைக் கூட கவிதையாக எழுத முடிந்தது.''

சற்று நேரம் பரணர் வாளா இருந்தார்.

தந்தையின் நினைவு வரப்பெற்ற தனயனும் தலை குனிந்து அமர்ந்திருந்தான்.

'ஓ...இந்தப் பரணர் எவ்வளவு அநுபவம் நிறைந்தவர். தந்தையின் நண்பர். இப்போதோ மகனின் நல் ஆட்சிக்கு மந்திரிபோல் விளங்கும் முதியவர்.'

அப்பெரும் போரிலே தந்தை இறந்ததும், அதைத் தொடர்ந்து தாயாகிய நற்சோணை - சோழன் மணக்கிள்ளியின் அன்பு மகள்-உடன் கட்டை ஏறியதும், தாயின் நினைவை நெஞ்சிலே கொண்ட அன்பு மகனும் செங்குட்டுவன் பட்டமடைந்ததும் தாயின் [5]பத்தினிப் படிவத்தை கங்கை நீராட்டச் சென்றதும் அங்கே எதிர்த்த ஆரிய அரசர் பலரை வீழ்த்தியதும்...?

எல்லாமே கனவுகள். நெடிய கனவுகள். சலிப்பு மிக்க வீரக் கனவுகள்.

செங்குட்டுவன் தன் உடலைச் சிலிர்த்துக் கொண்டான்.

''என்ன மன்னு? கடந்த காலத்தின் போர் முரசின் ஒலி இன்னும் உன் காதில் ஒலிக்கிறதா?''

5. கணவனுடன் உடன்கட்டை ஏறிய பத்தினியின் உருவம் வரைந்த சிலை பத்தினிப் படிவம்.
மாஸ்திகல்:- மஹாஸதி கல் - என்பார் கன்னட நாட்டார்.

தேவி இடையில் குறுக்கிட்டாள்.

"புலவர் பெருமானே! மன்னருக்குக் கடந்த காலத்தை நினைவு படுத்தாதீர்கள். மறுபடியும் போராக் களம் நோக்கிப் பாய்ந்துவிடப் போகிறார். இப்போது தான் சற்று போர்க் கூச்சல் ஓய்ந்திருக்கிறது என்று நினைக்கிறேன்."

"உண்மைதான், தேவி. கொங்கர் செங்களத்து நடத்திய போர், கடல் வழி நடத்திய போர், தன் அன்பு நண்பன் அறுகை என்பவனுக்காக பாண்டியன் படைத் தலைவனான பழையனுடன் நடத்திய போர்...அப்பப்பா ...என்ன கோரம் என்ன கோரம்..."

சேரன் இரைந்து சிரித்தான்.

"கோரமா? நன்றாய் இருக்கிறது உங்கள் நியாயம்? என் செயல்களை எல்லாம் வீர, தீரச் செயல்களாகப் புகழ்ந்து பாடி, உங்கள் கவிதா சக்தியால் என் போர்ச் சாகசங்களையெல்லாம் *அற்புதக் கவிதை நூலாக அரங் கேற்றி இருக்கிறீர்களே!... நானும் அதை உண்மை என நம்பித்தானே [6]'உம்பர்க் காட்டை' உமக்குப் பரிசாக அளித்தேன். இன்று இதே செயலைக் கோரம் என்கிறீர் களே? இது நியாயம் தானா?"

*சேரன் செங்குட்டுவனின் வீரச் செயல்களைப் பரணர், பதிற்றுப்பத்தின் ஐந்தாம் பத்திலே புகழ்ந்து பாடியுள்ளார்.

6. யானைமலைப் பகுதியாகையால் இந்த உம்பர்க் காட்டை 'வேழக் காடு' என்றும் கூறுவார். இது முன்னூறு ஊர்களைக் கொண்ட பகுதியாகும். முதலில் சேரன் செங்குட்டு வனின் தந்தை நெடுஞ்சேரலாதன் இந்த உம்பர்க் காட்டினைத் தன் அன்புப் புலவராகிய குமட்டூர்க் கண்ணனுருக்குக் கொடுத்ததாக அறிகிறோம்.

மன்னனின் பேச்சிலிருந்த ஹாஸ்யத்தை ரசித்த பரணரின் கண்கள் நிரம்பின.

உம்பர்க் காட்டை மட்டுமா மன்னவன் தந்தான்.

"என்ன பரணரே, யோசிக்கிறீர்? உங்கள் சீடன் மணிமாறன் எப்படி இருக்கிறான்? நன்றாகக் கல்வி கற்கிறானா?" -மாமன்னன் கேட்டான்.

உணர்ச்சிப் பெருக்கில் பரணர் மன்னர்பிரானின் கைகளை இறுகப் பற்றினார்.

"பிரபு...அவன்...என் சீடனா?"

தேவி 'சரே'லென அவ்விடத்தை விட்டகன்றாள். மா மன்னனின் முகத்திலே மர்மப் புன்னகை ஒன்று மலர்ந்தது.

## 2. காவேரியின் கரையில்

வளமிக்க சேர நாட்டின் ஆற்றங்கரைப் பகுதி அது. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நான்கு நிலங்களிலுமுள்ள பொருள்களை ஒருங்கே கொண்டுள்ள நாடு சேரநாடு.

"கடலவும் கல்லவும் யாற்றவும் பிறவும் வளம் பல நிகழ்தரு நனந்தலை நன்னாட்டு விழவு அலுபறியா முழவுமிழ் மூதூர்"-என்று குமட்டூர் கண்ணனார் புகழ்ந்து பாடிய நாடல்லவா!

கடல்படு பொருளும், மலைபடு பொருளும், ஆறு பாயும் முல்லை, மருதம் என்னும் நிலங்களின் பொருள்களும், வேற்று நாட்டுப் பொருள்களும் நிறைந்த வளம் பெற்ற நாடு அது.

சேர நாட்டு மகளிர் அவலை எறிந்து உலக்கையை வாழை மரத்தினிடத்தில் சேர்த்து வைத்து விட்டு, வள்ளைப் பூக்களைப் பறிப்பதற்காக வயலில் இறங்குவார்களாம். அவ் வயல்கள் முற்றிய கதிர்களால் நிறைந்துள்ளதாய் தாழ்ந்து நிற்கும் தன்மை உடையனவாம். வள்ளைப் பூக்களும், சூல் முற்றிய கதிர்களும் நிறைந்த நாடு அது. 'காலமன்றியுங் கரும்பறுத்து ஒழியாத' மலை நாடு.

இந் நாட்டின் ஆற்றங்கரைப் பகுதியில் ஒரு இளம் பெண் நின்று கொண்டிருக்கிறாள்.

அவள் தன்னை மறந்து அந்த இயற்கைக் காட்சிகளை ரசித்துக் கொண்டிருப்பது புரிகிறது.

"காவேரி... இன்னும் என்ன செய்துகொண்டிருக்கிறாய் இங்கே? ஊர் திரும்பவேண்டாம்? நேரமாகிறது. விரைந்து குதிரையில் ஏறிக்கொள்."

அவளைத் துரிதப்படுத்திய அந்த வாலிபன் அழகாய் இருந்தான். அவன் முகத்தில் ஒரு களை விரவி இருந்தது. அவன் அழகு முகத்திற்கு மேலும் அணி செய்தது அவன் இளம் மீசை.

அவள் திடுக்கிட்டவள்போல் விழித்தாள்.

"என்ன சொன்னீர்கள் ஐயா?"

"இப்படி நீ உன் கனவுலகில் லயித்திருந்தால் வஞ்சிக்கு இரவுக்குள் போக முடியாது. தெரியுமா? உன் பேச்சைக் கேட்டுக்கொண்டு நானும் புத்திக் கெட்டுப் போய் வந்தேன் பார். வஞ்சியை விட்டு எத்தனை காத தூரம் விலகி இருக்கிறோம் தெரியுமா உனக்கு? உன்னைக் காணாமல் அப்பா வேறு கவலைப்பட போகிறார்."

'கலகல'வென்று சிரித்தாள் அப் பெண். அவள் காலடியில் ஓடிய *காவிரி நதியும் கூடச் சிரித்தது.

''அப்பா தானே? நன்ருகக் கவலைப்படுவார். தமிழ்க் கவிதையின் சத்தம் ஏதாவது சரியாக வரவில்லை என்ருல் அதைப்பற்றிக் கவலைப்படுவார். அணி இலக்கணம் ஏதாவது தப்பினுல் அதற்காகக் கவலைப்படுவார். என்னைப்பற்றியா அவர் கவலைப்படப் போகிருர்! அவர் ஒரு விசித்திரப் பிறவி.''

காவேரி பெருமூச்செறிந்தாள்.

அவன் ஏதோ கூற வந்தான். ஆயினும் பொழுது அவசரமாக விழுந்து கொண்டிருப்பதைக் கவனித்த அவன்...''சரி சரி, முதலில் குதிரையில் ஏறு, சொல்கிறேன். பிறகு பேசலாம். பேசுவதற்கு நிறைய நேரமிருக்கிறது வழியில்.''

அவள் மௌனமாக அவனுடன் நடந்தாள்.

ஆற்றங்கரையின் அந்த இனிமை நிறைந்த பொழில்களையும், வண்ண வண்ண நிறம் காட்டிச் சிரிக்கும் மலர்

---

* காவிரி சோழர் நாட்டின் சொத்தாயிற்றே? எப்படி சேர நாட்டில் உறவு பூண்டாள்? 'முக்கூடல்' 'சேரன் செங்குட்டுவன்' காலத்தில் நடந்ததாக எழுதப்பட்ட ஒரு வரலாற்றுக் கற்பனைக் காவியம். அப்போதைய சேரநாட்டு மலைகளுக்குள் கொல்லியும், அயிரையும் சேர்ந்திருந்ததாக வரலாறு பாடுகின்றது. அப்படிப் பார்க்கும்போது பழநிமலை இதைச் சார்ந்ததே!

வைகைக் கரை வழியே சென்று, சேர நாட்டிலுள்ள நெடுவேள் குன்றமாகிய இம்மலைப் பகுதிக்கு வந்தே கண்ணகி சுவர்க்கம் புகுந்ததாகச் சிலப்பதிகாரம் கூறுகிறது. அயிரை என்பது பழநிமலைத் தொடரை அடுத்த ஆனைமலைப் பகுதி. 'அயிரைப் பொருநன' என்பது சேரனின் சிறப்புப் பெயர்.

இதே போல்தான்... காவிரியின் தலையிடைப் பகுதிகளும், பொருநை, குடவனுறு, காஞ்சி, காரியாறு, பேரியாறு முதலிய நதிகளும் இச்சேர நாட்டில் ஓடுவன: ''தண் பொருநை சூழ் தரும் வஞ்சியார் கோமான்.''

களின் விகசிப்பையும் மீண்டும் பார்க்க விரும்புபவள் போல் திரும்பிப் பார்த்தாள்.

ஆற்றங்கரையின் இரு மருங்கிலும் ஒங்கி உயர்ந்த நெடு மரங்கள் தம் அழகைப் பார்க்க விரும்புவனபோல் நதியில் எட்டிப் பார்த்தன. வானத்திலே பஞ்சுப் பொதிகள்போல் பரந்து திரிந்த மேகக் கூட்டங்களும் போட்டி போட்டுக் கொண்டு எட்டிப் பார்த்தன.

அவள் தயங்கி நின்ருள்.

அவன் தனக்குள் முணு முணுத்துக் கொண்டான்.

'நல்ல பெண். நல்ல இயற்கைப் பைத்தியம்! அப்பா பரணருக்குக் கவிதைப் பைத்தியம். மகளுக்கு இயற்கைப் பைத்தியம். எனக்கு?'

தனக்குத் தானே மீண்டும் சிரித்துக் கொண்டான்.

பரணரிடம் அவன் சீடனுக வந்து எத்தனை பருவங் கள் கழிந்து விட்டன!

வசந்தமும், இலையுதிர்காலமும், மாரிக் காலமும் மாறி மாறி எத்தனையோ முறை தோன்றி மறைந்து விட்டன. அவன் என்ன கற்றுக் கொண்டான்?

பரணர் கற்றுத் தந்த தமிழ் இலக்கியத்தைவிட...? அவன் நினைவு திசை திரும்பியது.

'இந்தப் பெண் காவேரி ஒரு பைத்தியம். ஆடி பதினெட்டும் கழிந்துவிட்டது. புத்தாடை உடுத்தி, புதுப் புனலில் குளித்து வரும் காவிரி ஆற்றின் கட்டுக் கடங்காக் களிப்பைக் காண வேண்டும் என்று பிடி வாதம் பிடித்தாளே என்று, பரணர் அரசவைக்குப் போயிருக்கும் நேரமாகப் பார்த்துக் குதிரையுடன் வந்து அவள் ஆசையை நிறைவேற்றி வைத்தால் விரைவில் திரும்ப மறுக்கிருளே இந்தப் பெண்! கண்டிப்பாய்

இத்தனை நேரத்திற்குள் பரணர் வீடு திரும்பி இருப்பார். தன் அன்புச் சீடனையும், மகளையும் காணவில்லையே என்று கவலைப்படுவாரோ? கவலைப்பட மாட்டார். புத்திசாலி சீடன் மணிமாறன் இருக்கும்போது காவேரி யைப் பற்றிக் கவலைப்பட மாட்டார்.'

காவேரியின் குரல் அவன் சிந்தனையைக் கலைத்தது.

"நல்ல வேடிக்கை......என்னைத் துரிதப்படுத்திவிட்டு நீங்கள் கனவு காண்கிறீர்களா?"

சிந்தனைகளில் இருந்து விடுபட்ட மணிமாறன் தாவிக் குதிரையின்மீது ஏறினன்.

காவேரி அவனை நெருங்கி அமர்ந்திருந்தாள் பின்னல்.

குதிரை பறக்கவாரம்பித்து.

பயத்தின் மிகுதியால் அவள் அவனை இறுக அணைத் துக்கொண்டாள். சில்லிட்டுக் கிடந்த அந்தக் கைகளின் ஸ்பர்சத்தால் அவள் பயத்தினை அவனல் உணர முடிந்தது.

குதிரையின் வேகத்தை அவன் மிதப்படுத்தினன்.

"டக் டக்" என்கிற சீரான ஒலியுடன் தலைநகராம் வஞ்சியை நோக்கிச் செல்லும் ராஜபாட்டையில் குதிரை ஓடிக்கொண்டிருந்தது.

இரு மருங்கிலும் ஓங்கி வளர்ந்திருந்த நிழல்தரும் பெரிய பெரிய மரங்கள் அந்த மாலை வேளையின் மனோகர மான மென்காற்றின் அசைவினுக்கு ஏற்ப மெல்ல ஆடின. கூடுகளில் அடைந்தபடி கூவும் பறவையினங்கள், வீடு நோக்கி வரும் பசுவினங்களால் எழுப்பப்பட்ட புழுதிப்படலத்தை மேகமாக எண்ணி அதனை வியப் புடன் பார்த்தபடி இருந்தன.

இப்போது அந்த நெடிய பாதையில் அவர்கள் இருவரைத் தவிர யாருமில்லை.

அவன் சிந்தித்தான்.

அவன் முதன் முதலில் அவளைப் பார்த்தது...

சின்னஞ்சிறு பெண்ணாக பரணர் குடிலில் அவள் ஓடி விளையாடிக் கொண்டிருந்தாள் மானுடன்.

மானின் மருண்ட விழிகளுடன் அவள் அழகிய விழிகள் போட்டி இட்டன. காலடி ஓசை கேட்டு மிரண்டு ஓடிய மானைப் பார்த்தபடி அவள் திகைத்து நின்றிருந்தபோது அவன் எதிரில் தோன்றினான்.

"நான் வேண்டுமானால் பிடித்துத் தரவா?"

புதுக் குரலைக் கேட்டு அவள் திடுக்கிட்டு நிமிர்ந்த போது அவள் தந்தையுடன் கூட நின்றிருந்த அந்தச் சிறுவனை வியப்புடன் பார்த்தாள்.

"என்ன காவேரி அப்படிப் பார்க்கிறாய்? அப்பா அரசவையில் கவிதை பாடிப் பரிசில் பெற்றிடுவார் என்று நினைத்தோமே- ஒரு சிறுவனை அல்லவா அழைத்து வந்திருக்கின்றார் என்று பார்க்கிறாயா? இவன் என் சீடன் மணிமாறன். இனி இங்குதான் தங்கி தமிழ்க் கற்கப் போகிறான். உனக்கு ஒரு நல்ல தோழன் கிடைத்து விட்டான். தனிமை பிடிக்கவில்லை என்பாயே! இனி நீ மானுடன் விளையாட வேண்டாம்; இந்த மனிதனுடன் விளையாடு.

அறிமுகப்படுத்திவிட்டுப் பரணர் அப்பால் போய் விட்டார்.

ஆனால், அவள் வியப்பு வெகு நேரத்திற்கு அடங்கவே யில்லை.

அவள் கேட்ட முதல் கேள்வி.

"உன் பெயர் என்ன?"

"மணி மாறன்"

"எந்த ஊர்?"

"இதே ஊருதான்?"

"தாய் தந்தை?"

"ஒருவருமில்லை. அனுதை"

"ஐயோ பாவம் .."

இரக்க ஊற்று சுரந்த அந்தக் கணத்திற்குப் பிறகு மீண்டும் அவர்களுக்குள் இடைவெளி ஏற்படவேயில்லை "குருவாக என் அப்பாவைத் தேர்ந்தெடுத்தாயே கெட்டிக்காரன்"—என்று பாராட்டுரை வழங்கினுள்.

மணிமாறன் ஒரு பெருமூச்சுவிட்டான். அவன் மார்பைச் சுற்றி இருந்த அந்த வளையல் கரங்கள் அவன் மார்பினுக்கு ஒரு ஆபரணமாக இருந்ததுடன் அவன் பெருமூச்சிற்கு ஏற்ப ஏறி இறங்கின.

"என்ன மணிமாறு சிந்தனை?"

அதே பழைய காவேரிதானு இவள்?

காலம் இவளுள் புகுந்து என்ன என்ன ஜாலங்களைச் செய்திருக்கின்றது! இப்போதெல்லாம்......

'மணிமாறன்' -என்று பெயர் சொல்லி அழைத்தாலும் மரியாதையாக 'நீங்கள்' என்றே விளிப்பாள்.

"ஒன்றுமில்லை காவேரி...... நாம் முதன் முதலாகச் சந்தித்த அந்தப் பழைய நாட்களை நினைவு படுத்திக் கொண்டேன்..." -அவள் கண்களில் ஒரு மிரட்சி. அதே மானின் மிரட்சி அவள் கண்களில் தோன்றி மறைந்தது.

அவன் திரும்பி உட்கார்ந்தான்.

"பாதை...?" - அவள் பரபரத்தாள்.

அவன் மெல்லச் சிரித்தான்.

"என்னைவிட என் குதிரைக்கு நன்றாக வழி தெரியும்!"

"உங்கள் குதிரையா?"

அவன் ஒரு கணம் தடுமாறிப் போனான்.

"அதாவது..... இப்போதைக்கு இது என் குதிரை தானே?"

"ஓஹோ!"

மேக மூட்டத்திலிருந்து விடுபட்ட சந்திரனின் பொற் கிரணங்களினால் வெள்ளி முலாம் பூசப் பட்டவர்களாய், ஆணழகுமிக்க அற்புதக் குதிரைமீது பவனி வந்த அவர்களின் தோற்றம் அழகுமிக்க காதல் சிலையின் கற்பனைத் தோற்றமாகத் தோன்றியது.

## 3. பரணர் குடில்

மாலைப் பொழுது தேய ஆரம்பித்து விட்டது. இருளின் போர்வை மெல்ல விழ ஆரம்பித்தது. காற்றோடு புழுதியையும் வாரி இறைத்தது ஆடி மாதத்துக் காற்று.

பரணர் பரபரப்புடன் தம் குடிலுக்குள் நுழைந்தார். அழகிய வசதிகள் நிறைந்த, பொழில் மலிந்த சின்னஞ் சிறு குடில் அது. எளிமையும், தனிமையும், இயற்கை அழகுகளையும் விரும்பிய பரணருக்கு ஏற்ற இடம்.

கவிஞனின் சொத்து அவன் சிந்தனைதானே? அந்தச் சிந்தனைக்கு உற்ற துணை தனிமைதானே? தனிமையில் இன்பம் கண்டு வந்த பரணரை இந்தப் பொல்லாத பெண் காவேரிதான் சம்சாரியாக்கி விட்டாள்.

பரணர் தமக்குள் மெல்லச் 'சிரித்துக் கொண்டார். காவேரியைப் பற்றி எண்ணும் போதெல்லாம் அவர் இதயம் விம்முவதை அவரால் உணரமுடிந்தது. சின்னஞ் சிறு பெண்ணாகக் காவேரி இந்த வீட்டில் தவழ்ந்து விளையாடியபோது அவர் அடைந்த புளகாங்கிதம்-அம் மானை, பந்து முதலிய மகளிர் விளையாட்டை விளையாடிய போது அவர் பெற்ற அந்த இன்பம் - அந்த மனையி னுள்ளே சிறு வீடு கட்டி, மணல் சோறு சமைத்து, மணி ஊசல் ஆடியபோது அவர் உணர்ந்த அந்தப் பெருமிதம்- எல்லாமாக இப்போது பருவப்படியில் காலெடுத்து வைத்துக் கொண்டு இருக்கும் அதே காவேரியைக் காணும்போது பெருமூச்சுக்களாக மாறிப்போனது ஏன்?

பரணர் தமக்குள் சிந்தித்தார். சேரன் மகன் குட்டுவஞ்சேரல், மணிமாறன் என்கிற மாற்றுப் பெயரில் பரணரிடம் குருகுலவாசம் புரிய வந்தது என்னவோ உண்மைதான்.

ஆனால்... அவன் இளவரசன் என்பதை யாருக்கும் அறிவிக்க வேண்டாம் என்று அரசன் இட்ட அந்தக் _ளை ...?

அது ஏன்?

அரசியலில் ஆயிரம் சிக்கல்கள் இருக்கலாம். ஆனால், அவரின் தனிப்பட்ட வாழ்வையும் அல்லவா அது பாதிக்

அரசரின் அன்புக் கட்டளைதானே அவர் நாவை அடைத்து வைத்திருக்கிறது, தம் மகளிடம் கூட உண் மையைக் கூற முடியாதபடி?

இது நல்லது தானா?

ஏனோ அவர் உள்ளம் நடுங்கியது.

காவேரியும், மணிமாறனும் பழகும் அந்த விதம், அர்த்தமற்று அவர்களிடையே அடிக்கடி எழும் சிரிப் பொலிகள், என்ன பேசுகிறோம் என்பதைப் புரியாமலே, நேரம்போவது தெரியாமலே அவர்கள் பேசும் அந்தப் பேச்சுக்கள்......அடிக்கடி சந்திக்கும் அந்தச் சந்திப்புக் கள் ...

எல்லாம் எல்லாம், நல்லதிற்குத் தானு?

மன்னனுக்கு இது தெரியுமா? தெரிந்தும் இதைச் சம்மதிக்கிறாரா? அல்லது தெரியாதுபோல் நடிக்கிறாரா? பரணரால் யூகிக்க முடியவில்லை.

காவேரிக்குத்தான் உண்மை தெரியாது; மணிமாறன் அப்படி அல்லவே! தான் யார் என்ற உண்மை அவன் அறியாததா? இதை அறிந்திருந்துமா அவன் ஒரு புலவர் மகளைக் காதலிப்பான்?

பரணரின் சிந்தனை ஒயவில்லை. இப்போது நன்ருக இருட்டிவிட்டிருந்தது. பௌர்ணமி காலத்து முன் நிலா மெல்லத் தலை நீட்டி உலகைப் பார்க்க விரைந்து வந்து கொண்டிருந்தது. பரணருக்கு இப்போது புதுக் கவலை ஒன்றும் சேர்ந்து கொண்டது.

இவர்கள் இருவரையும் எங்கே காணவில்லை?

பரணர் திகிலுடன் குடிலின் தலைவாசலில் நின்று கொண்டிருந்தார்.

மணிமாறனைப் பற்றிப் பேச்செடுத்த உடனேயே ராணியார் உள்ளே விரைந்தது பரணரின் நினைவில் வந்தது.

ஒரு வேளை...ஒரு வேளை... ராணியாரின் விருப்பத் திற்கு விரோதமாக அரசர் தன் மகனை அவரிடம் ஒப் படைத்திருப்பாரோ?

பரணரின் சிந்தனைகளை அப்போது அங்கு எழுந்த குதிரையின் காலடி ஓசை கலைத்தது.

பரணர் ஆவலுடன் காத்திருந்தார். மணிமாறனும், காவேரியும் எங்கோ குதிரையில் போய்விட்டுத் திரும்புகிறார்கள் போலிருக்கிறது.

இனி அவர்களை எச்சரித்து வைக்க வேண்டும்; இது போல் நேரம் கடத்தக் கூடாது என்று.

தமக்குள் தீர்மானித்த பரணர் குதிரையின் மேல் இருந்தவனை உற்றுப் பார்த்தார்.

குதிரை அவர் முன் நின்றது.

குதிரையின்மீது ...? யாரோ ஓர் இளைஞன் கம்பீரமாக வீற்றிருந்தான். பரணரைக் கண்டதும் 'சட்'டெனக் கீழே குதித்தான். பரணர் பிரமிப்புடன் அவனைப் பார்த்தார்.

## 4. வெண்ணிலவின் தண் ஒளியில்...

தம்மைப் பார்த்தவாறு திரும்பி உட்கார்ந்த மணிமாறனை வியப்புடன் பார்த்தாள் காவேரி.

வெள்ளியை உருக்கி வார்த்தது போல் காணப்பட்ட நிலவின் கதிர்களால் நனையப்பட்டிருந்த அவன் அழகிய உருவம் ஒரு வெள்ளிச் சிலையின் கம்பீர உருவமாகத் தோற்றமளித்தது.

வலிமை பொருந்திய அகன்ற அந்த புஜங்களைப் புதுமையாகப் பார்ப்பவளைப் போல் பார்த்தாள் அவள். அவனைச் சுற்றித் தழுவியிருந்த அவள் மென்கரங்கள் ஏனோ நடுங்கின. இதுவரை அவள் அனுபவித்தறியாத பற்பல எண்ணங்களின் வண்ணக் கலவைகள் அவள்

இதயத்தை நிரப்பியதால் அவளே ஒரு வானவில்லின் வர்ணத் தோற்றமாக அமர்ந்திருந்தாள். மணிமாறன் அவளையே இமைக்காது பார்த்தான். வண்டின் கருமை ஒத்த கூந்தல், கயல் போன்ற அழகிய கண்கள், குவளை மலரைப் போன்ற அழகான குவிந்த உதடுகள், செங் காந்தட் பூக்களைப் போன்ற அழகான நீண்ட விரல்களை உடைய கைகள், பிடி இடை, பருவத்தின் செழிப்பு. ''காவேரி!''— என்றான் மணிமாறன் மிக மெதுவாக.

வானத்தின நிலவின் சிரிப்பும், தென்றலின் சுகந்த மான தாலாட்டும், குதிரையின் மிடுக்கான நடையும், நெடிய பாதையின் அந்தத் தனிமையும் அவர்களை எங்கோ அழைத்துச் சென்றன.

அவள் காதிலே கிசுகிசுத்த அவன் சொற்களில் மது வின் மயக்கம் கலந்திருக்குமோ? அவள் கண்கள் சொக்கின. அவள் கரங்களை மெல்லப் பற்றிய வண்ணம்...

''ஏன், உன் கைகள் இப்படி நடுங்குகின்றன காவேரி!''-என்றான் அவன்.

காவேரிக்குச் சிரிப்பு வந்தது.

கைகள் மட்டுமா நடுங்குகின்றன? இதயமே அல்லவா நடுங்குகிறது!

பூகம்பம வந்தால்தான்...பூமி அதிருமா? எண்ணங் களில் எழுச்சி வந்தால் இதயம் கூட அதிரும் போலிருக்கிறதே!

''குளிர்'' — என்றாள் சிரித்தபடியே. அவனை இன்னும் இறுக அணைத்தபடி, ''இப்போது கூடவா?''— என்றான் அவன்.

அவள் பொய்க்கோபம் காட்டி அவனை மெல்ல விலக்கினாள். ''இது பயத்தால் ஏற்பட்ட குளிர்.''

"பயமா? யாரிடம் ..? இப்போது நாம் இருவர் தானே இங்கிருக்கின்றோம்?"

"அதுதான் முக்கியமாக பயத்திற்குக் காரணம்!"

"பயம் யாரிடமோ?

"என்னிடமே தான்!"

"ஏன்?"

"இந்தப் பாழும் இதயம் சிற்சில சமயங்களில் நான் சொன்னபடியே கேட்பதில்லை. கட்டு மீறி, தட்டுக் கெட்டு அலைகிறது."

"பொல்லாத இதயம் போலிருக்கிறதே!"

"என்ன செய்வது?...ச க வ ா ச தோஷம்தான் காரணம்!"

"ஓ! அந்தப் பொல்லாத இதயம் என்ன சொல்கிறது?"

"அடி, பைத்தியக்காரப் பெண்ணே!... ஆண்கள் பொல்லாதவர்களடி; கல்வி கற்றதும் உன்னைவிட்டுப் பிரியப்போகிறான் உன் காதலன். அப்புறம் நீ யாரோ? அவன யாரோ? வழிப்போக்கர்கள் இருவரின் திடீர் சந்திப்புக்குப் பெயர் காதல் என்றால் சுமைதாங்கி கூடப் பல காதலர்களைக் கண்டிருக்குமே-என்கிறது அந்த இதயம்..."

"ஐயோ, பாவம்!......அந்தப் பொல்லாத இதயம் தன்னைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருக்கிறது போலும்! அதனிடம் சொல், உன்னைப் போலவே மற்றவர்களிடமும் இதயம் என்ற ஒன்று இருக்கிறது, என்று. அது இரும்பால் ஆனது அல்ல. சில இதயங்கள் கோயில்களாகக்கூட இருக்கின்றன; அந்தக் கோயில்களில் தெய்வச் சிலைதான்... அதுவும் ஒன்றே ஒன்று தான் இடம் பெறமுடியும். அந்தத் தெய்வச் சிலையின்

பிரதிஷ்டை பல நாட்களுக்கு முன்பே ஆகிவிட்டது என்று சொல்...''

அவளால் தாங்க முடியவில்லை.

''மணிமாறன்!''-என்று விம்மியபடி அவன் அகன்ற தோள்களில் தன் முகம் புதைத்து ஆனந்தக் கண்ணீர் வடித்தாள் அப்பேதை.

''என்னைச் சத்தியமாக ஏமாற்ற மாட்டீர்களே?''— அவள் விம்மியபடியே கேட்டாள்.

''உன்னை ஏமாற்றினுல் என்னை நானே ஏமாற்றிக் கொண்டதாகப் பொருள். நீ என் கண். கண்கள் ஒரே பொருளைத்தான் ஒரே சமயத்தில் பார்க்கும். என் கண்ணுனை உன் பார்வை படுகிற பக்கமெல்லாம்தான் என் கருத்தும் திரும்பும். கண்களில் மாற்றம் இல்லாதபோது காட்சியில் ஏது மாற்றம்?''

காவேரி 'கலகல'வென்று சிரித்தாள் திடீரென.

''அப்பாவிடம் நன்ருகப் பாடம் கேட்டிருக்கிறீர் கள்?''

''பின்னே... குருகுலவாசம் என்ருல் சாமான்யமா?''

''நீங்கள் எப்போது உங்கள் ஊர் செல்ல வேண்டும்? உங்கள் பாடங்கள் எல்லாம் முடிந்துவிட்டதாக அப்பா அன்று கூடச் சொல்லிக் கொண்டிருந்தார்.''

மணிமாறன் சற்றுநேரம் மௌனத்தில் ஆழ்ந்தான். 'என் ஊர்...?' - அவன் வாய் முணுமுணுத்தது.

''ஆமாம்... நான் ஊர் திரும்பும் நாள் நெருங்கி விட்டது. அதற்குள் குரு தக்ஷிணை தந்துவிட்டுத்தான் விடைபெற்றுச் செல்வேன். பிறகு உன்னை வந்து காண்பேன்.''

காவேரியின் கண்கள் நிறைந்தன.

"நீங்கள் மக்கு மாணுக்கராக இருந்திருக்கக் கூடாதா?"

அவன் பரபரப்புடன் கேட்டான்.

"ஏன்? ஏன் அப்படிக் கேட்கிருய்?"

"கெட்டிக்கார மாணவராக இருந்ததால் தானே இவ்வளவு விரைவில் குருகுலவாசத்தை முடித்துவிட்டு ஊர் திரும்புகிறீர்கள்?"

இருவரும் சிரித்தனர்.

அடேயப்பா ... அவன் அங்கு வந்து எத்தனை வருடங்கள் ஆகிவிட்டன? அவனுள் ஒரு ஏக்கப் பெரு மூச்சு எழுந்தது. அப்போது ...?

## 5. அழையா விருந்தாளி

பரணர் தன் முன் நின்றிருந்த அந்தப் புதியவனை வியப்புடன் பார்த்தார்.

"என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்? என்னைப் புரிய வில்லையே என்று கலக்கம் கொள்ள வேண்டாம். ஆதா ரத்துடன் வந்திருக்கிறேன்."

அவன் பேச்சுக்களின் அழுத்தம் பரணரை என்னவோ செய்தது.

"நீ என்னப்பா சொல்கிருய்?" - என்ருர் தடுமாற் றத்துடன்.

"வந்த விருந்தாளிகளை இப்படித்தான் நிறுத்தி வைத்து உபசரிப்பது உங்கள் நாட்டின் வழக்கமோ?"

பரணர் நிதானமாகக் கேட்டார்.

"அப்போது நீ வேற்று நாட்டுக்காரனு?" வந்தவன் ஒரு கணம் திடுக்கிட்டவன்போல் காணப்பட்டான்.

"காவேரி சுகமா?" — என்முன் அவன் திடீரென்று. கேள்வியின் திருப்பத்தை உணர்ந்த பரணர் ஒரு கணம் திடுக்கிட்டார்.

'காவேரியைப் பற்றிக் கேட்கும் இவன் யார்?'

"இனியும் உங்களைத் திகைக்க வைக்கப் போவதில்லை. நான் யார் என்பதை இந்த ஓலை உணர்த்தும். இந்தாருங்கள்."

அவன் தந்த அந்த ஓலையைப் பெற்றுக் கொண்ட போது ஏனே அவர் கரங்கள் நடுங்கின. அந்த ஓலை தந்த அந்தச் செய்தி...?

பரணரின் தேகமே 'கிடுகிடு'வென ஆடியது. நெற்றியில் துளிர்த்த வியர்வையை மேல் துண்டால் துடைத்தபடி திண்ணைமீது அப்படியே அமர்ந்துவிட்டார். "பயப்படாதீர்கள். உங்களுக்கு ஓர் ஆபத்தும் இல்லை, நான் சொன்னபடி கேட்கிறவரை."

பரணரின் அதிர்ச்சி அடங்குவதற்குள், "குடிக்கக் கொஞ்சம் மோர் தாருங்கள். பல காத தூரம் கடந்து வந்திருக்கிறேன்"—என்முன் அவன் மெதுவாக.

தடுமாறியபடி பரணர் எழுந்து உள்ளே சென்முர்.

அவர் தந்த அந்த மோரை அவன் உற்றுப் பார்த்தான்.

"இதில் மயக்க மருந்து ஏதுமில்லையே?"

பரணருக்கு முதன் முறையாக வெறுப்பு பிறந்தது.

"சூது அரசியல்காரர்களின் தனிச் சொத்து. ஏழைக் கவிஞனுக்கு அது தெரியாது"

"ரொம்ப நன்றி."

அவன் ஒரே நொடிக்குள் அந்த மோரைக் குடித்து விட்டுக் காலி கலயத்தைக் கீழே வைத்தான்.

"மணிமாறன் வந்தால்...?"-பரணர் தயங்கினுர். அந்த விருந்தாளி அலட்சியமாகச் சிரித்தான். "அதைப் பற்றியெல்லாம் நீங்கள் கவலைப்பட வேண்டாம். நான் பார்த்துக் கொள்கிறேன். நான் என்ன பேசினுலும் இடையில் குறுக்கிட வேண்டாம். காவேரியை மட்டும் கவனமாகப் பார்த்துக் கொள்ளுங்கள்." பரணரின் உள்ளமே ஆடியது.

'சேரர் பெருமானே!...என்னை மன்னித்து விடு... என்னை மன்னித்து விடு'-என்று மானசீகமாக ஆயிரம் முறை மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

இருவரும் வாசலில் அமர்ந்தபடி மணிமாறன், காவேரி இவர்களின் வரவுக்காகக் காத்திருந்தனர்.

அப்போது...?

தூரத்தில் குளம்பின் ஓசை கேட்கவே இருவர் வதனங்களும் மலர்ந்தன.

ஆனுல்... குதிரை ஏன் இப்படித் தள்ளாடியபடி தாறுமாருய் வருகிறது? நிலவின் ஒளியில் குதிரையின் தத்தளிப்பு நன்குத் தெரிந்தது.

அதன் நடை ஏன் இப்படித் துவளுகிறது?

பரணரால் தாள முடியவில்லை.

ராஜபாட்டையோடு இணையும் அந்த ஒற்றையடிப் பாதை பரணரின் சின்னஞ்சிறு வீட்டைச் சுற்றி இருக்கும் தோட்டத்தை வளைத்துக்கொண்டு செல்கிறது. அந்த ஒற்றையடிப் பாதையின் வழியாகக் குதிரை வரு வதற்குள்...

பரணரே: செடிகளையும், கொடிகளையும் குறுக்காகக் கடந்து கொண்டு தலைதெறிக்க ஓடினார்! அந்தப் புதியவனும் அவரைப் பின் தொடர்ந்தான்.

காவேரி அரும்பாடுபட்டு வளர்த்த அந்தப் பூஞ்செடிகள் மனிதர்களின் காலடிப்பட்டுத் துவண்டன. இதயத்தில்கூட இப்படித்தானோ? அதிலே எத்தனை எத்தனையோ ஆசைக் கனவுகள் என்கிற பூத்துக் குலுங்கும் பூஞ்செடிகள்கூட எதிர்பாராத பேரிடிகள் என்னும் காலடிகள் பட்டுச் சிதைந்து விடுகின்றனவோ? குதிரையால் நடக்க முடியவில்லை.

அது அப்படியே துவண்டு, சுருண்டு பாதி வழியிலேயே வீழ்ந்து விட்டது.

அதன் மேல்...?

அதன் கடிவாளங்களை இறுகப் பற்றிய நிலையில்; குதிரையோடு சேர்த்துக் கட்டப்பட்ட நிலையில் காவேரி மயங்கிக் கிடந்தாள்!

## 6. வழியில் நடந்த மாயம்...?

துவண்டு கிடந்த காவேரியைப் பார்த்தார் பரணர் என்ன செய்வது என்று புரியாத நிலையில்-அவர் விழிகள் நீரைச் சிந்த, இதயம் ஆண்டவனுக்கு அர்ச்சனைகளைப் பொழிய—அவர் அன்பின் மிகுதியால் தடுமாறிப் போனார். 'காவேரி...... உனக்காம்மா இந்தக் கதி? எழுமுடி மார்பன் சேரன் நாட்டிலேயா இந்தக் கொடுமை? வாட்படையே மதிலாகவும், வேற்படையே காவற்காடாகவும், அம்புகள் கூரிய முட்கள் போலவும்-ஆட்சி செலுத்தி வருகின்ற என் சேரர் கோமான் செங்குட்டுவன் ஆட்சியிலேயா பெண்களுக்கு இந்தக் கொடுமை?

உனக்கென்ன ஆயிற்று? உன் உடன் வந்த மணிமாறன் என்னவானுன்? ஐயோ, காவேரி... என் எண்ணத்தின் கருமைதான் உன்னையே அழிக்கப் பார்த்ததோ? கூடாது... கூடாது... கூடவே கூடாது. நான் எதிர்க்க வேண்டும். எதையும் எதிர்க்கும் திடம் எனக்கு வேண்டும்!'

தம் மனத்துள் அவர் புலம்பித் தவித்தார்.

நல்லவேளை, இந்நிலையில் அழையாத அந்தப் புதிய விருந்தாளியின் வரவு ஒரு விதத்தில் நன்மையாகவே இருந்தது.

அவன்தான் 'சர சர'வெனக் காவேரியின் கட்டுகளைத் தளர்த்திஞன்.

அவளைத் தோளில் சுமந்துவந்து வீட்டின் கூடத்தில் கிடத்திஞன்.

ஏதோ சில பச்சிலைச் சாற்றை அவள் மூக்கில் பிழிந்தான். பரணரின் உத்திரவின்றியே அவரின் உக்கிராண அறைக்குள் புகுந்து கஞ்சி காய்ச்சிக் கொண்டு வந்தான்.

இதற்குள்...?

காயம் பட்டுக் காலில் குருதிச் சொட்டக் கிடந்த குதிரையின் காயங்களுக்குக் கட்டுப் போட்டான். அதற்குத் தீனி வைத்து அதை அமைதியாக உறங்கச் செய்துவிட்டு, காவேரியின் அருகில் வந்தான். காவேரிக்கு இப்போது தான் மெல்ல மெல்ல நினைவு திரும்புகிறது போலும்.

அவள் மெல்ல முனகிய வண்ணம் புரண்டாள்.

''காவேரி .. அம்மா, காவேரி'' - என்முர் பரணர் அன்புடன்.

காவேரி மெல்லக் கண் விழித்தாள்.

அப்பாவைப் பார்த்தாள். பக்கத்தில் இருந்த அந்தப் புதியவனைப் பார்த்தாள். அவள் விழிகள் இன்னும் யாரையோ தேடின.

"காவேரி... என்னம்மா நடந்தது? மணிமாறன் எங்கே?" — பாணர் கேட்டார்.

மணிமாறன்!

ஐயோ... அவனைத் தானே அவளும் தேடுகிறாள். என்ன நடந்தது? என்ன நடந்தது?

நினைவுகளைத் திருப்பினாள் அவள். மணிமாறனும், அவளும் குதிரையில் தங்களை மறந்து வந்து கொண்டிருந்த அந்த நேரத்தில்...?

திடீரென எங்கிருந்தோ வந்தனர் நாலைந்து பேர்கள். பேய் வெறியோடு, கையில் ஆயுதங்களோடு அவர்கள் வந்த அந்தக் கணம்...

மணிமாறன் விழித்துக் கொண்டு விட்டான். ஒரு கையால் காவேரியைப் பிடித்தவண்ணம் அந்த நாலு பேர்களுடன் அவன் சண்டையிட்ட அந்த லாவகம், அவன் கற்றிருந்த வித்தைப் பயிற்சிகள் அவளைத் திகைக்க வைத்தன.

ஆனாலும் அவன் தனிமனிதன்!

காயம்பட்ட குதிரை சோர்ந்ததை அவன் உணர்ந்தான். தன்னைவிடக் காவேரியின் பாதுகாப்பு இப்போது அதிமுக்கியமாகப் பட்டது அவனுக்கு.

அவர்களுடன் சண்டையிட்டபடியே காவேரியைக் குதிரையுடன் பிணைத்துக் கட்டினான்.

"என்னைப் பற்றிக் கவலைப்படாதே. நான் எப்படியும் பத்திரமாக வந்து சேருவேன் நீ குதிரையைச்

செலுத்திக் கொண்டு கவனமாய்ப் பார்த்துப் போ. உம்... சிந்திக்க நேரமில்லை. சொன்னபடி செய்.''

அவள் காதுகளில் அவன் முணு முணுத்தான்.

எதைப்பற்றியும் சிந்திக்க முடியாத அவசர நேரம் அது.

அவள் பிரமைப் பிடித்தவள் போல் குதிரையில் அமர்ந்திருந்தாள். வழி உணர்ந்த குதிரை எப்படி வீடு வந்து சேர்ந்ததோ அவளுக்கே தெரியாது!

இடையில் மயங்கிச் சாய்ந்ததுதான் புரிந்தது. ஐயோ — மணிமாறன்! அவன் என்ன ஆனான்?

''என்னம்மா, இப்படிப் பார்க்கிறாய்? என்ன நடந்தது!'' மீண்டும் கேட்டார் பரணர்.

''அப்பா...'' - என்று தேம்பிய காவேரி பைத்தியக் காரி போல் குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

பரணர் ஒன்றும் புரியாது விழித்தார்.

அதே சமயம்...

''ஐயா!... ஐயா!'' - என்று வாசலில் அவசர அழைப்புக் கேட்டது.

அந்தப் புதிய விருந்தாளி வாசலுக்குப் போய் அவனை அழைத்து வந்தான். வந்த அந்தத் தலைப் பாகைக்காரனைப் பார்த்தாளோ, இல்லையோ, காவேரி 'வீல்' என்று கதறியபடி மீண்டும் மூர்ச்சையானாள்.

## 7. அரண்மனை வாசம்

மணிமாறனுக்கு எல்லாமே வியப்பாகவே இருந்தது. சற்று நாழிகைக்கு முன் அவன் சந்தித்த அந்தப் 'போர்க் களம்' எங்கே? இப்போது சந்திக்கின்ற இந்த ராஜோப சாரம் எங்கே? கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது

போலிருந்தது அவனுக்கு. காவேரியைக் குதிரைமீது ஏற்றி அனுப்பிய பிறகு அவன் பயமின்றிப் போரிட்டான. அவன் அந்தச் சண்டையில் காட்டிய வீரம், தந்திரம், புதிய புதிய உத்திகள் எல்லாமே அந்த நால்வரையும் திகைக்க வைத்தன. நால்வரும் அவனிடம் அடி பணிந்தனர். அந்தத் தலைப்பாகை வீரன் மட்டும் சற்று அலட்சியமாகச் சிரித்ததுபோலிருந்தது மணிமாறனுக்கு. அதன் பின்...? குதிரை மீது மணிமாறன் பவனி! மணி மாறன் இப்போதுதான் சேரர் நாட்டையே முதன முதலாகப் பார்ப்பவன் போல் வியப்புடன் பார்த்தான். ஊரின் ஒதுக்குப் புறத்தில் அமைதியின் ஆசிரமமாக விளங்கிய பரணரின் அன்பகத்தைத் தவிர வேறு எதை யுமே கண்டிராத அவன் கண்களுக்கு எல்லாமே புதுமை யாகத் தோன்றின.

'தண் பொருநை சூழ்தரும் வஞ்சியார் சேரமான்' கோட்டைக்கு வெளியே தேவர் கோட்டங்களும், பொது விடங்களும், சைனப் பள்ளிகளும், பொழில்களும், அழகிய பொய்கைகளும் இருந்தன.

தவ முனிவர்களும், கலை வல்லோரும் மிக்க நாடல்லவா? கோட்டையைச் சூழ்ந்த புறக்குடி என்ற புறஞ்சேரியில் அரண் காவல் புரியும் படைகளும், அன்னிய அரசர் தங்கும் அழகு மாளிகைகளும் நிறைந் திருந்தன. கோட்டையைச் சுற்றிப் பெரிய அகழி. இவ்வகழிக்கும், கோட்டைக்கும் இடையில் காவற்காடு ஒன்று இருந்தது. இவ்வாயிலைக் கடந்து செல்லுகையில் கோட்டை வாயில் காப்போர்களும், மீன் வலைஞரும், உப்பு வணிகரும், வாசனைப் பண்டங்கள் விற்போரும் வசிக்கின்ற வீதிகள்... அதை அடுத்து மட்கலம் செய்யும் குயவர்கள், செம்புக் கொட்டிகள், பொற்கொல்லர்கள் வசிக்கும் இடம்.

முச் சந்தி - நாற்சந்தி முதலியன, அருவிகள் பாய்ந் தோடும் அழகிய மலைகள், அறச்சாலைகள், தவப்பள்ளி கள், பௌத்த சைத்தியம் எல்லாமே வஞ்சி தன்னகத்தே கொண்டிருந்தது.

இம்மூதூரின் மத்தியிலே பொன்மயமான, சிறு மேரு மலையைப் போல ஓர் அரண்மனை பிரகாசித்தது. 'நெடுநிலை மேருவிற் கொடிமதின் மூதூர்' — அல்லவா? அந்த அழகிய அரண்மனைக்குள் அந்தாணி மண்டபம், *வேத்தியன் மண்டபம், மணி அரங்குகள் வசந்த காலத் தைக் கொண்டாட இலவந்திகை வெள்ளிமாடம், இவை களைத் தவிர பொய்கைகளாலும், சோலைகளாலும் சூழப் பட்ட வேளாவிக் கோ மாளிகை வேண்மாடம்... எல்லாமே அழகுற அமைந்திருந்தன.

பார்க்கப் பார்க்கச சலிக்கவில்லை மணிமாறனுக்கு. அவனுள் ஏனோ ஓர் ஏக்கப் பெருமூச்சு எழுந்தது. இத்தனையும் துறந்து விட்டா அந்தக் குருகுல வாசம்? எத்தனை ஆண்டுகள் ஓடிவிட்டன?

அந்தப் பிரும்மாண்டமான மாளிகையின் ஒவ்வொரு பகுதியாகச் சுற்றிப் பார்த்துக் கொண்டிருந்தான் அவன்.

திடீரென்று ஏன் இந்த அரண்மனை வாசம்? அதுவும் ஒரு பெரிய போருக்குப் பின்? அவனுக்குப் புரியவில்லை.

அப்போது......?

யாரோ பரபரப்பாக வரும் ஒலி கேட்டது.

"மணிமாறனைப் பத்திரமாக அழைத்து வந்து விட்டீர்கள் அல்லவா?"

"ஆம், தேவி. ஆனால்.. "

வேத்தியன் மண்டபம் - மந்திராலோசனை மண்டபம்.

''என்ன ஆனால்...?''

''எங்களுடன் நீங்கள் அனுப்பிய அந்தத் தலைப் பாகை வீரன்தான் சற்று வம்பு செய்தான். அவனுக்காக மணிமாறனுடன் நாங்கள் அநாவசியமாகப் போரிட நேர்ந்தது.''

''போரா? முட்டாள்... என்ன செய்தீர்கள்?''

ராணியின் குரல் பரபரப்பு காட்டியது.

''மணிமாறனின் வீரத்தை எடை போடலாம் என்றான் அந்தத் தலைப்பாகை.''

''பிறகு...?''

''ஆனால்...நாங்கள் நால்வரும்தான் அந்தச் சிறுவன் முன் தோற்றுப்போனோம். என்ன வீரமாகச் சண்டை யிட்டான் தெரியுமா அவன்?''

ராணி 'கலகல'வென்று நகைப்பது கேட்டது.

''நன்று··· நன்று... நன்றாக வாங்கிக் கட்டிக்கொண் டீர்கள் அல்லவா? அந்தத் தலைப்பாகை வீரன் என் னிடமே எதிர்த்துத்தான் பேசினான். அரசரிடம் சொல் லிக் கண்டித்து வைக்கச் சொல்கிறேன். அவன் இப்போது எங்கே?''

''எங்கோ அவசர வேலை இருப்பதாகச் சொல்லி விட்டுப் போய்விட்டான், தேவி!''

''சரி... சரி; நீங்கள் போகலாம்.''

சம்பாஷணைக்குப் பிறகு ராணி அந்த அறைக்குள் நுழைவதை மணிமாறனால் உணர முடிந்தது. அவன் விழிகள் நிறைந்தன.

உதடுகள் துடித்தன.

கிட்டத்தட்ட இதேபோன்ற உணர்ச்சிகளின் கொந் தளிப்பில்தான் ராணியும் அவனை நெருங்கிக்கொண் டிருந்தாள்.

"அம்மா!"

தாயைப் பிரிந்த கன்றின் அலறல் அமுதமாகப் பாய்ந்தது தேவியின் காதுகளில்.

"என் செல்வமே!"

ராணி ஓடிச் சென்று மணிமாறனைத் தழுவிக் கொண்டாள்.

அவளுக்கு ஒரே வியப்பு.

மணிமாறன் எவ்வளவு வளர்ந்துவிட்டான்!

"மணிமாறு!" - தாய்மைப் பாசத்துடன் கூப்பிட் டாள் தேவி.

"என்னை ஆசீர்வதியுங்கள் தாயே! என் குருகுல வாசம் அநேகமாய் முடிந்துவிட்டது. நான் மீண்டும் இங்கு வரவேண்டிய நேரம் நெருங்கிவிட்டது."

"அதைச் சொல்லத்தான் உன்னை இப்படி இங்கு அழைத்து வரும்படியாயிற்று மணிமாறு. உன்னைப் பல வருடங்களுக்கு முன் சிறுவனுகப் பரணரின் கரங்களில் ஒப்படைத்தது. பார்க்கக்கூடாது என்று மன்னவர் தடுத்து விட்டார். பாசம் உன் பாடத்தைக் கெடுத்து விடுமாம். இனியும் என்னுல் தாள முடியவில்லை. அதனுல் தான் இப்படி அரசருக்கும் தெரியாமல் உன்னை அழைத்துவரச் சொன்னேன். அரசரின் *பெருமங்கல விழா வருகிறது. அதற்குள் வந்துவிடு, மகனே. அதற் காகத்தான்..."

* பெருமங்கல விழா-பிறந்தநாள் விழா.

அரசியார் முடிக்கவில்லை.

"தேவி!... தேவி!"—சேடியின் பரபரப்பான குரல் கேட்டது.

"தேவி!'... மாமன்னர் வருகிறார் "

மகாராணி ஒரு கணம் திகைத்தாள். உடனே தன்னைச் சமாளித்த வண்ணம் அறைக் கதவைச் சாத்திய படி, "இரு, இதோ வருகிறேன்"-என்று மணிமாறனிடம் கூறிவிட்டு வெளியே வந்தாள்.

## 8. தலைப்பாகை வீரன்

காவேரி மீண்டும் மயக்கம் போட்டு விழுந்ததைக் கண்ட பரணர் திடுக்கிட்டார்.

அவர் உள்ளம் உடனே கணக்குப் போட்டது.

வரும் வழியில் ஏதோ ஒரு சம்பவம் நடந்திருக்க வேண்டும். அந்தச் சம்பவத்திற்கும் இந்தத் தலைப்பாகை வீரனுக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கிறது.

இப்படி அவர் உள்ளம் கணக்குப் போட்டாலும் அவர் அமைதியாகக் கேட்டார்.

"யாரப்பா நீ? உனக்கு என்ன வேண்டும்?"

தலைப்பாகை வீரன் அலட்சியமாகப் பேசினான்.

"உங்கள் சீடன் மணிமாறனை உடன் பார்க்க வேண்டும்."

"மணிமாறனா! அவன்... ...அவன் ..."

பரணர் தடுமாறினார். அதற்குள் அந்தப் புதிய விருந்தாளி, "அவன் இப்போது இங்கில்லை. பிறகு வா... பார்க்கலாம்..." என்றான்.

மயங்கிக் கிடந்த காவேரியின் மீதே அவன் கண்கள் லயித்திருந்தன.

"உங்களிடம் ஒரு முக்கியமான செய்தியைச் சொல்லிவிட்டுப் போக வந்தேன். இதோ இந்தப் பெண்ணும் மணிமாறனும் காவிரிக் கரைக்குப் போய்த் திரும்பி வரும் வழியில் மணிமாறன் தாக்கப்பட்டான். யாரோ இனம் தெரியாத சிலரால் அவன் கடத்திக் கொண்டு போகப்பட்டிருக்கிறான். இந்தப் பெண்ணாவது பத்திரமாக வந்து சேர்ந்தாளா என்பதைப் பார்க்கத்தான் வந்தேன்."-செய்தி கேட்ட பரணரும், அந்த வாலிபரும் திகைத்தனர்.

வாலிபன் 'சட்'டென அந்தத் தலைப்பாகை வீரனைப் பிடித்து உலுக்கினான்.

"நீ யார்? உனக்கு எப்படி இது தெரியும்? சொல் ... சொல்!..."

அந்தத் தலைப்பாகை வீரன் அலட்சியமாக அவன் கரங்களைத் தட்டிவிட்டான்.

அந்தக் கரங்களின் திண்மை அந்த வாலிபனை அயர வைத்தது. அந்த வாலிபனை நெருங்கிக் கண்ணோடு கண்ணாக அந்த வீரனை உற்றுப் பார்த்தான்.

"தம்பி!... கெட்டிக்காரனாக இருந்தால் நீயே கண்டுபிடி, நான் யார் என்று? செய்தி தெரிவிக்க வேண்டியது என் கடமை. நான் வருகிறேன்..."

வந்த அதே அவசரத்தில் அந்த வீரன் சென்று மறைந்துவிட்டான்.

பரணருக்கு ஒன்றுமே புரியவில்லை.

ஒரு நொடிப் பொழுதிற்குள் என்னவெல்லாம் நிகழ்ந்துவிட்டன!

கனவா, நினைவா என்று நினைக்கமுடியாத நிலையில் அவர் பிரமித்துப் போயிருந்தார்.

காவேரி மெல்லக் கண் விழித்தாள்.

"அப்பா...அப்பா!"

பரணர் பரபரப்புடன் மகளை நெருங்கினர்.

"என்னம்மா?"

"அந்தத் தலைப்பாகை ஆள் எங்கே அப்பா?"

"போய் விட்டானே, அம்மா."

"ஐயோ!... அவன்தான்-அவன்தான் மணிமாறனை நடுவழியில் தாக்கிப் போரிட்டான். இவனுக்குத்தான் தெரியும் மணிமாறனின் இருப்பிடம். போங்கள், அப்பா... போய் அவனைப் பிடியுங்கள்."

பரணர் திகைப்பின் கடைசி எல்லைக் கோட்டில் நின்றிருந்த அதே சமயம்......

"ஐயா...... ஐயா...... ஓலையைப் படித்தீர்களா?" -என்று அந்தப் புதிய வாலிபன் பரபரத்தான்.

"என்ன...... என்னப்பா சொல்கிறுய் நீ?"

"சற்று முன் உங்களிடம் ஓர் ஓலையைக் காட்டினேனே அது."

மகளைப் பயத்துடன் திரும்பிப் பார்த்தார் பரணர். மணிமாறன் கவலையில் அவள் மூழ்கிக் கிடந்தது புரிந்தது. மெல்ல அந்த வாலிபனை வாசலுக்கு அழைத்து வந்தார்.

"ஏன்...... அந்த ஓலைக்கு என்ன?"

அவன் பரபரத்தான்.

"இடுப்புக் கச்சையில் செருகி இருந்தேன். அதைக் காணவில்லை. ஆ!...... அந்தத் தலைப்பாகைக்காரன் தான் அதை எடுத்திருக்கவேண்டும். என்னிடம் நெருங்கி இரகசியம் பேசுவது போல் நடித்தானே."

பரணருக்கு உலகமே தட்டாமாலை ஆடியது. அவர் மட்டுமே அறிந்திருந்ததாக நினைத்த ஒரு மாபெரும் இரகசியத்தை வந்த வாலிபன் ஓலையில் எழுதிக் காட்டிப் பயமுறுத்தினான். இப்போது... இப்போது அதுவும் பறிபோய் விட்டதா? இன்னும்...... இன்னும் எத்தனை பேர்களுக்கு அது பறைசாற்றப்படுமோ? அந்த இரகசியத்தின் கனம் பரணரை அழுத்தியது.

"இதோ, வருகிறேன்" என்று கூறிய அந்தப் புதிய விருந்தாளி வெளியே பாய்ந்தான்.

சற்று நேரத்தில்......

குதிரையின் குளம்புச் சப்தம் தூரத்தில் கேட்டது. பரணர் சிந்தித்தபடி குடிலுக்குள் நுழைந்தார்.

யார் அந்தத் தலைப்பாகை வீரன்?

தம் எதிரில் நின்ற அந்த ஆளைக் கண்டதும் ராணியின் பயமெல்லாம் சிரிப்பாக மாறியது. மன்னர் வருகிறார் என்றல்லவா சேடி அறிவித்தாள். வந்திருப்பது...?

ஆணவம் பிடித்த தலைப்பாகை வீரன்!

ராணி அமைதியாக ஆசனத்தில் அமர்ந்தாள்.

"ஓ!... நீயா? ரொம்பக் கெட்டிக்காரன். மணிமாறனைப் பத்திரமாக அழைத்துவா என்றால் போரிட அழைத்தாயாமே!"

அவன் பேசவில்லை.

"ஏய்!... என்ன திமிர் உனக்கு? அரசரிடம் சொல்லி என்ன செய்கிறேன் பார்!..."

அவன் அலட்சியமாகச் சிரித்தான்.

"நீங்கள் அரசரிடம் சொல்வது இருக்கட்டும். அரசரே உங்களைக் கண்காணிக்கத்தானே என்னை ஏற்பாடு செய்திருக்கிருர்!"

ராணியின் தேகமெல்லாம் 'குப்' பென வியர்த்தது.

"அப்படியானுல்......"

"ஆம், தேவி... அரசர் பின்னுல் வந்துகொண்டிருக்கிருர். உங்களை முன்னுல் எச்சரிக்க நான வந்தேன். மணிமாறன் இங்கிருப்பது தெரிந்தால்..."

ராணி அவசரமாகக் குறுக்கிட்டாள்.

"வேண்டாம்... வேண்டாம்... தயவுசெய்து அரசரிடம் சொல்லிவிடாதே!..."

"சொல்லமாட்டேன்... ஆனுல் ஒரு நிபந்தனை. நீங்கள் எனக்கு வாக்குத் தரவேண்டும்."

"என்ன?"

"நான் கூறப்போகும் செய்தி கேட்டு அதிர்ச்சி அடையக் கூடாது. ஆயாசம் கொள்ளக் கூடாது. மனதைத் திடப்படுத்திக் கொள்ளுங்கள்."

"சொல்... நான் வேளிர் குலத்தைச் சேர்ந்தவள். திடம் எங்களுக்கே உரியது."

"ஆனுல், நான் கூறப்போகும் இந்தச் செய்தி யாரையும் கலக்கி விடும்."

"சுற்றி வளைக்காதே... விஷயத்தைச் சொல்."

ங்கள்..."

அவன் தன் இடுப்புக் கச்சையிலிருந்து ஓலை ஒன்றினை எடுத்தான்.

"இதைப் படியுங்கள்; எல்லாம் புரியும்."

அலட்சியமாக அதை வாங்கிய ராணி, படிக்க ஆரம்பித்தாள். அவள் புருவங்கள் நெறிந்தன; கண்கள் நிறைந்தன. ஆவேசமும், ஆத்திரமும், அழுகையும் கலந்தோட, வண்ணக் கலவையாக அவள் தோற்றமளித்தாள்.

"நிஜம்தானா? இது... இது... பரணரா இப்படி? ஐயோ, என்னால் நம்ப முடியவில்லையே!...... நான்..." —அவள் புலம்பினாள்.

அவன் பத்திரமாக அந்த ஓலையை வாங்கிக் கொண்டான்.

"எக்காரணம் கொண்டும் மாமன்னரிடம் இதைக் கூறிவிடாதீர்கள். அவர் தாளமாட்டார்."

"என்னாலேயே முடியவில்லையே."—அவள் அரற்றினாள். மகாராணி பச்சைக் குழந்தைபோல் தேம்பினாள்.

"நீ... நீதான் எனக்கு உதவ வேண்டும். என்..."

"உஸ்"—அவளை எச்சரித்தான் அவன்.

"எதையும் தெரிந்து கொண்டதுபோல் காட்டிக் கொள்ளாதீர்கள். நான் துணை நிற்கிறேன். நேரமாகிறது. மன்னர் வருவதற்குள் விடைபெறுகிறேன்."

அவன் அவசரமாகப் போய்விட்டான்.

அந்த ஓலை தந்த அதிர்ச்சியிலிருந்து இன்னும் அவளால் மீள முடியவில்லை.

அப்படியும் இருக்குமோ?

பரணர்... பரணர்...

அவளுள் ஒருபுறம் கோபமும், ஆத்திரமும் கலந்து பொங்கின.

அவள் மெதுவாக மணிமாறன் இருந்த அறைக்குள் நுழைந்தாள்.

அறையில்...!

மணிமாறன் இல்லை!

மணிமாறனை எங்கும் காணவில்லை!

ராணி உப்பரிகைக்கு ஓடிச்சென்று பார்த்தாள். இரவு வெகு யாமம் ஆகி இருந்தது. முன்நிலவு காலமாதலால் எங்கும் இருள் பரவி இருந்தது. ஒரு பெருமூச்சுடன் ராணி தன் அறைக்குள் நுழைந்தாள்.

அலங்கார ஆசனத்தில், தாயும் சேயும் அணைத்தபடி காட்சியளித்த ஓர் அழகிய சிற்பம் இடம் பெற்றிருந்தது. அதனையே கண்களில் நீர் மல்கப் பார்த்தாள் ராணி.

## 9. காவேரியின் தனிமை

கிளி 'கீ கீ'-என்று கத்தியது. மான் ஓடோடி வந்து அவள் அருகில் உரசியபடி நின்றது. பூத்துக் குலுங்கிக் கிடந்த தோட்டம் அவளைப் பார்த்து மோனப் புன்னகைச் செய்து நின்றது.

ஆனால் அவளோ... இதில் எதிலும் சம்பந்தப்படாதவளாய்க் கண்களில் நீர்வழிய நின்றிருந்தாள்.

அவள் காவேரிதானா? அதே துள்ளலும் சலசலப்பும் மிகுந்த காவேரிதானா? அவள் துள்ளல் எங்கே போய்ப் பதுங்கியது? அந்தக் கலகலப்பும் சிரிப்பும் எங்கே போய்க் களை இழந்தன? மணிமாறனின் திடீர் மறைவு அவளை

மட்டும்தானா தனிமையாக்கியது? இதோ, பைத்தியம் பிடித்த நிலையில் வீற்றிருக்கும் இந்தப் பரணரையும் அல்லவா செயலிழக்கச் செய்து விட்டது!

தன் துன்பத்தை மெல்ல விழுங்கிய பரணர் மகள் காவேரியை அன்புடன் பார்த்தார்.

விதி என்னவெல்லாம் திருவிளையாடல் புரிய நினைத்திருக்கிறதோ? அவரால் ஒரு பெருமூச்சுதான் விட முடிந்தது.

''அம்மா, காவேரி... இப்படிப் பைத்தியம் பிடித்தவள்போல் தோட்டத்தையே சுற்றிக் கொண்டிருந்தால் எப்படியம்மா? மணிமாறன் கண்டிப்பாக வந்து விடுவான். உள்ளே வாம்மா...''

மணிமாறன் போனபின் அவள் சாப்பிடவேயில்லை. ஏதோ பழம், பால் இவைகளை மட்டும் உட்கொண்டு சன்யாசினி வாழ்க்கை நடத்தி வருகிறாள்.

காவேரி கோபமாகத் தந்தையைப் பார்த்தாள்.

''இப்படித்தான் நீங்களும் சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள் நானும் கேட்டுக் கொண்டிருக்கிறேன். மணிமாறன் என்ன பச்சைக் குழந்தையா, வழி தெரியாமல் தவிக்க? அவருக்கு ஓர் ஆபத்தும் இல்லை என்றால் அன்றே வந்திருப்பாரே! யாரோ அவரைச் சிறைப் பிடித்து வைத்திருக்கிறார்கள். உங்களுக்கு என்ன நிம்மதியாய்க் கவிதை எழுதுங்கள்; இயற்கையைப் பற்றி வர்ணியுங்கள்; நாங்கள் எங்கேயோ கெட்டுப்போகிறோம்.''

விரக்தியின் மிகுதியில் பேசும் தம் அன்பு மகளை வேதனையுடன் பார்த்தார் பரணர். மணிமாறனோடு தன்னையும் சேர்த்துக்கொண்டு 'நாங்கள்' என்று பிரிக்கும்

அளவுக்கு அவர்களின் காதல் வலுப்பெற்றுக் கிடந்ததை எண்ணி வியந்தார். ஆனால், 'உங்களுக்கென்ன?' என்கிறாளே காவேரி. அவர் எத்தகைய ' இக்கட்டில்' சிக்கி இருக்கிறார் என்பதை அவள் அறிவாளா? அல்லது... அதை அறிவிக்கத்தான் முடியுமா?

மன்னர் மகனை மணிமாறனைப் பத்திரமாக அரசருடன் சேர்ப்பிக்க வேண்டிய மகத்தான பொறுப்பு ஒருபுறமிருக்க, மணிமாறனையே இழந்து தவிக்கும் அவர் நிலை...? இதை அரசரிடம் கூறி உதவிபெறலாம் என்று நினைத்தாலோ...?

அந்தப் புதியவன்... அவன் பெயர் திருக்கண்ணனாம்... அவன் வேறு ஒருபக்கம் பயமுறுத்துகிறான்.

என்ன செய்வது என்றே புரியவில்லை பரணருக்கு. அன்று வெகுநேரம் கழித்துத் திரும்பிவந்த திருக் கண்ணன் என்ன கேட்டான்?

"மணிமாறனைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். அவனே திரும்பிவிடுவான். மணிமாறனை அரசர் இங்கு அனுப்பிவிட்ட பிறகு இடையில் எப்போதாவது பார்த் திருக்கிறாரா?"-என்று கேட்டான்...

"இல்லை... குருகுலவாசம் என்று அவன் இங்கு வந்ததிலிருந்து இதுவரை அரசர் அவனைப் பார்க்கவே இல்லை."

"மணிமாறனை வேறு யாரும் பார்த்ததில்லையே?"

"பார்த்ததில்லை... காவேரியைத் தவிர...

இதன் பிறகு திருக்கண்ணன் போய்விட்டான்.

இன்று... மணிமாறன் சென்றுபோன இத்தனை நாட்களுக்குப் பின் அரசரிடமிருந்து ஓலை... அல்ல, ஆணை வந்திருக்கிறது.

மனவேதனையால் அரசவைப் பக்கமே போகாமலி ருந்து விட்டார் பரணர்.

அரசரின் ஆணை...

''மணிமாறனின் குருகுலவாசம் முடிந்திருக்கும் என நினைக்கிறேன். அவனை இளவரசனுகப் பிரகடனப்படுத்த வேண்டிய சமயம் வந்துவிட்டது. எனது பிறந்தநாள் விழா வருகிறது. அன்று குருதக்ஷிணை தங்கள் இல்லம் தேடிப் பல்லக்கில் வரும். அதே பல்லக்கில் நீங்களும், மணிமாறனும் அரண்மனை வரவேண்டும்.''

பரணர் வெலவெலத்துப் போய்விட்டார்.

இதெல்லாம் காவேரி அறிவாளா? அவர் உள்ளக் குமுறல், அவர் சிக்கிய அந்தக் 'கண்ணி' அவளுக்குப் புரியுமா? தன் துன்பமே பெரிதென நினைக்கிருள். அரசர் ஆணைக்கு என்ன பதில் தருவது?

திருக்கண்ணன் சொல்கிறபடி கேட்கவேண்டிய நிலை அவர் நிலை.

அவன் என்ன சொல்லப்போகிருன்?

அரசரின் பெருமங்கல விழாவிற்கு இன்னும் இரண்டொரு நாட்களே இருந்தன.

ஊரெல்லாம் மாவிலைத் தோரணங்களும், பூப்பந்தல் களுமாக அலங்கரிக்கப்பட்டு வருகிறது.

அந்த நாள் பெருமையான ஒரு நாள். மகிழ்ச்சிக் குரிய நாள்.

சேரர்பிரான் பட்டத்துயானை மீது பவனிவந்து, கருணைக்கு அறிகுறியாக மங்கல வண்ணமாகிய வெள்ளணி அணிந்து சிறைப்பட்டவர்களை எல்லாம் விடுவிக்கும் புனித நாள்.

தாம் சிறைப்பட்டதைப் போல் பரணர் துன்பப் பட்டார்.

பிறந்த நாள் விழா நெருங்க நெருங்க...

பரணரின் சிந்தனையைக் குதிரைகளின் குளம்படி ஓசை தகர்த்தெறிந்தது. சிந்தனைகளிலிருந்து விடுபட்ட பரணர் நிமிர்ந்தார்.

வந்தது...? திருக்கண்ணனும் இன்னொரு வாலிபனும். அன்னியர்களைக் கண்ட காவேரி உள்ளே ஓடிப்போய் பதுங்கிக்கொண்டாள்.

மணிமாறனைப் பற்றி ஏதாவது செய்தி வருமா வருமா?-என அவள் காத்திருந்த நம்பிக்கையின் நாட்கள் இப்போது மெல்லத் தேய்ந்து நிராசையாகி விட்டன.

அவள் உள்ளே போயே போய்விட்டாள்.

திருக்கண்ணனைக் கண்ட பரணரின் கண்கள் மலர்ந்தன. வந்தவர்களை வரவேற்று அமரச் செய்தார்.

திருக்கண்ணனைத் தனிமையில் அழைத்துத் தம் நெருக்கடி நிலையைக் கூறினார்.

அலட்சியமாகச் சிரித்தான் திருக்கண்ணன்.

"எதற்காக இங்கு வந்திருக்கிறேன் என்று நினைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? உங்கள் சிரமங்களைக் குறைப் பதற்காகத்தான். மணிமாறன் வந்துவிட்டானே, பார்க்கவில்லை?"

பரணர் பரபரத்தார். "மணிமாறனா? எங்கே? எங்கே?"

திருக்கண்ணன் இரைந்து சிரித்தான்.

நல்ல அப்பாவிப் புலவரய்யா, நீர். அழைத்து வந் திருப்பது மணிமாறனைத்தான். தெரியவில்லை?"

திகிலினுல் ஓரடி பின் நகர்ந்தார் பரணர். தவறு ஒன்றை மறைக்க இன்னெரு தவறு? இப்படியே போய்க் கொண்டிருந்தால் இதன் முடிவு…?

அவர் நினைக்கத் நினைக்க அவனே தன் திட்டங் களைச் சுவாரசியமாகக் கூறிக்கொண்டிருந்தான்.

பரணருக்கு வேறுவழி தோன்றவில்லை அவன் திட்டங்களுக்கு ஒத்துழைப்பதைத் தவிர வேறு புகல் புரியவில்லை.

திருக்கண்ணனும், அந்த வாலிபனும் போய் வெகு நேரம் ஆகும்வரைகூட அவருக்குத் தன் சுய உணர்வு திரும்பவில்லை.

பிறகு…? மெதுவாகக் காவேரியிடம் வந்தார்.

அவள்…?

திரைச்சீலை ஒன்றில் மணிமாறனின் ஓவியத்தை வரைந்து கொண்டிருந்தாள். கடந்த சில நாட்களாக அவள் ஈடுபட்டிருக்கும் முயற்சிதான் இது.

ஏனே இன்று பரணர் இந்த ஓவியத்தை ஏக்கத் துடன் பார்த்தார்.

இந்த ஓவியம்…? அதன் இடத்தில் இன்னென்றை நிறுத்திப் பார்த்துக்கொண்டார்.

கண்கள் நிறைந்தன. இதயமோ இரகசியங்களைச் சுமந்து சுமந்து கனத்தது.

"காவேரி!…"

ஓவியத்தில் மூழ்கிக் கிடந்த காவேரி திடுக்கிட்டுத் திரும்பினுள்.

"என்னப்பா?"

"காவேரி... உனக்கொரு மாற்றம் தேவை என்று நினைக்கிறேன். காவேரி... இப்படியே இருந்தால் மணி மாறனை நினைத்து நினைத்து உனக்குப் பைத்தியம் பிடித்துவிடும். உன்னைப் பார்த்துப் பார்த்து எனக்கும் பைத்தியம் பிடித்துவிடும். வெளியூர் போகிருயா, அம்மா?"

திருக்கண்ணனின் திட்டத்தின் முதல்படி இது. மணிமாறன் இளவரசனுக இராஜசபையில் பிரகடனப் படுத்தப்படும்போது அவனை இனம் கண்டுகொள்ள யாருமே கிடையாது, காவேரியைத் தவிர. அதற்காக... அதற்காகத்தான் காவேரி இப்போது கடத்தப்படுகிருள்.

தந்தையின் பேச்சைக் கேட்ட காவேரி மெல்லச் சிரித்தாள்.

"எங்கப்பா, போவது? காவிரியில் போய் மூழ்கி விடட்டுமா?"

பரணர் துடித்துப் போய்விட்டார்.

"காவேரி!...செந்தழலாகப் பிரகாசிக்கும் இரும்புக் குழம்பின் சூட்டைப்பற்றி உனக்குத் தெரியாது. அந்தச் சூடு ஆறியதும் அது கறுத்துப்போகும், அந்தக் குணமும் உனக்குப் புரியாது."

காவேரிக்குக்கூட வேதனையாகத்தான் இருந்தது. தன் வேதனைக்குத் தகப்பனர் என்ன செய்வார்? துன்பத்தில் பங்குகொண்டு துடித்துக் கொண்டிருக்கிருரே, அது போதாதா?

"சொல்லுங்கள் அப்பா..." என்ருள் மெதுவாக. மகளின் கூந்தலை மெதுவாக வருடினர் பரணர்.

"காவேரி... என் உயிரினும் இனிய நண்பர் கபிலரை நீ அறிவாய். பறம்புமலையின் தலைவனை வள்ளல் பாரி

யின் அன்பினுக்கு, உகந்த புலவர். அவரும் என்னைப் பலமுறை தம் இருப்பிடம் வரச் சொல்லி அழைப்பு அனுப்பி இருக்கிறார். என்னால்தான் முடியவில்லை; உன்னையாவது தக்க துணையுடன் அனுப்பி வைக்கிறேன். போய் வா, காவேரி.''

காவேரியின் உள்ளத்தில் கூட ஆசை அரும்பியது. வள்ளல் பாரியின் ஈகை பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாள். முல்லைக்குத் தேர் தந்த மன்னவன் அல்லவா? 'கான மயிலுக்குக் கலிங்கம் கொடுத்த பேகனும், முல்லைத் தேர் தந்த பாரியும்' இன்னும் இது போன்ற வள்ளல்கள் நிறைந்த நாட்டில் நாமும் இருக்கிறோம் என்கிற பெருமிதம் சற்றே தலை தூக்கியது.

பாரியின் அழகு மகளிர், ஆடலிலும் பாடலிலும் வல்லவர்களாமே; அதையும் காணும் பேறு தனக்குக் கிட்டும் என்பதை நினைத்தபோது அவளுக்குச் சற்று கவலை மறந்தது.

தன் வேதனைகளை மறக்கவாவது இப்படி ஒரு மாற்றம் தேவை என்பதை அவளும் உணர்ந்தாள்.

''சரியப்பா போகிறேன்... அரசரின் பிறந்த நாள் விழா முடியட்டுமே. அதற்குள் இந்த ஓவியமும் முடிவடைந்துவிடும்.''

அவசரமாகக் குறுக்கிட்டார் பரணர்.

''இல்லையம்மா......... நாளைக் காலையே நீ கிளம்ப வேண்டும். துணை நாளையே கிளம்புகிறது.''

தந்தையின் திடீர் பரபரப்பு காவேரியை வியப்பில் ஆழ்த்தியது. 'வர வர அப்பா ஏனிப்படி படபடப்பாக பேசுகிறார்?' தனக்குள் சிந்தனையில் மூழ்கியவளாய் ஓவியத்தைப் பார்த்தாள் அவள்.

"அந்த ஓவியத்தையும் கையிலேயே எடுத்துக்கொள் ளேன் அம்மா. பொழுது போகாத நேரத்தில் ஓவியம் தீட்டலாம்." அந்த ஓவியமே அவருக்கு எதிராகச் சாட்சி யாயிருக்கப் போகிறது என்பதை அவர் அப்போது உணரவில்லை. காவேரி மெல்ல ஓவியத்தைச் சுருட்டினுள்; ஒவ்வொரு தேவைப் பொருளாகப் பார்த்துச் சேகரித்த வண்ணம் மெல்லப் பயண முயற்சிகளில் இறங்கினுள்.

பரணர் பெருமூச்சு விட்டபடி மகளின் செய்கைகளைக் கவனித்துக் கொண்டிருந்தார்.

அதே சமயம்... இவர்களின் ஒவ்வொரு செய்கையை யும் இருளில் மறைந்தபடி ஓர் உருவம் பார்த்துக் கொண்டிருந்தது!

## 10. பெருமங்கல விழா

பெருமங்கல விழா. ஊரே திரண்டு மாமன்னருக்கு விழா எடுக்கும் புண்ணிய நாள். வில், கயல், புலி —இவற்றை இலச்சனைகளாகக் கொண்ட சேரன், ஐம் பெருங்குழுவும், எண் பேராயமும், புடைசூழ அரசியலைச் செவ்வனே நடத்தும் கரும வினைஞரும், கணக்கியல் வினைஞரும், தந்திர வினைஞரும் ஆன அரசன்— சேரன் செங்குட்டுவன், குடவர் கோமான், எரி கதிரோன் வழி மருகன், புலவர் பாடும் புகழுடை சேரன் களிற்றின் மீது ஏறி பவனி வருகிறுன். காலை முரசம் வெற்றி முழக்கம் செய்யச் சிவபிரான் திருவடிகளைத் தொழுதுவிட்டு, அந்த ணர் வளர்த்த அக்கினி கோத்திரங்களை வணங்கிவிட்டு, இதோ புறப்பட்டு விட்டான்.

"மா மன்னர் வாழ்க! வஞ்சிச் சேரமான் வாழ்க!" -என்கிற கோஷங்கள் வானைப் பிளக்கின்றன.

கொங்கண நாட்டுக் கூத்தர்களும், கொடுங் கரு நாடர்களும் தம் தம் குலத்திற்கேற்ற கோலங்களுடன் அழகு வாய்ந்த தம் தம் அன்பு மனைவியாருடன் வசந்த காலத்திற்குரிய வரிப் பாடலைப் பாடுகின்றனர். குடகு நாட்டவர்கள் தம் தம் மகளிருடன் கார் காலத்தைப் பற்றிய குரவைப் பாடல்களைப் பாடுகின்றனர். ஆங் காங்கே கொற்றவைக் கூத்துக்களும் நிகழ்கின்றன, மா மன்னரின் நலம் கோரி.

அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நிற்கும் மாமன்னவன் மெல்ல மெல்ல பவனி வருகிருன்.

'பால் புளித்தாலும், ஞாயிறு ஒளியிழந்து இருண்டா லும், நான்கு வேதங்களும் ஒழுக்கம் வேறு பட்டாலும் நீ உன் சுற்றத்துடன் நிலையாகப் பொருந்துவாயாக' -என்று புலவர் உள்ளங்கள் எல்லாம் மனதார வாழ்த்தி மகிழ்கின்றன.

மா மன்னன் நாட்டின் எல்லா நலமிக்க காட்சிகளை யும் கண்டு களித்தவாறே அதோ அதோ பவனி வருகிருன்.

சேர மறவர்கள் நறுமண அரும்பு, நெல், தென்னை, பனை, ஈந்து முதலியவற்றிலிருந்து எடுக்கப்பட்ட கள்ளைப் பருகியபின், வஞ்சியின் எழில் மிகுந்த பொழில்களில் கலையங்களைப் போட்டுச் சென்று விடுகின்றனர். அப்படிச் சிதறிக் கிடந்த கள்ளின் துளிகள் எல்லாம் களிறுகளின் கால்களில் பட்டு மண்ணும், கள்ளும் சேர்ந்த புதிய சேருகி அவை பளபளக்கின்றன. சூலுண்ட நெற்கதிர்களால் நிறைந்த வயல்கள், 'மன்னன் எவ்வழி அவ்வழி மக்கள்'— என்பது போன்ற மக்கள்...

மன்னனின் மனம் பெருமிதத்தால் விம்முகிறது. அதே சமயம் பரணரும் தனக்குள் பொருமுகிறார். இந்த நிகழ்ச்சிகளை எல்லாம் காணக் காவேரி இல்லையே என்கிற ஏக்கம், இன்னும் பாக்கி இருக்கின்ற நிகழ்ச்சிகள் எப்படி நடக்கப் போகின்றனவோ என்கிற தயக்கம்... மன்னரின் இப் பிறந்தநாள் விழாவை இதற்குமுன் காவேரி பலமுறை கண்டு களித்திருக்கிறாள் என்பது உண்மையானாலும், இவ்வருடம் ஏனோ அது முக்கியத்து வம் வாய்ந்ததாக அவருக்குத் தோன்றியது.

அரசவைக் கொலுமண்டபத்தில் அமர்ந்திருக்கும் மா மன்னரை வாழ்த்திப் பாடியபோது தன் குரல் ஏன் இப்படி நடுங்குகிறது என்று அவருக்கே புதுமையாக இருந்தது.

தைரியம் ஊட்ட அருகில் திருக்கண்ணன் நின்றிருந் தாலும் இனம் புரியாத தயக்கம் புலவருக்கு. குற்ற உணர்வு உள்ளத்தை உறுத்த மா மன்னரை நிமிர்ந்து பார்க்க முடியாத பாரம் கண்களை அழுத்தியது. அதோ ...அதோ... மா மன்னரின் அருகில் போடப்பட்டிருக்கும் ஆசனத்தில் அமர்ந்திருக்கிறாரே ஒரு யோகி!

ராஜபாரத்தைத் துச்சமாக மதித்து இளமையி லேயே தவக்கோலம் பூண்டிருக்கிறாரே ராஜரிஷி இளங்கோ! 'கருவிலே திருவுடைய' கற்பகத் தரு இளங்கோவடிகள்! அவரின் கால் தூசிக்கு யார் இணை என்று அந்த நேரத்தில் பரணரின் மனம் ஏனோ விசித் திரக் கணக்குப் போட்டது.

அந்த அமைதியும், சலனமற்றிருக்கும் அவ் விழி களின் கூர்மையும்; 'பிறவிப் பெருங்கடலைப்' பயமின்றி நீந்திக் கடந்துவிட்ட மாயவனோ இவன் என்ற மலைப்பை ஏற்படுத்துகிறது.

'மலரடி சேர்ந்து, மாண்மிசை' - ஏகிய வள்ளலோ? பரணர் கண்களை மூடிக் கொண்டார்.

அப்போது... மா மன்னரின் குரல் கம்பீரமாக ஒலித்தது.

"என் அன்பிற்குரிய பிரஜைகளே ...! இன்று ஒரு முக்கியமான நாள். உங்களுக்கு மட்டுமல்ல; எனக்கும் தான். இதுவரை நீங்கள் யாருமே அறியாத ஒரு விசித்திர ரகசியத்தைக் கூறப் போகிறேன்."

இப்போது...... அவர் நடிக்க வேண்டிய நேரம் நெருங்கி விட்டது. பக்கத்திலே திரும்பிப் பார்த்தார். திருக்கண்ணன் நிச்சிந்தையாக இருந்தான்.

மணிமாறன் வேடத்தில் ஒரு புதியவன்! பரணர் தன் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டார்.

மன்னர் இன்னும் பேச ஏதோ வாயெடுத்த அதே சமயம்...

யாரோ இருவர் பரபரப்பாக உள்ளே நுழைவது தெரிந்தது.

பரணர் உற்றுப் பார்த்தார். வந்த இருவரில் ஒருவரை அவருக்கு நன்ருகத் தெரியும். அந்த ஒருவர்...?

மலையமான் திருமுடிக்காரி. உறையூர் சோழனின் சேனுதிபதி. திருக்கோவலூரின் சிற்றரசர்.

செங்குட்டுவனின் அம்மானுகிய * நெடுங்கிள்ளி இறந்ததும் அவன் மகனுகிய பெருநற்கிள்ளி பட்டமடைந்தபோது இந்த மலையமானிடம்தான் பெருநற்கிள்ளியைப் பார்த்துக் கொள்ளும் பொறுப்பைச் சேரன்

நெடுங்கிள்ளி:— இவன்தான் காரியாற்றுத் துஞ்சிய நெடுங்கிள்ளி என்று பாடப் பெற்றவன்.

ஒப்புவித்திருந்தான். இன்று மலையமான் பரபரப்புடன் வரக் காரணம் என்ன ...?

சேரனுக்கும் இதே கவலை பிறந்திருக்க வேண்டும். "வருக......வருக" என்று ஆசனத்திலிருந்து எழுந்து அவர்களை வரவேற்ற மன்னன் அவர்கள் இத்தனை அவசரம் காட்டியதற்குக் காரணம் கேட்டபோது...

மலையமான் கூறிய அந்தச் செய்தி...? பட்டமடைந்த இளவரசனான பெருநற்கிள்ளிக்கு விரோதமாக அவன் தாயாதிகள்-சோழன் ஒன்பதின்மர் கிளம்பி இருக்கிறார்களாம். தோற்றுப் போன பெருநற்கிள்ளி தன் தாயாதிகளுக்குப் பயந்து தன் தந்தையின் நண்பனான மலையமானின் முள்ளூர் மலையில் வந்து ஒளிந்திருக்கிறானும்.

மலையமான் சேரனிடம் உதவி பெற வந்திருக்கிறான். செய்தி கேட்ட சேரனின் தோள்கள் தினவெடுத்தன. வீரம் அவன் பரம்பரைச் சொத்து. சற்று நாட்கள் போர் முரசின் ஒலி கேளாதிருந்த அவன் செவிகளில் இச் செய்தி அமுதமாகப் பாய்ந்தது. அப்போதே போருக்குக் கிளம்பத் தயாராகிவிட்டான் அவன்.

"இன்றே போருக்குத் தேவையான ஏற்பாடுகள் நடக்கட்டும். போர் முரசு முழங்கட்டும். வீரர்களே, உங்கள் வாள்களுக்குச் சாணை பிடிக்க நல்ல சந்தர்ப்பம். இன்றே * நாட்கோள் நாட்டி விடுங்கள்"-என்று கர்ஜித்தான் மன்னவன்.

* நாட்கோள்:— பரஸ்தானம் செய்வது. தன் வெற்றி வாளையும், கொற்றக் குடையையும் யானை மீதேற்றிக் கோட்டைக்கு முதலில் அனுப்பி வைப்பது.

அந்த அரண்மனைக் கொலுமண்டபத்தில் திடீ ரென்று பரபரப்பு ஏற்பட்டது.

புதிய போர்ச் செய்தி கிடைத்த மகிழ்வில் வீரர் கள் பெருமிதம் கொண்டனர்.

''இன்றே நல்ல நாள்''-என்று அனைவரும் ஒருமித்த மனத்துடன் கூறினர். ஆயினும் மா மன்னரின் பிறந்த நாளெனும் பெரிய நாளானதால் அன்று மன்னரை யாரும் வெளியே கிளம்ப அநுமதிக்கவில்லை.

வீரர்கள் பம்பரங்களாகச் சுற்றி வந்தனர்.

வாட்களின் ஓசையும், ஈட்டிகளின் ஓசையும் தூரத் தில் கேட்டன.

அப்போதே, அங்கேயே போர் வந்துவிட்டதைப் போன்ற பரபரப்பை மக்கள் காட்டியதைக் கண்டு மன்னவனும் மகிழ்ந்தான்.

பரணர் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டார். இந்தப் போரின் புதிய ஓசையில் அவர் இதயத்தின் சலனம் அமுங்கிப் போய்விட்டது!

அதுவும் நல்லதுதான்.

''சேரர் கோமான் வாழ்க!'' ''பெருநற்கிள்ளி வாழ்க!'' ''மலையமான் திருமுடிக்காரி வாழ்க!'' - என்ற கோஷங்கள் விண் அதிர ஒலித்தன.

# 1. உள்ளக் கமலம்

கதிரவன் கீழ்த்திசையில் சிவப்பு வண்ண விளக்கைப் பொருந்திக் கொண்டிருந்தான்.

ஒளியின் நிறம் சிவப்பு!

'அன்பின் நிறம் சிவப்பு. இதயத்தில் ஞான விளக்கேற்றி அன்பெனும் அமுததாரை ஊற்றி, தினம் தினம் ஒளிமயமாக வைத்துக்கொள்' என்கிருஞ?

பின் எங்கிருந்து வருகிறது இந்த அறியாமை இருட்டு? அறியாமைக்கு அருகே அறிவு இருப்பதால் அறிவுச் சுடரின் தனித்தன்மை புரிகிறதோ?

அதோ... அதோ... உழவர் மகளிர்.

தாழை உடையையும், மலர் மாலையையும் அணிந்து கொண்டு கள்ளுண்டு களித்து நிற்கும் அந்த மங்கையர் கூட்டம், பறவைகள் தம் வயலுக்கு வந்து பயிர்களுக்குத் தீங்கு செய்யாதிருக்க வேண்டும் என்பதற்காக அவைகளை ஓட்டிக் கொண்டிருக்கின்றனர். அவர்களின் இனிய குரலோசையைக் கேட்ட கவின் மிக்க மயில்கள், தம்மைத்தான் அவர்கள் துரத்துகிருர்கள் என்பதையும் மறந்து அந்த இனிய பண்பிற்கு ஏற்ப இன்ப நடனமாடுகின்றன. அதன் வண்ண வண்ணத் தோகைகளில்தான் எத்தனை அழகு! ஆண்டவன் அமைத்த வண்ணங்கள் எவ்வளவு அழகாய்ப் பொருந்துகின்றன!

அதோ! சேறு பொருந்திய வயல்களில் சிக்கிய வண்டிகளின் சக்கரங்களை மீட்பதற்காக எருதுகளை வெருட்டும் உழவரின் பேரொலி! ஓ... அது அழகான ஓர்

போர் ஒலி! 'போர்' என்றதுமே ஏனோ அமராவதியின் தேகம் நடுங்கியது. ஓய்ந்து கிடந்த நாடு மீண்டும் போர் முழக்கத்தைத் துவக்கி விட்டதே!

'முறை செய்து காக்கும் மன்னவன் மக்களுக்கு இறை' -என்று பொய்யாமொழியார் கூறியுள்ளார். இந்த மன்னவர்கள் முறை செய்கிறார்களா? அல்லது போர் முரசு செய்கிறார்களா? அமராவதி தனக்குள் மெல்லச் சிரித்துக்கொண்டாள்.

அதோ! அவ்வளவு அவசரமாக வருவது?

காவேரி!

அமராவதியின் மனம் ஒரு முறை எங்கோ பறந்து விட்டுத் திரும்பியது. பைத்தியக்காரப் பெண்! அவள் வந்த நேரம் சரியில்லை. பாரி மகளிரைக் காணவேண்டும் என்று துடித்தாள். தந்தையின் பிரிவால் கண்ணீர் வடித்துக் கதறித் துடிக்கும் அந்தப் பெண்களைத்தான் அவளால் காணமுடிந்தது.

"அற்றைத் திங்கள் அவ்வெண்ணிலவில் எம் தந்தையும் உடையோம்; குன்றும் பிறர் கொள்ளார்"-என்று சோக கீதம் பாடிய பாரி மகளிரின் வேதனை இலேசில் போகக் கூடியதா? அன்பு நண்பரின் இழப்பு அப்பாவையும் அரைப் பிணமாக்கி விட்டது.

வௌவால்கள் எங்கே பழுத்த மரங்கள் இருக்கின்றன என்பதைத் தேடிப் பறப்பதைப் போல் அன்பையும் பண்பையும் தேடிப் பறந்த கபிலர் பாரியின் பண்புக்கு அடிமையானார்.

ஆனால்... ஆனால்... விதி செய்த சதி...?

"பாரி என்னை அன்புடன் வணங்கியபோதெல்லாம் 'வாழ்க வாழ்க' என வாழ்த்துரைத்தேனே... 'பொய்யா

நாவிற் கபிலர்'-என்ற என் பெயரின் மாண்பே மங்கிப் போய்விட்டதே'' என்று அன்று அவர் கதறிய கதறல்!

அமராவதியின் மெய்சிலிர்த்தது.

அமராவதி...... காவேரி...

இருபெரும் புலவர்களின் அன்பு மக்கள்!

இந்த ஒரே ஒற்றுமைதாஞ இவர்களிடையே?

பரபரப்புடன் வந்த காவேரி அமராவதியைப் பார்த்துச் சற்றே நின்ருள்.

''என்ன காவேரி இவ்வளவு அவசரம்?''

ஒருகணம் நிதானித்த காவேரி அமராவதியை மெல்ல நிமிர்ந்து பார்த்தாள்.

கபிலர் மகள், காவேரியின் அன்புத் தோழி ஆகி விட்டவள்! காவேரி இங்குவந்து எத்தனை மாதங்களாகி விட்டன? அப்பாவைப்பற்றி ஒரு தகவலும் தெரியவில்லை. நினைத்தால் குதிரை மீதேறி துள்ளிக் குதித்துப் பல காதம் பறக்கும் அதே காவேரிதாஞ இவள்?

இவள் சுறுசுறுப்பும், மகிழ்வும் எங்குபோய்ப் பதுங்கின? துணையெனும் பக்கபலம் சிதைந்ததால் ஏற்பட்ட விளைவோ? இத்தனை நாட்களாக முடங்கிக் கிடந்தவளுக்கு இன்று ஏன் பரபரப்பு பிறந்தது?

''அமராவதி... நான் இப்போதே ஊர் திரும்ப வேண்டும்.''

அமராவதி ஒருகணம் திடுக்கிட்டாள்.

''என்ன சொல்கிருய்? இப்போதேவா? இந்நிலையிலா? உனக்குத் துணை?''

காவேரி அலட்சியமாகச் சிரித்தாள்.

மணிமாறனுடன் அவள் கழித்த அந்த இனிமையான நாட்கள்...? நிலவின் குளுமையில் மூங்கி மூங்கிக் குளித்த தினங்கள்?

"எனக்கு ஒரே ஒரு குதிரை இருந்தால் போதும்."

அமராவதி சற்று யோசிப்பது போல் தோன்றினாள்.

"காவேரி... நானும் குதிரை ஏறிப் பழக்கப் பட்டவள் தான். ஆனால் இப்போது துணையின்றிப் போவது சரியல்ல. இப்போது எங்கு பார்த்தாலும் போர் முரசு ஒலிக்கிறது. பாரியின் பறம்பு மலை போரின் நாசத்தால் நலிந்தது உனக்குத் தெரியாதா? மேலும் உறையூர் சோழனுக்கும், புகார் சோழனுக்கும் இடையே போர். அண்ணன், தம்பிகளுக்குள் பூசல். இந்நிலையில் எதிர் படும் ஒவ்வொரு மனிதனையும் அரசு சந்தேகக் கண் கொண்டுதான் பார்க்கும். அப்பாவும் மனமுடைந்து கிடக்கும் இந்த நேரத்திலே உன்னை நான் தனியாக அனுப்பமாட்டேன்..."

காவேரி சற்று யோசித்தாள்.

அமராவதியின் கூற்றிலும் உண்மை இருப்பது புரியத்தான் செய்தது. ஆனாலும் அவள் உள்ளம் அப்போதே தன் வீடு திரும்ப ஏனோ விழைந்தது.

சற்றுமுன் அவள் கேட்டது?

காலை நேர இளங்காற்றின் சிலிர்ப்பில் சற்று காலார உலாவி வரலாம் என்று கிளம்பியவள் அந்தக் குளத்தின் கரையில் கவிந்த தாமரை மலர்களின் அழகில் தன்னை மறந்து லயித்துக் கிடந்தாள்.

இந்த மூடிய மலர்கள் சற்று நேரத்தில் கதிரவனின் அன்புக் கரம் பட்டதும் மலர்ந்துவிடும்.

ஆனால், அவள் உள்ளக் கமலம் மட்டும் மலராமலே ஏன் இப்படி வாடிக் கிடக்கிறது? அதை மலர வைக்கும் கதிரவன் எங்கேபோய் ஒளிந்தான்? அவள் தனக்குள் மூழ்கிக் கிடந்தபோதுதான் மரத்தின் மறைவில் அமர்ந்த படி இருவழிப் போக்கர்களின் பேச்சுக்களைக் கேட்க நேரிட்டது. அவர்கள் என்ன பேசிக் கொண்டார்கள்?

பரணரிடம் குருகுலவாசம் செய்ததுதான் சேரன் செங்குட்டுவனின் அருமை மகன் குட்டுவன் சேரனுமே! சேர நாட்டின் இளவரசனு மணிமாறன்?

அவளுக்கு ஒரே புதிராக இருந்தது. அதே சமயம் புரியாத சில திரைகள் விலகுவது போலும் இருந்தது.

அப்போதே ஓடிப்போய் அப்பாவிடம் விபரம் கேட்க ஆசை துடியாய் துடித்தது.

மணிமாறன் இளவரசன்! காவேரி கேவலம் ஒரு புலவர் மகள்! இந்த உறவு சாத்தியமாகுமா? எங்கோ ஒளி வீசும் கதிரவன்? எங்கோ மலரக் காத்திருக்கும் கமலம்!

நெஞ்சை ஏதோ வந்தடைப்பது போல் இருந்தது அவளுக்கு.

இதை... இதை எப்படி அமராவதியிடம் சொல்வது? அதுவும் அவளுக்கே சரியான விபரம் தெரியாதபோது? காவேரி மௌனமானாள்.

அமராவதி தன் தோழியை அன்புடன் தழுவிக் கொண்டாள். "காவேரி...உன் மனம் சரியில்லை. வா, வீட்டிற்குப் போகலாம்..."

"இல்லை அமராவதி. நீ போ நான் மெல்ல வருகிறேன்."

அமராவதி வற்புறுத்தவில்லை. அவள் தனி வழியே மெல்ல நடக்க ஆரம்பித்தாள். காவேரியின் உருவம் மெல்ல மெல்ல சிறுத்துக் கொண்டே வந்தது.

அப்போது...?

எங்கிருந்தோ பாய்ந்து வந்தது ஒரு குதிரை... அது வந்த வேகத்தைக் கண்டு திடுக்கிட்ட அமராவதி 'சட்'டென விலகினாள். ஆனாலும் குதிரை அவள் கால்களை இடறி விட்டுவிட்டு கன வேகமாகப் பறந்தது. "வீல்" - எனக் கத்தியபடி கீழே சாய்ந்தாள் அமராவதி.

## 2. வண்டலாட்டு

பெண்கள் வண்டலாட்டு விளையாட்டு விளையாடிக் கொண்டிருந்தனர். வண்டலில் பாவை சமைத்து அதற்குப் பூச்சூடி மகிழ்ந்து கொண்டிருந்தனர்.

குறிஞ்சி நிலத்து வண்டுகள் அப்பெண்டிரின் கூந்தலின் மணத்தைக் கண்டு மயங்கி அவர்களின் காதுகள் அருகே குறிஞ்சிப் பண்ணைப் பாடியவண்ணம் வட்டமிட்டுக்கொண்டிருந்தன.

சற்றுத் தொலைவில் குளக்கரையருகே உயர்ந்து வளர்ந்து நிற்கும் பெரிய மருத மரங்கள். குளத்தின் பக்கமாகத் தாழ்ந்த அழகிய பெரிய கிளைகள் குளத்தை முத்தமிடத் துடித்துக் கொண்டிருந்தன அந்தத் தாழ்ந்த கிளைகளின் வழியே செல்லும் இளைஞர்கள் திடீர் திடீரென நீருள் குதிப்பதால் ஏற்பட்ட ஒலி.

நீரினுள் புகுந்து அடி மணலை அள்ளிக் கொண்டு வரும் இளைஞர்களின் ஆரவார ஒலி.

இதையெல்லாம் உணராத காவேரி எங்கோ பார்த்த வண்ணம் இருந்தாள்.

அவள் அருகே?

அமராவதி அங்கும் இங்கும் பார்த்தபடி தவிப்புடன் இருப்பது காவேரிக்குப் புரிந்தது.

அவள் வண்டலாட்டில் ஈடுபட்டிருந்தாலும் அவள் மனம் அதில் லயிக்கவில்லை என்பதைக் காவேரி உணர்ந்தாள்.

அமராவதி வரவர ஏன் இப்படிப் புதிராய் மாறி வருகிறாள்?

அன்று...

வெகு நேரம் கழித்துக் காவேரி வீடு திரும்பியபோது அமராவதியின் நெற்றியின் கட்டைக் கண்டு துடி துடித்துப் போனாள். கீழே விழுந்து விட்டதாகச் சொன்னாள் அமராவதி. அதன் பிறகுதான் இந்த மாற்றம்? அமராவதியின் நெற்றியில் மட்டும்தான் அடி பட்டதா? நெஞ்சில் பட்டிருப்பது என்ன?

காவேரிக்கு இப்போது தன் பிரச்னை மறைந்து தோழியின் பிரச்னை விரிந்தது. அமராவதி எதையோ மறைக்கிறாள்? காவேரியிடம் மட்டுமல்ல, தன் அன்புத் தந்தை கபிலரிடமும் தான்!

அன்று கபிலர் யாரிடமோ பேசிக் கொண்டிருந்ததைத் தற்செயலாகக் கேட்க நேரிட்டது காவேரி.

'நீரினும் இனிய சாயல் பாரி'யின் பிரிவு தன்னை வதைக்கிறது என்றும், பாரி மகளிர் இருவருக்கும் ஒரு வழி வகுத்தபின்-அமராவதியின் எதிர்காலத்திற்கும் ஒரு வழி செய்த பிறகு பாரியின் நினைவால் தான் 'வடக்கிருந்து' உயிர் துறக்கப் போவதாக அறிவித்தாரே?

இதைக் கேட்டுவிட்ட காவேரி உடனடியாகத் தன் தோழியிடம் இதைப் பற்றிச் சொல்லவேண்டுமென விரைந்தபோதுதான் அவள்... அவள் யாருடனே இரகசியமாகப் பேசிக் கொண்டிருப்பதைக் கண்டாள்! அவன் யார்?

அது மட்டுமா? இன்னெருநாள் தன் தனி இருப்பிடத்தில் எதையோ உற்று உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தாள் அமராவதி. அது என்னவாக இருக்கும்?

கள்ளி! இருக்கட்டும் இருக்கட்டும்... அவள் அறியாமல் அவள் இரகசியங்களை அறிந்து அவளிடமே தெரிவிக்கவேண்டும். காவேரிக்கு இப்போது ஊர் திரும்பும் ஆசையைவிட அமராவதியின் இதயப் பெட்டகத்தின் கருவறையைத் திறந்து அதன் இரகசியக் கதவுகளை உடைத்தெறியவேண்டும் என்கிற ஆசைதான் அதிகமாகியது.

மணிமாறனைப் பற்றி எண்ணும்போதெல்லாம் 'மணிமாறனுக்கு என்ன ஆகி இருக்குமோ?' - என்ற முன்பிருந்த பயம் இப்போது சற்று விலகி இருந்தது.

மன்னன் மகனல்லவா? அவனுக்கு ஓர் ஆபத்தும் நேராது. ஆனல், இந்த மன்னவன் மகனுக்கும் அவளுக்கும் உறவு ஏற்பட முடியுமா? தன்னைத்தான் ஏமாற்றிக்கொள்ள அவள் விரும்பவில்லை. ஆனல் ஏதோ ஒன்று தன்னை ஏமாற்றிக் கொண்டிருக்கிறது என்பதையும் அவள் உணராமல் இல்லை.

எண்ணங்களின் வண்ணக் கலவைகளில் தன்னை மறந்திருந்த காவேரி அப்போதுதான் கவனித்தாள். அமராவதி எங்கே? அந்தப் பெண்கள் கூட்டத்தில் அமராவதியைக் காணவில்லை!

கள்ளி! கெட்டிக்காரத்தனமாய்த்தான் ஏமாற்றி விட்டுப் போய் இருக்கிறுள்.

காவேரி அவசரமாகக் கரை ஏறினுள். சற்றுத் தொலேவில்... கோவிலின் முன்னே...

குறிஞ்சி நிலத்தில் வெறியாடும் பூசாரி கையில் வேலேப்பிடித்தபடி வெறிஆட்டு ஆடிக்கொண்டிருந் தான்.

கழற்சிக் காய்களே வைத்து நிமித்தம் பார்த்து, கேட்பவர்களுக்குச் சொல்லிக் கொண்டிருந்தான்.

அவன் குறியில் கூட்டம் மயங்கி நின்றது. அவன் அந்த வெறியாட்டம் ஆடும்போது அவன் சூடி இருந்த காந்தட்பூக்கள் அவனேச் சுற்றிச் சிதறிக் கிடந்தன. காவேரி அவனே நெருங்கினுள்.

"பெண்ணே..."

அந்த வெறியாட்டுக்காரன் அழைத்தான்.

வெலவெலத்துப்போன காவேரி அவன் முன் போய் நின்ருள்.

அவன் சிரித்தான்! ஒரு பேய்ச் சிரிப்புச் சிரித்தான்.

"பைத்தியக்காரப் பெண்ணே! நீ நினைத்தது எதுவும் நடக்கப் போவதில்லே! நீ நம்பி இருந்த ஒருவன் உன்னேக் கைவிட்டுப் போய்விட்டான். இனி அவன் உனக்குக் கிடைக்கமாட்டான்.... கிடைக்கமாட்டான்."

காவேரிக்குத் தலே சுற்றியது. பூசாரி மட்டுமா சிரித்தான்? சுற்றி இருந்த கூட்டம் அவளேப் பார்த்து ஏன் இப்படிப் பேய்ச் சிரிப்பு சிரிக்கிறது?

அவன் அவளுக்கு ஆசி வழங்குகிருனு?

இந்தக் குறிஞ்சி நிலம் காதலர் கூடுவதற்கு ஏற்ற நிலம் என்பார்களே! இதில்... இதில் வந்து இவன் ஏன் சாபம் தருகிறான்?

அவள் நம்பிய அவன் யார்? கேள்விகள் ஆயிரமாயிரம் வளையங்களாக அவள் இதயத்தைச் சுற்றி வளைத்துக் கொண்டன!

தள்ளாடியபடி அவள் நடந்தாள். ஏன் இப்படிப் பாதை நீளுகின்றது? ஏன் இப்படிக் கண்கள் நிறைகின்றன? ஏன் இதயம் ஒரு சுமையாய்க் கனக்கிறது? பாரத்தை இறக்கிவைக்க சுமைதாங்கி... சுமைதாங்கி இருக்கிறதா?

அதோ... அதோ...

ஒரு குதிரை. தன்னந்தனியே தனிவழியில் நிற்கிறது!

திடீரென ஒரு உற்சாகம் பிறந்தது காவேரிக்கு...

அவள் வெகு நாட்களாக எதிர்பார்த்திருந்த நல்ல தருணம். யார் குதிரையாக இருந்தாலும் கவலை இல்லை. அவளுக்குத் தேவை ஒரு குதிரை. அன்பைப் பகிர்ந்து கொள்ள ஒரு இதயம்.

முன்னதின் உதவியால் பின்னதை அடைந்து விடலாம்.

காவேரி அவசரமாக அந்தக் குதிரையை நோக்கி ஓடினாள்.

குதிரை கட்டப்பட்டிருந்த அந்த மரத்தின் மறைவில் அதென்ன பேச்சுக் குரல்!

காவேரி நிதானித்தாள்.

# 3. காதல் எனும் தீச் சுடர்

நதி பாய்ந்து வருகிறது; பெருக்கெடுத்தோடி வருகிறது; புதுப் புனல் பொங்கும் பூரிப்புடன் வருகிறது.

குறிஞ்சி நிலத்து மூங்கில்களில் விளைந்த முத்துக்களை அள்ளிக் கொண்டு வருகிறது. முல்லை நிலத்துப் புத்தம் புது மலர்களைச் சூடிக்கொண்டு வருகிறது. தன்னை முத்தாலும், மலராலும் அலங்கரித்துக் கொண்ட ஒரு பெண் எத்தனை அழகுடன், எத்தனை மகிழ்வுடன் இருப்பாளோ அந்த மகிழ்வின் பூரண பூரிப்பும் அந்த நதியிடம் காணப்படுகிறது. உடம்பெல்லாம் முத்துக்கள் ஒளிர்கின்றன. கூந்தலிலே வண்ண வண்ணப் பூக்கள்.

இத்தனை அலங்காரங்களுடன் அது யாரைக் காண விழைகிறது? ஓ! கடலரசனுடன் இரண்டறக் கலக்கத் தான் ஓடுகிறதோ? இடையில் இன்னொரு கிளை நதி வருகிறது. இதே துள்ளல்! இதே பூரிப்பு! அதுவும் அதே கடலரசனுடன்தான் கலக்கத்தன்னை அலங்கரித்துக் கொண்டு ஓடோடி வருகிறதோ? அவனுக்கு எத்தனை காதலிகள்! அனைத்தையும் தன்னுள் ஐக்கியப்படுத்திக் கொண்டு அவன் எத்தனை ஆழமானவனாகக் காட்சி தருகிறான்? காவேரி ஒரு கணம் தன்னை மறந்து நின்றாள். மரத்தின் மறைவில் அவள் நின்றிருந்தாலும் அப்புறம் இருந்து பேசியவர்களின் இதயம் மறைபடவில்லை. அமராவதியின் குரல் அவளுக்குத் தெரியாததல்ல!

ஆனால் 'அந்த'க் குரல்! அவள் உணர்ந்த அதே குரல்! அவள் ரஸித்துச் சுவைத்த அதே குரல்!

அந்தக் குரல் மட்டும்தானு? அதன் வாசகங்கள்! தண் நிலவின் அமுத தாரை, குதிரையின் குளம்படிச் சப்தம், பழைய இனிய நினைவுகள்!

காவேரி தன்னை நிதானப்படுத்திக் கொண்டாள். மணிமாறனுக்கு ஏதும் ஆபத்தில்லை என்பதை அறிந்த போது இதயம் மகிழ்ந்தாலும், அவன் தன்னை ஏன் இப்படி ஏமாற்றவேண்டும் என்பதை எண்ணிப் பார்த்த போது அதே இதயத்தின் கருவறைக் கதவுகள் மெல்ல மெல்ல மூடிக்கொள்வது போன்ற பிரமை!

மொத்தத்தில் பெண்களே பைத்தியக்காரர்கள் தாம்! ஆணினத்தின் காலடிபட்டு நசுங்கித் தேய்ந்து நாசமாகப் போவதற்கென்றே படைக்கப்பட்டவர்கள்.

அமராவதியின் சிரிப்பொலி கேட்டது. காவேரி கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

அமராவதி சிரிக்கிருள். நன்ருகச் சிரிக்கட்டும். சிரிக்கமாட்டாளா, பின்னே?

அவள் காதலன் என்ன சாமான்யப்பட்டவனு! சேரநாட்டின் இளவரசன் அல்லவா?

காவேரி காதலித்தபோது ..? அவன் சாதாரண மானவன்! அந்த அன்புக்காக மட்டும் காதலித்தாள்!

இப்போது அந்த அன்பின் தரமும் உயர்ந்திருக் கிறதே! ஆமாம்... சேரநாட்டு இளவரசராக முடிசூட் டிக்கொள்ள வேண்டிய மணிமாறன் இந்தப் பறம்பு மலைப்* பகுதிக்கு வந்து ஏன் அலைய வேண்டும்?

---

* பறம்பு மலை- தற்போதுபிரான் மலை என்று வழங்கப் படுகிறது. காரைக்குடிக்கு 12 மைல் தூரத்தில், திருப்பத் தூருக்கு அருகில் உள்ளது. இன்றும் அங்கே பாரி விழா நடக்கிறது.

காவேரிக்குச் சற்றுக் குழப்பமாக இருந்தது மணி மாறனைச் சுற்றி ஒரு மர்மம் படர்ந்திருக்குமோ?

காவேரி சற்று நிதானமடைந்தாள். ஊர் திரும்புவதைவிட இப்போது அவளுக்கு ஒரு புதிய பொறுப்பு வந்திருக்கிறது. அமராவதியையும், மணிமாறனையும் அவர்கள் அறியாமல் கண்காணிக்கும் பொறுப்பு.

காவேரி யோசித்துக் கொண்டிருந்தாள். அதே சமயம்... தூரத்தே குளம்பின் ஓசை கேட்டது.

அவர்கள் இருவரின் கவனமும் அந்தக் குதிரையின் பக்கம் திரும்பியபோது காவேரி மெல்லத் தன் மறைவிடத்திலிருந்து வந்து எட்டிப் பார்த்தாள்.

மணிமாறன்! அவன் மிக அருகில் அமராவதி!

அந்தப் பெரிய மரத்தின் அருகே வளர்ந்திருந்த பவள மல்லிகைச் செடியின் கீழே அந்த இணைந்த இருவர்! பவள மல்லிகையின் வாழ்த்தாக அவ்வப்போது உதிரும் வெள்ளைப் பூக்கள்... அதன் நட்ட நடுவில் அழகின் தெறிப்பாய் .. குவிந்த உதடுகள் போல் தெரியும் அந்தச் சிவப்புக் காம்புகள்.

மனத்தை மயக்கும் மணம்... பெண்மைகூட இப்படித்தானோ? அன்பெனும் வெண்மை, காதல் எனும் தீச் சுடரின் சிவப்பு, தியாகம் என்ற மயக்கும் மணம்... இந்த இணைப்புக்கள்தாம் பெண்மையோ?

உயர்ந்திருந்த பவள மல்லிகைச் செடி தன் அருகில் கீழே தாழ்ந்து படர்ந்திருந்த சின்னஞ் சிறிய செடிகளின் மீது இரக்கம் காட்டி, அந்தக் காய்ந்த செடிகளின் அமங்கலத்தைப் போக்குவதற்காகத் தன் அழகிய மலர்களை அவற்றின் மீது வாரி இறைத்து அன்பு மழை பொழிந்

திருந்தது. பட்டுக் கிடந்த அந்தச் சின்னஞ் சிறு செடிகளின் வெறுமைக்குள் வண்ணக் கோலம் காட்டியது பவள மல்லிகை மலர்கள்! காவேரி தன் நினைவுகளை மீட்ட போது குதிரைச் சப்தம் வெகு அருகில் கேட்டது. அதன் மீது அமர்ந்திருந்தவன்...? ஆம்! அதே தலைப்பாகை வீரன்!

காவேரி அவசரமாக மறைவிடத்தில் பதுங்கினாள்.

## 4. வழித்துணை

ஓலையும், எழுத்தாணியுமாக அமர்ந்திருந்தாள் காவேரி. ஓலை ஒன்று வரையவேண்டும். அதுவும் அவள் தந்தைக்கு அதைச் சரியான ஆள்வசம் அனுப்ப வேண்டும். எப்படி? பின்னதைப் பிறகு பார்த்துக்கொள்ளலாம். முதலில் ஓலை வரைய வேண்டும்.

கடந்த சில நாட்களாக அவள் ஈடுபட்டிருந்த ஒற்று வேலையில் அவள் அறிந்த சில உண்மைகள், மறைந்து கிடக்கும் சில மர்மங்கள் எல்லாவற்றையும் விவரமாக எழுதி உடனே பரணரை இங்கு வரவழைக்க வேண்டும்···

வருவாரா? கட்டாயம் வரத்தான் வருவார்.

மணிமாறன்தான் இளவரசன் என்பது அப்பாவிற்குத் தெரியாமல் போயிருக்காது. கட்டாயம் தெரிந்திருக்கும். மணிமாறனைக் காணவில்லை என்றதும் அப்பா துடித்த துடிப்பு···?

தன் சீடன் என்பதற்காக மட்டும்தான் அவர் அப்படித் துடித்திருப்பாரோ? கிடையவே கிடையாது.

இளவரசனைப் பாதுகாப்பது எப்படிப்பட்ட பயங்கரமான செயல்!

அப்பா தோற்றுப் போய்விட்டார். அதனுல் விளைந்த குழப்பத்தில்தான் அப்படித் திணறி இருக்கிருர். அதன் உதவிக்குத்தான் யார் யாரையோ துணை தேடி இருக்கிருர்.

ஆமாம் ... இதை அவளிடம் சொல்லாமல் மறைத்த மர்மம் என்ன? ஐயோ, அசட்டு அப்பா! நீங்கள் கோட்டைவிட்ட மணிமாறன் என் கரங்களில் ... என் கண்களில் சிக்கி இருக்கிருன்! எது எப்படி இருந்தாலும் மணிமாறன் கிடைத்துவிட்டான். அவனை அரசரிடம் ஒப்படைப்பது அவள் கடமை. தந்தை செய்யத் தவறிய அந்தக் கடமையை அவள் நிறைவேற்ற வேண்டும்.

ஆமாம் ... இந்த மணிமாறன் சேரநாடுதிரும்பாத காரணம் என்ன? ஒருவேளை அவனுக்கே தான் யார் என்பது தெரியாதோ? அல்லது தெரிந்தும் அரசபாரத் தில் ஓர் அலட்சியமோ? அரசைத் துறந்த சிற்றப்பா இளங்கோ அடிகளைப்போல் சன்னியாசியாகப் போகும் ஆசையோ?

சன்னியாசியாம் சன்னியாசி ... அதுதான் ஒருத் திக்கு இரண்டு பேராகப் பார்த்துக் காதலிக்கப் பழகிக் கொள்கிருரோ?

காவேரியின் கண்களை நீர் நிறைத்தது. அமராவதி ... அழகானவள். அறிவுடையவள். அவள் உள்ளத் திலும் பெண்மைக்குரிய எண்ணங்கள், அபிலாஷைகள் இருக்கும். அதைக் காவேரி ஏன் தடுக்க வேண்டும்?

ஒருவேளை ... ஒருவேளை அரியணை ஏறும் அருகதை அமராவதிக்கு இருக்கலாம்.

காவேரி அசட்டுப் பெண் ... அப்படி அசட்டுப் பெண்ணுகவே இருந்துவிட்டுப் போகட்டும்! அவள் வாழ்

வின் சரிதை. அவள் தன் அன்புத் தந்தையின் அருமைச் சீடன் மணிமாறனைத்தான் அன்றும் காதலித்தாள் ... ஏன்? இன்றும் காதலிக்கிறாள்.

புதிய உறவுகள் தோன்றிக் கொண்டே இருக்கும். அவை அப்படியே மறைந்தும் போகும். ஆனால் இதயத்தின் ஆழத்தில் புதைத்துவிட்ட ... புதைந்து போன எண்ணமெனும் கோபுரம் இலேசில் இடியக்கூடியதா? காலம் மாறினாலும், யுகங்கள் மறைந்தாலும் அவை இதயமெனும் பூமியின் கர்ப்பத்தில் புதைந்து புதுத்தலை முறைகளுக்கும் புதிய புதிய செய்திகள் சொல்லும் சரித்திரப் பொக்கிஷங்களாகத் திகழும்!

மணிமாறனும் அமராவதியும் அடிக்கடி சந்திக்கிறார்கள். அவர்கள் சந்திப்பு... அவர்கள் காதலுக்காகச் செலவிடும் நேரத்தைவிட ஏதோ அபூர்வ இரகசியம் சிலவற்றை பகிர்ந்து கொள்வதற்காகச் செலவிடும் நேரம்தான் அதிகமாக இருக்கிறது.

அவர்களின் மென்மையான நேரத்தின் பெரும் பகுதியைப் பிடித்துக் கொண்டிருக்கும் அந்த இரகசியம் என்னவாக இருக்கும்?

காவேரியால் இதை யூகிக்க முடியவில்லை.

அன்று ... இந்தத் தலைப்பாகை வீரன் வந்ததும் அவனிடம் மணிமாறன் ஏதோ சொன்னதும், அவன் மறைந்த பிறகு அமராவதியிடம் அவன் ஏதோ கூறியதும் அதைக்கேட்ட அமராவதி "ஆ"- வென பிரமித்து நின்றதும் மறக்க முடியாத நினைவுகள்!

அந்தத் தலைப்பாகை வீரனுக்கும் மணிமாறனுக்கும் என்ன உறவு?

"என்ன காவேரி, யோசனை?"-வந்தது அமராவதிதான்.

'சட்'டென காவேரி தன்னைச் சமாளித்துக்கொள்ள முயன்றாள். ஆனால் அந்த ஓலையையும், எழுத்தாணியை யும் அவளால் மறைக்க முடியவில்லை.

' அட... என்ன செய்கிறாய்?''

காவேரி அமராவதியை நிமிர்ந்து பார்த்தாள். தோழிகள் இருவரும் ஒரே வீட்டில் இருந்தால்கூட அவர்களின் சந்திப்பு இப்போது அபூர்வமாகிவிட்டது. காவேரியைத் தவிர்த்துக்கொண்டு மணிமாறனைச் சந்திக் கும் பரபரப்பு அமராவதிக்கு.

அவர்கள் இருவருக்கும் தெரியாமல் அவர்களை 'வேவு' பார்க்கும் பதட்டம் காவேரிக்கு. இருவர் உள் ளத்தின் கள்ளமும் இருவரையும் ஒரு கணம் தடுமாற வைத்தது.

''புலவர் மகள் அல்லவா? கவிதை எழுதுகிறாயா?'' அமராவதியின் கேள்வி ஒரு கணம் காவேரியை விழிப் படையச் செய்தது.

கவிதை! ஆ... அப்படிச் செய்தால் என்ன? தந்தை யிடம் பயின்ற இலக்கியப் பயிற்சியின் உதவியால் இரு பொருள்படும்படியான சிலேடைக் கவிதை ஒன்றினை எழுதி அதைத் தந்தையிடம் சேர்ப்பித்துவிட்டால் என்ன?

தந்தை புரிந்து கொள்வார். சாதாரணமாகப் படிப் பவர்களுக்குப் புரியாது. அமராவதி கபிலர் மகளாக இருந்தாலும் தன் வாழ்வின் பெரும் பகுதியைத் தன் அத்தை வீட்டிலேயே கழித்தவள். அத்தையின் மரணத் திற்குப் பிறகுதான் தந்தையிடம் வந்திருப்பவள்.

அவளால் இலக்கியத்தை ரசிக்கத்தான் தெரியும். அதன் சிலேடையை அதன் உட்பொருளை அறிய முடி யாது. காவேரியின் உள்ளம் மகிழ்ச்சியால் துள்ளியது.

''என்ன காவேரி, அடிக்கடி சிந்தனையில் மூழ்கு கிறாய்?'' அமராவதியின் குறும்பான கேள்வி.

காவேரியின் மெல்லிய புன்முறுவலுடன் வந்த கேள்வி... ''நான் மட்டும் தானா?''

தோழிகள் இருவரும் மனம் விட்டுச் சிரித்தனர்.

''காவேரி... உனக்கொரு மகிழ்வான செய்தி...''

''சொல்... உனக்கு ஏதாவது மணவிழா நிச்சயம் ஆகி இருக்கிறதா? அதுதான் எனக்கு மகிழ்வு தரும் செய்தி.''

''என் மணவிழாவில் நீ தானே என் பிரதம தோழி யாகி என் அருகில் நிற்பாய்.''

காவேரி தனக்குள் சிரித்துக் கொண்டாள். 'ஆம்... நான் உன் அருகில் நிற்பேன்... உன் தோழியாக ... இல்லை உன் அடிமைப் பெண்ணாக... அவரின் அன்புக் குப் பாத்திரமான உன் அதிர்ஷ்டத்தை வியந்து பாராட் டும் தோழியாக, அவர் காதலைப் பெற்ற உன் பெரு மையை எண்ணிப் பூரிக்கும் அசட்டுத் தோழியாக, அவ ரின் தண் தோள்களில் சாய்ந்து சரசமாடும் மலர்மாலை யிலிருந்து நழுவிக் கீழே விழும் ரோஜாவின் பிய்ந்த இதழ்களாக ... அது பாய்விரிக்கும் மலர் படுக்கையாக நான் நழுவி ... நழுவி ... உறவின் பிடிக்குள் சிக்காத உயிரற்ற ஜடமாக உன் அருகே நிற்பேன் ... ஆம்... கட்டாயம் நிற்பேன்...' தோழியை உலுக்கினாள் அம ராவதி.

''காவேரி... ஊர் திரும்பவேண்டும் என்றாயே, துணையுடன் குதிரையும் கிடைத்திருக்கிறது. போகிறாயா?''

ஒரு கணம் காவேரி திகைத்தாள். அமராவதி அவளைத் துரத்துகிறாளா? இப்படித்தான் அன்று அப்பா கூடத் துரத்தினாரோ? அவளை எல்லோரும் பந்தாடுகிறார்களா என்ன? அவள் போகமாட்டாள். போகவே மாட்டாள்.

காவேரி சிரித்துக்கொண்டு நிமிர்ந்தாள். யார் அந்தத் துணை? ஒரு வேளை... ஒரு வேளை... அவள் மெய் சிலிர்த்தது.

"யாருடன் என்னை அனுப்பப் போகிறாய்?" ஏனோ அவள் இதயம் படபடத்தது அமராவதியின் வாயிலிருந்து வரப்போகும் அந்த—அந்த ஒரு சொல்லுக்காகக் காத்திருந்தாள் காவேரி.

## 5. குறிஞ்சி மலர்

தன் மீது பன்னீர் மழை பொழியப் போகிற அந்த நேரத்திற்காகக் காவேரி காத்திருந்தாள்.

கூட வரப்போவது யார் தெரியுமா? நல்ல வழித் துணை. அச்சமின்றிப் போகலாம். வீரன் அவன்.

அமராவதி சொல்லச் சொல்லக் காவேரியின் உள்ளம் எக்காளமிட்டது. வீரன் மட்டுமா? என் உயிர் நண்பன். நீ அறியும் முன் அவன் நட்பை அடைந்தவள் நான். உலகையே நட்புக்காக விலை பேசலாமே! அந்த உயிர் நட்பு இல்லையேல் அதனைப் பெறாதவர் எத்தனை செல்வர்களாக இருந்தாலும் ஏழைதான்! காவேரி ஏழையா, பணக்காரியா?

"என்ன காவேரி பேசாமல் இருக்கிறாய்? சேர நாட்டு வீரன் அவன்..." அமராவதி தொடருமுன்

காவேரி மனத்துள் உறுதிப்படுத்திக் கொண்டாள். சந்தேகமே இல்லை... அவன்... அவன்தான்!

"காவேரி அந்தத் தலைப்பாகை வீரனைப் பார்த்தால் உன் சோர்வெல்லாம் பறந்து போய்விடும். செந்நிறம் கொண்ட அந்தத் தலைப்பாகையின் வண்ணத்தைப் போலவே அவனுள்ளும் வீரம் மண்டிக் கிடக்கிறது. நீ பயமின்றித் தைரியமாகப் போகலாம்."

அமராவதி முடித்தபோது காவேரி தன் மனத்துள் இடிந்துபோன கோபுரத்தின் கலசத்தைத் தேடிக் கொண்டிருந்தாள்! அடேயப்பா ... குவியலாக எதிரே கிடப்பது... அவள் இடிந்த மனமாளிகையின் செங்கல் தூள்களா?

தூரத்தே தெரியும் குளத்தில் பூத்துக் கிடப்பவை செவ்வாம்பல் மலர்களா? அப்பப்பா நெருப்பைப் போன்ற என்ன சிவப்பு? அந்த செம்மையைக் கண்டு அஞ்சிய பறவைகள் சிதறியபடி பறக்கும் விந்தைதான் என்ன?

குளத்தில் மட்டுமா சிவப்பு மண்டிக்) கிடக்கிறது? காவேரியின் இதயத்தில்... அங்கேகூட ஏன் இந்தச் சிவப்பு? செங்குருதியின் செம்மை!

"ஏன் காவேரி யோசனை? ஊருக்குப் போக அவசரப் பட்டாயே என்றுதான் கேட்டேன். சேர அரசர் தம் பகைவர்களான சோழன் ஒன்பதின்மருடன் போரிட வேண்டி ஆயத்தங்கள் செய்து கொண்டிருக்கிறாராம். எங்கே பார்த்தாலும் போர்ச் சூழலாம்! இந்நிலையில் நீ தனியாகப் போகக்கூடாது. அதனால்தான் சொன்னேன்."

காவேரி அமராவதியை நிமிர்ந்து பார்த்தாள்.

"எனக்கு இப்போது அங்கே போக வேண்டிய அவசரமில்லை அமராவதி. என் ஆர்வம் அடங்கி விட்டது." அமராவதி ஒரு கணம் துணுக்குற்றவளாய்த் தன் தோழியைப் பார்த்தாள்.

"ஏன் அதிசயமாக இருக்கிறதா அமராவதி? குறிஞ்சி மலரைப்பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறாயா? பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒரு முறைதான் அந்த மலர் மலருமாம். அதன் தனித்தன்மையைப் பற்றியும், சிறப்புக்கள் பற்றியும் கவிஞர்கள் பல கவிதைகள் வடித்துள்ளார்கள். ஏன்... எதிர்காலத்தில்கூட அதன் சிறப்பு வெளிப் படலாம்"

அமராவதி பொறுமை இழந்தவளாகக் காணப் பட்டாள். "நீ இங்கிருப்பதைப் பற்றி எனக்கு மிகவும் மகிழ்ச்சியே. ஆனால், நீ இங்கிருப்பதற்கும், குறிஞ்சி மலருக்கும் என்ன உறவு?"

காவேரி மெல்லச் சிரித்தாள்.

"இருக்கிறது, அமராவதி. குறிஞ்சிமலர் என்றால் எனக்கு ரொம்ப பைத்தியம். அதைப்பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறேனே அன்றி பார்த்ததில்லை. சமீபத்தில் தான் அந்த மலைச்சிகரத்தின் அடர்ந்த பள்ளத்தாக்கில் பாதுகாப்பான இடத்தில் அந்த மலர்கள் மணம் வீசு வதைக் கண்டேன். அப்பாகூட அதைப் பார்க்க ஆசைப் படுவார். தினம்தினம் மலரக்கூடிய மலரல்லவே... வருடக் கணக்காகக் காத்திருக்க வேண்டுமல்லவா? ஒரு கவிதை எழுதித்தருகிறேன்... அந்தக் குறிஞ்சி மலரைப் பற்றி. அந்த ஓலையை மட்டும் அப்பாவிடம் சேர்ப்பித்து விடச் சொல். அது போதும், என்ன?"

அமராவதிக்குச் சிரிப்புத்தான் வந்தது. கேவலம் ஒரு மலருக்கு இத்துணை முக்கியத்துவமா? கவிஞர்கள்

என்றாலே அரைப் பைத்தியங்கள்தாம் என்பது பொருளோ?

காவேரி மும்முரமாகக் கவிதை எழுதிக்கொண் டிருந்தாள். ஆனால்... கவிதை எழுதும் காவேரியின் உள்ளத்திலோ இனம் புரியா மகிழ்ச்சி. அவள் வெறும் குறிஞ்சி மலரைப் பற்றி மட்டுமா கவிதை வடிக்கிறாள்? அந்த மலரின் மணமாகப் பரவி நிற்பவன் மணிமாறன் அல்லவா? வெளிப்படையாகக் குறிஞ்சி மலரை வர்ணிப் பதுபோலத் தோன்றினாலும் அதன் உட்பொருளை, பரணர் கட்டாயம் உணர்ந்து கொள்வார்.

பன்னிரண்டு ஆண்டுகள்!

மணிமாறனின் குருகுலவாசத்தின் காலமும் அந்த பன்னிரண்டு ஆண்டுகள்தாம்!

ஏன்? சிப்பிக்குள் உருவாகும் முத்துகூட பன்னிரண்டு ஆண்டுகள் மோனத்தவம் இருக்குமாமே! அதுதான் அத்தனை மதிப்புடன் திகழ்கிறதோ? முத்தை மணிக்கு ஒப்பிட்டு, பன்னிரண்டு ஆண்டுகள் தவம் கிடந்து மலரும் குறிஞ்சி மலருக்கு அறிவை ஒப்பிட்டு அவள் வடித்த அந்தக் கவிதை!

குறிஞ்சி மலரைக் காணவில்லையே என்று தவித்த தவிப்பு... அது பறம்பு மலையின் பாதுகாப்பான பள்ளத் தில்... அந்நியச் சூழ்நிலையில்... யாருடைய நிர்ப்பந்தத் திற்காகவோ கட்டப்பட்டு, கருகிக் கொண்டிருக்கும் நிலையில் அவள் கண்டெடுத்த ரகசியம்... அவள் நுகர்ந்த அந்த நீல மலரின் சுகந்தம்... ஆனால் நெருங்கமுடியாத தூரம்...

இதுபோதும்... இது போதும்... இதன் உட் பொருளைப் பரணர் புரிந்துகொள்வார். கட்டாயம்

ஓடோடி வருவார். காவேரி ஓலை எழுதி முடிப்பதற்கும் குதிரையின் குளம்படிச் சப்தம் கேட்பதற்கும் சரியாக இருந்தது.

தன்னை அவன் எதிரில் காட்டிக் கொள்ள விரும்பாத காவேரி அந்த ஓலையை அமராவதியின் கைகளில் திணித்துவிட்டு உள்ளே ஓடி மறைந்தாள்.

அன்று...

பௌர்ணமி முன்நிலவில் அவன்தானே மணிமாறனுடன் போரிட்டான்? அதன்பின்... எத்தனை நிகழ்ச்சிகள்... ஒரு வேளை மணிமாறனை அவன் கைதியாக... கௌரவக் கைதியாக நடத்தி வருகிறானோ?

கேட்டுவிடலாம்தான்... ஆனால் அமராவதியின் முன்னால்... மணிமாறனைத் தனக்கு முன்பே தெரியும் என்பதை அவள் காட்டிக் கொள்ள விரும்பவில்லை.

'பொய்மையும் வாய்மையிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்குமெனின்' — என்று பொய்யாமொழிப் புலவர் கூறி இருப்பதாக அடிக்கடி பரணர் சொல்லி இருக்கிறாரே!... அவள் மறைக்க நினைத்த உண்மை...

அமராவதியின் நன்மைக்காக...

ஆனால்... அந்த நெஞ்சழுத்தத் தலைப்பாகை வீரன் மறைக்க நினைக்கும் உண்மை யார் நன்மைக்காக? காவேரிக்குப் புரியவில்லை.

அமராவதி ஏதோ தாழ்ந்த குரலில் அவனிடம் பேசுவது புரிந்தது.

அவன் ஓலையை வாங்கிக்கொண்டு செல்வதைக் காவேரி சாளரத்தின் வழியாகப் பார்த்தாள்.

அவன் அதைப் படிக்கவில்லை. அலட்சியமாக இடுப்புக் கச்சத்தில் செருகிக் கொண்டிருந்தான்.

அந்த ஒற்றையடிப் பாதை சேரநாடு செல்லும் ராஜபாதையோடு வந்து கலந்து, தன் பணி முடிந்த நிம்மதியில் தன் இருப்பிடத்தைப் புதர்களால் மறைத்துக் கொண்டு நின்றது.

ஒரே தாவலில் குதிரை அந்தப் புதரைக் கடந்தது. குதிரையிலிருந்து கீழே இறங்கினான் அந்தத் தலைப்பாகை வீரன். இடுப்புக் கச்சத்திலிருந்து அமராவதி தந்த ஓலையை எடுத்தான்.

காவேரி வரைந்திருந்த கவிதை ஓலைதான் அது. அதைப் படித்து முடித்தபோது அவனுள் ஒரு விசித்திர மர்மான புன்முறுவல் தவழ்ந்தது.

பிறகு...

நிதானமாக அந்த ஓலையைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்தெறிந்தான். காற்றில் பறந்தன அந்தக் கீற்றுகள்! சிலேடைக் கவிதை மண்ணைச் சரணடைந்தது! சிறிது நேரத்தில்...

ராஜபாதையில் ஒற்றைக் குதிரையின் சீரான காலடி ஓசை கேட்க ஆரம்பித்தது.

## 6. வேப்பம் பூவும், அத்திப் பழமும்

இளவேனிற் பருவம் வரவிருக்கிறது.

வேப்பம் பூவும், அத்திப் பழமும் செறிந்திருப்பதைப் பார்த்தாலே தெரியவில்லையா?

வேப்பமரத்தின் ஒள்ளிய பூவின் அழகைப் பார்த்த வண்ணம் பரணர் தன்னை மறந்து நின்றிருந்தார். வீடு சூன்யமாகிக் கிடந்தது. காவேரி வெளியூர் போய்

எத்தனை மாதங்கள் ஆகிவிட்டன! நினைக்கும்போது நம்பத்தான் முடியவில்லை. ஆனாலும் நம்பாமலும் இருக்க முடியவில்லை.

போனவள்தான் செய்தி ஒன்றும் அனுப்பவில்லை என்றாலும் பரணராவது அனுப்பி இருக்கலாம்.

துணையோடு அனுப்பி இருக்கிறோமே என்ற நிம்மதி! நிம்மதியா அது? தன்னை இனம் காட்டாமல் இருக்க அவளை விரட்டியடித்த ஏற்பாடு அல்லவா அது?

யுத்தம் மூண்ட குழப்பத்தால் சபையில் அரசர் மணிமாறன்தான் இளவரசன் என்ற உண்மையை அறிவிக்காதது என்னவோ உறுதிதான். ஆனால், மணி மாறனாக மாறிய அந்தப் புதியவனை அந்தப்புரத்துக்கு அழைத்துப்போய் அரசியிடம் அரசர் கூறியதை அவர் கேட்டுக் கொண்டுதானே இருந்தார்.

அந்தப்புரத்தில் வெளியான அந்தச் செய்தி காட்டுத் தீ போல் வெளியே பரவாது என்பது என்ன நிச்சயம்?

செய்தி கேட்டுக் காவேரி பதறினால்... இன்னும் கொஞ்சம் நாளைக்குக் காவேரி அங்கேயே இருக்கட்டும். அது சரி... இத்தனை நாட்கள் பிரிந்திருந்த மகனைக் கண்டதும் தாய் ஏன் அப்படி ஒதுங்கி நின்றாள்? அரசி யார் அந்தப் புதியவனை ஏன் அப்படிப் பிரமிப்புடன் பார்த்தார்?

ஏன் அவர் விழிகள் நிறைந்தன? உணர்ச்சியின் மிகுதியா? அல்லது... ஏனோ பரணரின் தேகம் நடுங்கியது. ஓலைச் சுவடிகள் மூலைக்கொன்றாய், தாறுமாறாய்ச் சிதைந்து கிடந்தன.

அவை மட்டும்தானா? ஏன் இந்த மனம்கூட அப்படித்தான் சிதைந்து கிடக்கிறது? யார் இதை

ஒழுங்குபடுத்துவது? மணிமாறு நீ எங்கிருக்கிறாய்? உண்மை வெளியானால்... கொடியோரின் நாவுகளின் முன்னிலையில் கவிஞர் பரணரின் கதி என்னவாகும்?

பரணரின் பார்வைக் கீழே பாய்ந்தது. கீழே பழங்கள் சிதறிக் கிடக்கின்றன. நண்டுகள் பழத்தை உருட்டிக்கொண்டு செல்லுகின்றன.

பரணர் எண்ணினார்.

ஏழு நண்டுகளால் உருட்டப்பட்ட அந்தப் பழம் நசுங்கி... நாசமாகி... இப்படித்தான்... இப்படித்தான் கொடியோரின் நாவுகளின் மத்தியில் நசுங்கிப்போக நேரிடுமோ?

மனம் என்னமோ கூறியது: 'ஏழு குளிறு மிதித்த ஒரு பழம் போலக் குழையக் கொடியோர் நாவே'... கைகள் பரபரத்தன கவிதை எழுத.

'நெல்லுக்கு நேர்விலை வெள்ளை உப்பு'-என்று வாசலில் பண்டமாற்றாகக் கூறிச் செல்லும் மகளிர் ஓசை... அவளின் வேற்றுக் குரலை அறிந்த தெரு நாய் குரைக்கும் ஒலி... மனத்துள் என்ன என்னவோ கற்பனைகள் எழுகின்றன. களவொழுக்கத்தில் ஈடுபட்டிருக்கும் தலைவிக்கும், தலைவனுக்கும் எத்தனையோ இடையூறுகள் இருக்கின்றன. ஆரவாரமான அந்த ஊர் அமைதியாக உறங்குவதே இல்லை. கடைத் தெருவும், மற்ற தெருக்களும் ஒலியின்றி அடங்கியபோது கூட வலிய குரலில் கடுஞ்சொல் சொல்லும் அன்னை உறங்குவதில்லை... சிறை போன்ற அவள் உறங்கினாள் என்றாலும் ஊர்க் காவலர் உறங்குவதில்லை... வேல் ஏந்திய அந்தக் காவலர் உறங்கிய போதும் கூரிய பல்லும், சுருண்ட வாலும் உடைய நாய் உறங்குவதில்லை. நாய் அமைதி

அடையும் நேரத்தில் வானின் நிறைமதி ஒளி பரப்பி காட்டிக் கொடுத்து விடும்....

கற்பனை ஓட ஓட எழுத்தாணி ஓடியது. வெகு நாட்களுக்குப் பிறகு கவிதை ஓடியது...

"இரும் பிழிமாரி அழுங்கல் மூதூர்
விழவு இன்றாயினும் துஞ்சாதாகும்;
மல்லல் ஆவணம் மறுகுடன் மடியின்
வல்லுரைக் கடுஞ்சொல் அன்னை துஞ்சாள்;
பிணிகோள் அருள்சிறை அன்னை துஞ்சின்
துஞ்சாக் கண்ணர் காவலர் கடுகுவர்;

திடீரென கவிதை இடையில் தடைப்பட்டது. ஆ... அதென்ன சப்தம்? குதிரை வரும் ஒலி... இப்பாதையில் குதிரை வந்து ரொம்ப நாட்கள் ஆயிற்றே! திருக் கண்ணன்கூட இப்போது அடிக்கடி வருவதில்லை. மாற்று மணிமாறனை அரண்மனைக்குள் புகுத்தியாகி விட்டது! ஒரு வேளை... ஒரு வேளை... அவர்கள் இருவரும் அரசனுக்கே எதிராகச் சதி செய்வார்களோ?

ஏனோ பரணரின் உடல் சிலிர்த்தது. மலையமானின் வேண்டுகோளுக்கு இணங்க தன் தாயாதிகளான சோழன் ஒன்பதின்மரை வெற்றி காணப் படையுடன் புறப்பட்டிருக்கிறான் சேரன் செங்குட்டுவன். அவன் மைத்துன சோழனை பெருங்கிள்ளிக்குச் சிங்காதனம் தரவேண்டும் என்பது சேரனின் விருப்பம்.

படை எடுப்பின் முதற்படியாக மணிமாறனை அதாவது இளவரசனென அவர்கள் நினைத்திருக்கும் போலி மணிமாறனைப் படையுடன் அனுப்பி இருக்கிறார் அரசர். அரசனின் படையும் கிளம்பிக் கொண்டிருக்கும இந்தத் தருணத்தில்... இந்தத் தருணத்தில்...?

ிரை பரணரின் குடிலின் முன் நின்றது. அதிலிருந்து இறங்கிய வீரன் ஓலை ஒன்றினைக் காட்டினான். அரசரின் கட்டளை அது...

உடனே பரணரை அரசரின் தனி இடத்தில் வந்து சந்திக்கும்படி ஆணை!

இந்த நெருக்கடி நேரத்தில் இப்படிப்பட்ட திடீர் ஆணை வரக் காரணம்?

பரணர் அரசரைச் சந்தித்து பல நாட்கள் ஆகி இருந்தது என்னவோ உண்மை...

பரணருக்கு அரசரைச் சந்திக்கும் நெம்பு இல்லை... அரசருக்கும் கவிதையில் ஈடுபட நேரமில்லை.

போர் முரசின் ஒலி கேட்கத் தொடங்கிவிட்ட நேரம் அது! இனி அது எப்போது ஓயுமோ?

பல்லக்குக் காத்து நின்றது. பரணர் அவசரமாகக் கிளம்பினார். முன்பும் ஒரு நாள் இதே போல் பல்லக்கு வந்தது. சகல மரியாதைகளுடன் பரணர் வரவேற்கப் கப்பட்டார். ஆனால் அவரின் அந்த உள்ளம்......?

அது துடித்த துடிப்பு...

இன்றும் கிட்டத்தட்ட அதே போன்ற நிலைதான். 'ஏழு குளிறு மிதித்த அந்த ஒரு பழத்தின் நினைவு' ஏனோ மனதில் வந்து மோதியது அவருக்கு.

பல்லக்கு மெதுவாகச் சென்று கொண்டிருந்தது.

# 7. அமராவதியின் காதல்

அந்த உயரமான மலைதான் என்ன அழகு வாய்ந்தது!... அதன் நடுவே பாய்ந்து ஓடும் அந்த அருவி... திருமால் நெஞ்சினுக்கு ஓர் அழகிய ஆபரணம் அணி செய்வதைப் போல் எவ்வளவு அழகாக இருக்கிறது!... அதோ ... அதோ... மலைமேல் காணப்படும் அந்தச் சிறிய மலைப்பாதை!

யானை முதுகில் உள்ள கயிற்றுத் தழும்பு போல அந்தப் பாதை அந்த மலைக்கு எவ்வளவு அழகாய்ப் பொருந்தி இருக்கிறது. அப்பாவிடம் சொன்னால் உடனே கவிதை எழுத அமர்ந்துவிடுவார். கவிதை... கவிதை! அவர் உலகம் கவிதை உலகம்! அமராவதிக்குச் சிரிப்பு வந்தது.

தந்தையின் உலகம் கவிதை! மகளின் உலகம்? கற்பனை!

கவிதைக்கும் கற்பனைக்கும் நெருங்கிய உறவு உண்டாமே... அன்று மணிமாறனைச் சந்தித்த அந்த நேரம்... நினைவுகள் தடம் புரண்டபோது நெஞ்சின் உணர்வுகள் எழும்பின. குதிரைமீதிருந்து கீழே விழுந்த அந்த வாலிபனின் தோள்களிலிருந்து குருதி கொட்டிக் கொண்டிருந்தது. கீழே விழுந்த தன் எஜமானனையும் லட்சியம் செய்யாமல் தட்டுக்கெட்டு ஓடி மறைந்தது குதிரை.

அமராவதிக்குத் தன்னை நிதானப்படுத்திக் கொள்ளச் சில விநாடிகள் தேவைப்பட்டன. அவள் நெற்றியிலும் அடிப்பட்டிருந்தது. ஆபத்துக்குப் பாவமில்லை என எண்ணியவளாய்த் தன் புடவைத் தலைப்பிலிருந்து ஒரு

பகுதியைக் கிழித்து அவன் தோள் காயத்திற்குக் கட்டுப் போட்டாள் அவள்.

தோளில் போடப்பட்டிருந்த அந்த வண்ணத் துணிக்கட்டுகூட அவனுக்கு அழகாய்த்தான் இருந்தது. அவன் அரை மயக்க நிலையில் இருந்தான். யார் அவன்?

''என்னைக் காப்பாற்று. என்னை... என்னை யாரோ துரத்தி வருகின்றனர்...'' அவன் பலவீனமான குரலில் கூறினான்.

அவனைக் கைத்தாங்கலாக அழைத்துச் சென்றவள் புதரின் மறைவிடம் ஒன்றினைத் தேடினாள்.

அதற்குள்... குதிரையின் காலடி ஓசை கேட்டது. அதோ... அதோ... அவன்தான்... மறைவிடத்திலிருந்து அமராவதி எட்டிப் பார்த்தாள். குதிரை மீது அசுர வேகத்தில் வந்துகொண்டிருந்தவன்?... அமராவதி பற்களைக் கடித்தாள்.

அவன்... இங்குமா அவன்? ஒரு கணம் இங்கும் அங்கும் பார்த்தவன் மறுகணம் குதிரையின் குளம்படியைப் பின்பற்றி ஓடி மறைந்தான். ஆபத்து விலகிய நிம்மதியில் மெதுவாகப் பெருமூச்சு விட்டாள் அமராவதி. நன்றிப் பெருக்கோடு அமராவதியைப் பார்த்தான் மணிமாறன்.

''நான்... நான் உன்னை மறக்கவே மாட்டேன்.'' அப்போது அவன் இருந்த நிலையில் அவனுக்கும், அந்தக் குதிரை வீரனுக்கும் என்ன உறவு என்பதைக் கேட்க அமராவதிக்குத் துணிவில்லை.

''அட... உங்கள் நெற்றியிலும் இரத்தம்'' —என்றவன் பரபரப்புடன் எழ முயன்றான்.

அமராவதியின் நெற்றியைத் துடைத்தான். கைகள் சிவந்திருந்தன. இதயத்தைத் துடைத்தபோது நெஞ்சம் கூடச் சிவந்திருப்பது எதனுல்? அவன் அவள் நெற்றிக்கு மட்டும்தாஞ கட்டுப்போட்டான்? அதன் பின்...? மணிமாறன் அவளை மறக்கவில்லை என்பதை அவள் மெல்ல உணர்ந்தாள். அவள் குளிக்கும் துறையில், அவள் நீர் எடுக்கும் குளத்தின் படிக்கட்டில், அவள் உலாவும் எழில் சோலையின் தண் நிழலில், அவள் வணங்கும் தெய்வத்தின் கோவிலின் கர்ப்பக் கிருகத்தில்... எல்லா இடங்களிலும் அவள் செல்லும் அதே நேரங்களில் அவனுக்கும் வேலை இருந்த அதிசயம்! உறவின் நெருக்கத்தில் உள்ளம் மலர்ந்தபோதுதான் உண்மை புரிந்தது.

அவன் பெயர் மணிமாறன்; சேரநாட்டைச் சேர்ந்தவன். அவனுக்கே புரியாத எதிரிகள் அவனைச் சூழ்ந்துள்ளனர். அப்படித்தான் அவர்களில் யாரோ சிலர் மணிமாறனை மிரட்டி நாடு கடத்தி இருக்கின்ருர்கள். அமராவதி பெருமூச்சு விட்டாள்.

அவன் எதிரிகளில் அந்தக் குதிரை வீரனும் ஒருவனுக இருக்குமோ? பாவம்... மணிமாறன்... மிரட்டலுக்கு அடி பணிந்து விட்டான். 'மீண்டும் சேர நாட்டில் அடி எடுத்து வைத்தால் உன் உயிரினும் இனிய ஒன்றினை இழப்பாய்' - என்று மிரட்டினுர்களாமே!

அந்த உயிரினும் இனிய ஒன்று என்ன? மணிமாறன் கூறவில்லை.

அந்தத் தலைப்பாகை வீரன்தான் அடிக்கடி வந்து மணிமாறனைச் சந்திக்கிருன். அவன் சேரர் நாட்டு ஒற்றனும். அவனிடம் மிகவும் கவனமாகத்தான் நடந்து கொள்ள வேண்டும். அவன் மணிமாறன் இல்லாத

நேரத்தில் அமராவதியைப் பார்த்த அந்தப் பார்வை...! அந்தக் கண்கள்!

சே... அமராவதியின் தேகம் நடுங்கியது. அவன் கண்களுக்குப் பயந்துதான் அவன் சொல்லியதை, அதாவது காவேரிக்குத் துணையாகப் போகிறேன் என்று அவன் சொல்லியதைக் காவேரியிடம் சொன்னாள்.

காவேரிதான் போகவே மறுத்து விட்டாளே! காவேரியைப் பற்றி மணிமாறனிடம் அமராவதி சொல்லவேயில்லை! ஏன், சொல்லவேண்டிய அவசியமும் நேரவில்லை. மேலும்... அமராவதியைவிடப் பன்மடங்கு அழகான காவேரியை மணிமாறனுக்கு அறிமுகம் செய்துவைக்க ஏனோ அமராவதிக்கு விருப்பமில்லை!

மணிமாறனின் விரோதி அந்தக் குதிரை வீரன், அப்புறம் தென்படவே இல்லையே! சே... இந்தக் காதல் பாதைதான் எவ்வளவு கரடுமுரடானது. காவேரி அறியாமல், தந்தை கபிலர் அறியாமல், இன்னும் எத்தனையோ பேர்கள் அறியாமல் மணிமாறனைச் சந்திப்பது எத்தனை சோதனை மயமானது!

'களவொழுக்கம்' கூடாதென்கிறார்களே பெரியவர்கள். இந்த இடர்ப்பாடுகளை மீறிக் காதலர் கூடும் போது ஏற்படும் தனி இன்பம்! அவள் சிந்தனைகள் கலந்தன. ஏதோ சலசலப்புக் கேட்டது. தன் நினைவுகளிலிருந்து விடுபட்டவள் 'சட்'டென நிமிர்ந்து பார்த்தாள். அந்தத் தலைப்பாகை வீரன்!

"நீங்களா?"

"ஏன்... காதலனைக் காணவேண்டி, காத்து நிற்கும் போது நான் வந்து இடையூறு செய்துவிட்டேனா? உன்னைத் தனிமையில் சந்திக்கத்தான் ஓடோடி வந்தேன்."

அமராவதி ஓரடி நகர்ந்தாள். அவன் சிரித்தான். 'சட்'டென நினைவு வந்தவளாய் அவள் கேட்டாள்.

''காவேரி தந்த ஓலையை அனுப்பிவிட்டீர்களா?'' ஒரு கணம் தடுமாறியவன்... ''ஓ ! அன்றே அனுப்பி விட்டேனே... இத்தனை நேரம் பரணர் அதைப் படித்துக் கொண்டிருப்பார்'' என்றான் மர்மச்சிரிப்பு சிரித்தபடி.

அவன் பார்வையையும், சிரிப்பையும் ரசிக்காத அமராவதி முகத்தைத் திருப்பிக் கொண்டாள்.

''ஏன் அந்தப்புறம் பார்க்கிறாய்? இப்படிப் பார்... என்னைப் பார். எனக்கு உன் காதலனை விட வயது அதிகம்தான், பரவாயில்லை பார் இப்படி.'' - அவன் கேலிகளைச் சுவைக்கும் நிலையில் அவள் இல்லை.

''அந்தப் பெண் காவேரியானால், தான் இங்கிருப்பது எனக்குத் தெரியாது என்று நினைத்துக்கொண்டு ஓடி ஒளிகிறது. நானும் தெரியாத மாதிரியே இருந்து வருகிறேன். நீ என்னடா என்றால் என்னைப் பார்க்கவே மாட்டேன் என்கிறாய்... உன்னோடு நான் எப்போதுதான் பேசுவது?''-என்றவன் ''இப்போது நான் சொல்வதைக் கேட்டால் கட்டாயம் என்னைப் பார்ப்பாய்''-என்றான்.

அமராவதி திரும்பவில்லை.

''உன் காதலன் சோழநாட்டின் ஒற்றன். சேரனைக் கொன்று அவன் வம்சத்தைப் பூண்டோடு அழிப்பதாகச் சபதம் செய்திருப்பவன்... அடுத்தபடியாக அவன் ஏற்கனவே காவேரியைக் காதலித்தவன்...'' அமராவதியின் முகம் பீதியால் வெளிறியது. அவள் திரும்பினாள்.

''நீங்கள் யார்? அவருக்கு உதவி செய்வதுபோல் நடித்துவிட்டு நீங்களே சதி செய்கிறீர்களா?'' — அமராவதி ஆவேசமாகக் கேட்டாள். அந்த வீரன் பயங்கரமாகச் சிரித்தான்.

"ஆமாம்... சதிதான் செய்தேன். மணிமாறனைக் காப்பாற்றச் சதி செய்தேன். இல்லையெனில் இத்தனை நேரம் மணிமாறன் கொலை செய்யப்பட்டிருப்பான்..."

"போதும் நிறுத்துங்கள்...?" அமராவதி விம்மினாள்.

"காவேரி பேதைப் பெண்... உன் காதலை உணர்ந்தவள் தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டாள். தன் காதலைத் தன் இதயத்துள் சமாதி கட்டி மறைத்தாள். அவள் மணிமாறனை ஏற்கனவே அறிந்தவள் என்பதற்கு உனக்கு ஆதாரம் தேவையா? அவள் தன் பேழையில் பத்திரமாக வைத்திருக்கும் அந்த ஓவியத்தை எடுத்துப் பார்... அப்போது புரியும்..."

அமராவதி குறுக்கிட்டாள். "மணிமாறனுக்குக் காவேரி இங்கிருப்பது தெரியாதா?"

"தெரியாது .. தெரிந்திருந்தால் அவன் உன்னைக் காதலித்தே இருக்கமாட்டான். அவன் சேரநாட்டைத் துறந்ததற்கே காரணம் காவேரி மீது அவன் கொண்ட அபரிமிதமான அன்புதான்... அவன் சேரநாட்டைத் துறக்கவில்லை என்றால் காவேரி கொல்லப்படுவாள் என்பதுதான் அவனுக்குக் கூறப்பட்ட பயங்கரமான உண்மைகள்..." கண்ணீரைத் துடைத்துக் கொண்டு அமராவதி நிமிர்ந்தாள்.

"மிக்க நன்றி ஐயா... இத்தனை விவரங்களை ஏக காலத்தில் கூறியதற்கு மிக்க நன்றி... இன்னும் ஒரே ஒரு சந்தேகம்... அப்படி மணிமாறனைப் பயமுறுத்தியவர்கள் யார்..."

"திருக்கண்ணன்!"

அமராவதியின் உள்ளத்தில் புயல் கொந்தளித்தது. ஆஹா... அந்தத் திருக்கண்ணன் அவள் வாழ்வில் அடிக்கடி வந்து குறுக்கிடுகிறான்!

அவள் பற்களைக் கடித்தாள்.

"என்ன அமராவதி யோசனை!"

"காவேரி இங்கிருப்பதை மணிமாறனிடம் காரம் சிரத்தையாகத் தெரிவித்து இருப்பீர்களே! அதைச் செய்யவில்லையா?"

"இல்லை..." என்று கூறியவன் இரைந்து சிரித்தான்.

மணிமாறனின் உள்ளத்தில் மீண்டும் புயலைக் கிளப்ப நான் விரும்பவில்லை. அதனால் அந்தத் தகவலை அவனுக்குக் கூறவில்லை. காவேரி கூடிய சீக்கிரம் தன் இருப்பிடம் திரும்ப வேண்டியவளும்கூட..." அமராவதி மெல்லக் கிளம்பினாள்.

"அட... அதற்குள் கிளம்பிவிட்டாயா? மணிமாறனைச் சந்திக்கவில்லை?"

"மனம் சரியில்லை..." அவன் அவள் அருகில் நெருங்கி வந்தான்.

"நான் உன்னிடம் சொன்னவை அத்தனையும் உண்மை. ஆனால் இதைத் தெளிவுபடுத்திக் கொள்ள மணிமாறனிடம் எதையாவது கேட்டு வைக்காதே. அது ஒரு அரைப் பைத்தியம். உடனே காவேரியைச் சந்தித்து எதையாகிலும் உளறிவைப்பான். அவள் ஊருக்குப் போய் பரணரிடம் உளறுவாள். விஷயம் மன்னர்வரை போய்விடும்! கடைசியில் இருவர் உயிருக்கும்- அதுதான் மணிமாறன்... காவேரி இருவர் உயிருக்கும் ஆபத்தாகி விடும். பெண்களிடம் இதற்குத்தான் இரகசியங்களைச் சொல்லக்கூடாது என்பது..."

அமராவதி பேசவில்லை.

"அமராவதி, ஒரு சிறிய உதவி."

'சொல்லுங்கள்' - என்பதைப்போல் நிமிர்ந்து பார்த்தாள் அவள்.

"அந்த... ஓவியத்தை... காவேரியின் பேழையில் இருக்கும் அதை நீ பார்த்தபிறகு எனக்குக் கொண்டு வந்து தருகிறாயா?"

"எதற்காக?"

"அவள் பெட்டியில் அந்த ஓவியம் இருப்பது அவளுக்கு மட்டும் ஆபத்தல்ல... உங்கள் அனைவருக்கும் ஆபத்துதான். மூவேந்தர்களின் பகைக்கு அஞ்சியே பாரி மகளிரை மணக்கச் சிற்றரசர்கள் தயங்குகின்றனர். இந் நிலையில் சேரனின் பகை உங்களுக்கு வீணாக ஏன்?"

"அந்த ஓவியம் இங்கிருப்பது சேர மன்னனுக்குத் தெரியுமோ?" அமராவதி அலட்சியமாகக் கேட்டாள்.

"சேரர் ஒற்றனுடன்தான் பேசிக்கொண்டிருக் கிறோம் என்பது உனக்கும் தெரியுமா?"

அமராவதி பேசவில்லை. இந்தத் தலைப்பாகை வீரன் உண்மையில் யார் ஒற்றன்? நல்லது செய்கிறானா? அல்லது...? அமராவதி மெல்ல நடந்துகொண்டிருந்தாள்.

## 8. அரசரின் ஆணை

மாமன்னன் சேரன் செங்குட்டுவன் ஆழ்ந்த யோசனையில் மூழ்கிக் கிடந்தான். அரசனின் தனி இருப்பிடம் அது. போர்க்கோலத்தில் காணப்பட்ட அரசனின் உடலும், உள்ளமும் ஏக காலத்தில் பரபரத்தன.

யார் வரவையோ எதிர்நோக்குவதுபோல் அடிக்கடி வாயிற்புறம் அவன் கண்பார்வை சுழன்று சுழன்று

திரும்பியது. எண்ணங்களும் எங்கெங்கோ பறந்து பறந்து பாய்ந்தன. கையிலே ஒரு ஓலை... கருத்திலோ எத்தனை எத்தனையோ நினைவுகள்...

மாமன்னன் காத்திருந்தான். வாசலில் சலசலப்புச் சத்தம் கேட்டது. உள்ளே நுழைந்த காவல்காரன் பரணர் வருகையை அறிவித்தான்.

''வரச் சொல்'' எனக் கூறிய மன்னன் தலைகுனிந்து அமர்ந்திருந்தான்.

பரணர் உள்ளே நுழைந்தார். ஏனோ அவர் கால்களும், கைகளும் தடுமாறின. தாம் உள்ளே நுழைந்தது அறிந்தும் தலை நிமிராத மாமன்னனின் கருத்துத்தான் என்ன? அல்லது போர்பற்றிய கவலையால் உணர்வு பெருமல் தன்னை மறந்திருக்கிருனோ?

மன்னர் மன்னவா...!'' பரணர் குரல் அவருக்கே கேட்கவில்லை.

'சட்'டெனத் தலை நிமிர்ந்தான் அரசன். திடீரென பதற்றம் கொண்டவனாய், ''வருக வருக... புலவர் பெருமானே வருக!'' என்று அழைத்தபோது பரணர் ஏனோ துணுக்குற்றார்.

வழக்கமாய்க் காணப்படும் பரிவுக்குப் பதிலாகக் கூட ஏதோ ஒன்றும் ஒலிக்கிறதே!

புலவருக்கு இருக்கை தந்த மன்னன் தன் இருக்கையைவிட்டு எழுந்து மெதுவாக நடை பயின்றான்.

அவன் அமைதியின்மையைப் புரிந்துகொண்ட புலவர் மெதுவாக எழுந்து அவன் அருகில் சென்றார். மன்னனின் திருக்கரங்களைப் பற்றி ''மன்னா!'' - என்று விளித்தபோது மன்னனின் கரங்கள் அவர் கரங்களை இறுகப் பற்றின.

அந்தக் கரங்கள் பரணருக்கு விலங்கிடுகின்றனவா! அக்கரங்களின் திண்மை! மன்னன் கரங்களின் வலிமை! புலவர் கரங்களின் மென்மை!

மாமன்னனின் பரிசில்களையும், அவன் அன்புடன் தரும் விருந்துகளையும், ஏற்கும் புலவர் கரங்கள் மெத்தென்று இருக்கின்றன!

மன்னனின் கரங்களோ...? உழைக்கும் கரங்கள்... களம் பல கண்ட கரங்கள். இரும்பெனத் திண்மை பெற்றிருக்கும் அதன் தன்மை! ஆனால் இந்த உள்ளம்... அன்பெனும் விருந்தை உண்டு உண்டு 'மெத்'தென்றிருக் கும் அதன் தன்மை...

"என்ன பரணரே சிந்தனை?" சேரன் மெல்லக் கேட்டான்.

தன் சுய உணர்வு பெற்றவராய் பரணர் மெல்லச் சிரித்தார்.

"இல்லை மன்னா... உன் கரங்களின் திண்மையையும் என் கரங்களின் உழைப்பற்ற சதையைப் பற்றியும் நினைத்துப் பார்த்தேன். சிந்தனை தொடர்ந்தது. சிரிப்பு வந்தது."

"எனக்குக் கூடச் சிரிப்புத்தான் வருகிறது புலவரே! என் கரம் மட்டுமல்ல... இப்போது... இப்போது என் மனமும்கூட இரும்பாகத்தான் இருக்கிறது."

பரணர் ஒரு கணம் தடுமாறிப்போனார். "நீ...நீ என்ன சொல்கிறாய்?"

"போர்க்களம் போகுமுன் புலவர் பெருமானிடம் ஆசி பெற வேண்டித்தான் தங்களை இங்கே அழைத்தேன். ஆனால், அத்துடன் ஓர் ஆணையும் இட வேண்டிய அவசியத்தைச் சற்றுமுன் வந்த ஓலை

தந்திருக்கிறது. தங்கள் முகத்தைப் பார்த்தால் எங்கே என் உறுதி குலைந்து விடுமோ என்று அஞ்சியே இத்தனை நேரம் நிமிர்ந்து பார்க்காமல் இருந்தேன்.''

பரணருக்கு நெற்றியில் வியர்வை துளிர்த்தது. தள்ளாடியபடி ஆசனத்தில் அமர்ந்தார் அவர். அரசனும் அருகில் அமர்ந்தான்.

''காவேரி சுகமா?'' கேள்வியா? கிண்டலா? சிலேடையா? பரணர் தடுமாறினார்.

''சுகம்... சுகம்தான்.''

''எங்கே... தங்கள் வீட்டிலா... இல்லை.''

''அவள் இப்போது வெளியூரில் இருக்கிறாள்.''

''அப்படியா? தெரியவே தெரியாதே! என்று போனாள்? எப்போது வருவாள்? எங்கிருக்கிறாள்?''

''அவள்... அவள் என் நண்பர் புலவர் கபிலரிடம் இருக்கிறாள். பாவம்... கபிலர் பாரியின் பிரிவால் நலிந்து இருக்கிறாராம். அதனால் அவருக்குத் துணையாகச் சில திங்கள் இருந்துவிட்டு...''

''ஓ... கபிலருக்குத் துணை யாரும் கிடையாதோ?''

''ஆமாம்... அமராவதி என்றொரு வளர்ப்பு மகள் இருப்பதாகக் கேள்வி... அவளும் பெரும்பாலும் கபிலரின் சகோதரியின் வீட்டிலேயே வளர்ந்தவளாம். காவேரி எல்லாம் விவரமாக ஓலையில் எழுதி அனுப்பியிருக்கிறாள். அந்தப் பறம்பு மலையைப் பற்றி ஒரு பாடலே பாடி இருக்கிறாள்.'' பரணர் பொய்யின் சுமையால் போலிச் சிரிப்பொன்றை உதிர்த்தார்.

''கடவுளே... என்னை மன்னித்து விடு'' - அவர் உள்ளம் புலம்பியது.

"அப்படியா... ரொம்பவும் மகிழ்ச்சி... ஓலையுடன் ஓர் ஓவியத்தையும் அனுப்ப நினைத்தாளாம். மறந்து விட்டதாம். அதைத் தனியாக அனுப்பியிருக்கிறாள். என்னிடம் வந்து சேர்ந்திருக்கிறது அது. பாருங்கள்... இதுதானா அது?"

பரணர் கதி கலங்க அரசன் தந்த அந்த ஓவியத்தைப் பார்த்தார்.

அவர் கண்கள் சுழன்றன. ஓவியத்தில் மணிமாறன் சிரித்துக்கொண்டிருந்தான். இது... இது எப்படி இங்கு வந்தது? அன்று... அன்று காவேரி ஊருக்குக் கிளம்பும் பொது எடுத்துச் சென்ற ஓவியம் அல்லவா?

"இவன் யார் புலவரே?"

"இவன்... இவன் யார்? காவேரியிடம்தான் கேட்க வேண்டும்..." மன்னனின் சிரிப்புப் பெரிதாகக் கேட்டது.

"யாரோ சொன்னார்கள் உங்கள் சீடன் என்று."

என் சீடனா? ஆமாம்... என் சீடன்தான்..." பரணர் உளறினார்.

"இவன் யார் தெரியுமா? வேற்றுநாட்டு ஒற்றன், உம்மிடம் பாடம் கற்பதுபோல் வந்து உளவறிய வந்தவன். என் ஆட்கள் இவனைக் கண்காணித்து வருகின்றனர். இளவரசனுடன இவனுக்கும் பாடம் சேர்த்துச் சொல்லிக்கொடுத்தீரா?" பரணருக்குத் தலை சுற்றியது. மெதுவாகச் சமாளித்துக்கொண்டார் அவர்.

பரணர் ஆள் மாருட்டம் செய்ததை அரசன் அறியவில்லை! அதுபோதும்... அதுபோதும். போலி இளவரசனைத்தான் உண்மையான இளவரசன் என இன்னமும் நினைத்துக்கொண்டிருக்கிறான். அவனுடன் கூடப் பாடம் பயின்றவன் இவன் எனத் தவருக எண்ணி

இருக்கிறான். இப்போது அரசனிடம் உண்மை சொல்லிப் பயன் இல்லை. மணிமாறனைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும் முதலில். அதன்பின் திருக்கண்ணனிடம் சொல்லி எப்படியாவது... எப்படியாவது...

அடுக்கடுக்காய்ப் பரணர் செய்யும் தவறுகளை அரசன் மன்னிப்பானா? யாரோ ஒற்றன் என்றானே அரசன். ஒருவேளை அந்தத் தலைப்பாகை வீரனாக இருக்குமோ? இது என்ன குழப்பம்! அவனே மணிமாறனைக் கடத்திவிட்டு அவனே அரசனிடம் வந்து இந்த ஓவியத்தையும் தந்திருப்பானோ? மணிமாறனைக் குற்றவாளியாக்கி அவனைக் கொலை செய்யத்தான் இப்படி நாடகம் ஆடுகிறானோ?

உண்மையில் அந்தத் தலைப்பாகை வீரன்தான் சதிகாரன்! அவனே மணிமாறனைக் கடத்தியவன் என்பதை அரசனிடம் கூறினால் போலி இளவரனுக்கு என்ன பதில் தருவது? பெரிய தவறு செய்துவிட்டார் பரணர்.

அன்றே அரசனிடம் உண்மையை ஒப்புக்கொண்டிருந்தால் இந்தக் குழப்பங்கள் நேர்ந்திராது. ஆனால்... ஆனால், அன்று... அன்று திருக்கண்ணன் காட்டிய அந்த ஓலை... பரணரின் தேகம் அதை நினைத்தபோதே நடுங்கியது. அது... அந்த ஓலை அந்தத் தலைப்பாகை வீரனிடம் சிக்கவில்லையோ? ஏன் அந்த ஓலையைப்பற்றி மட்டும் மன்னரிடம் அவன் கூறாது விட்டிருக்கிறான்? அந்த ஓலையின் செய்திமட்டும் அரசனுக்குத் தெரிந்துவிட்டால்... இத்தனை அமைதியுடன் அவனால் இருக்க முடியாது!

பரணர் சற்று தெளிவுற்றார். முதலில் மணிமாறனைக் கண்டுபிடிக்க வேண்டும். அரசனிடம் உண்மை கூற முடியாத நிலை. அவரேதான் சொல்லிவிடவேண்டும்.

குழம்பிய பரணர் ஒரு முடிவு எடுப்பதற்குள் மாமன்னனின் குரல் கம்பீரமாக ஒலித்தது.

"புலவர் பெருமானே... தங்களுக்கு வேதனையாகத்தான் இருக்கும். தங்களின் உயிர் சீடன் ஒருவனை... அதுவும் காவேரி அன்புடன் காதலிக்கும் ஒருவனை... நான் ஒற்றன் என்றால் வேதனைப்படாமல் இருக்கமுடியுமா?"

பரணர் ஏதோ சொல்ல வாயெடுத்தார். ஆனால் அவரால் பேச முடியவில்லை. அரசன் மெல்லச் சிரித்தான்.

"இந்த வேதனையுடன் இன்னொரு மகத்தான பொறுப்பையும் தங்களிடமே ஒப்படைக்க வேண்டி இருக்கிறது. நான் களம் கண்டு திரும்புவதற்குள் இந்த ஓவியத்தில் இருப்பவனைக் கண்டுபிடிக்க வேண்டும். அவன் வேறு எங்கும் இல்லை. தங்கள் அன்பு மகள் காவேரியின் அருகில்தான் இருக்கிறான். ஆம்... பறம்பு நாட்டில்தான் இருக்கிறான் என்று இந்த ஓலையில் தகவல் வந்திருக்கிறது; நீங்கள் அங்கே செல்ல வேண்டிய அவசியம் இல்லை. தங்களுக்கு உடல் நலமில்லை என்று காவேரிக்கு ஓலை அனுப்புங்கள். ஆசான் என்ற முறையில் தங்களைக் காணக் கண்டிப்பாய் அவனும் உடன் வருவான். தங்களின் உதவிக்கு அரசாங்க ஆட்களை மாற்றுடையில் அமர்த்திக் கொள்ளுங்கள். இந்த ஒற்றனைப் பிடித்துத் தரவேண்டியது உங்கள் கடமை. நான் வருகிறேன்."

வெகுநேரம் வரை அந்தக் குரல் அந்த மாளிகைக்குள் எதிரொலித்துக் கொண்டிருப்பதாகப் பரணருக்குத் தோன்றியது.

# 9. கபிலர் கவிதை

அமராவதி சிந்தனையில் மூழ்கிக் கிடந்தாள். அவள் சோர்வுகொண்டு சில நாட்கள் ஆகின.

ஏன்... ஏன் அவளுக்கு என்ன வந்தது? அவளுக்கே புரியாமல் ஏதோ ஒன்று அவளுக்கு வந்திருப்பதாகத் தோன்றியது. தலைப்பாகை வீரனின் வேண்டுகோள்... அதை அடுத்து அவள் காவேரியின் பேழையைக் குடைந்து அந்த ஓவியத்தைக் கண்டெடுத்தது; ஏதோ வெறுப்பு உணர்ச்சியில் அதை அந்தத் தலைப்பாகை வீரனிடம் தந்தது...

எல்லாமே உண்மைதான்! அவள் செய்தது சரியா? அவளுக்கே தெரியவில்லை.

அதன் பிறகு அவனை... அந்த வீரனைக் காணவே யில்லை! அவன் என்னவாகி இருப்பான்?

மணிமாறனைச் சந்திக்கும் வழக்கத்தையும் அமரா வதி நிறுத்திவிட்டாள்.

பாவம், மணிமாறன் காத்துக்காத்து ஏமாந்திருப் பான். இருக்கட்டுமே... அன்று··· காவேரியின் பெட்டி யைத் திறந்து அந்த ஓவியத்தை எடுத்தபோது அவள் மனம் எத்துணை ஏமாற்றத்தைச் சுமந்தது!

அது... அது மணிமாறன் ஓவியம்தான்!

அந்தத் தலைப்பாகை வீரன் சொன்னது உண்மை தான்... எல்லாமே அப்படித்தானே?

அமராவதிக்கு எதையோ தொலைத்துவிட்டுத் தேடு வதுபோல் இருந்தது. மனத்தில் உருவமில்லாத சில காட்சிகள்.

முன் கூடத்தில் கபிலர் கவிதை எழுதிக்கொண் டிருந்தார். இந்தக் காவேரியும் ஒரு கவிதைப் பைத்தியம். அவர் பாடல்களையும், விளக்கங்களையும் கேட்டுக்கொண் டிருக்கிறாள்...

ஆனால் அமராவதி...? அவள் எதையும் கேட்கும் நிலையில் இல்லை...

கபிலர் குரல் நன்றாகக் கேட்டது. "கேட்டாயா, காவேரி... தலைமகனும், தலைவியும் தினைப்புனத்தில் கண்டு பழகிய காதல் வாழ்வு ஒருவருக்கும் தெரியாத களவொழுக்கமாக இருந்து வருகிறது. ஆனால், தலைவியோடு நெருங்கிப் பழகிய தோழிக்கு மட்டும் சிறிது ஐயம். தலைவி தன்னோடு முன்போல் நெருங்கிப் பழகாததையும், தனிமையில் கவலை உற்றதையும் கண்ட தோழி தலைவியிடம் காரணம் கேட்கிறாள்..."

காவேரி இடையில் குறுக்கிட்டாள்: "தலைவி உண்மையைக் கூறி இருக்கமாட்டாளே!"

கபிலர் சிரித்தார். "உண்மைதான் காவேரி... அப் படித்தான் நிகழ்ச்சியை அமைத்திருக்கிறேன். அதில் தான் சுவை இருக்கும். தலைவி தன் தலைவனுக்கும் தனக் கும் உள்ள உறவைக் கூறவில்லை. ஆனால் தன் மன அமைதியின்மையைக் குறிப்பாகப் புலப்படுத்துகிறாள்... கவிதையைக் கேள்...

"உருவ வல்வில் பற்றி அம்பு தெரிந்து..." கபிலர் குரல் கம்பீரமாக ஒலித்தது. கபிலர் கவிதை எழுது கிறாரா? அல்லது அமராவதியை உளவு அறிகிறாரா?

அமராவதிக்குத் 'துணுக்' கென்றது. அது சரி... கொல்லையில், தோட்டத்தில் என்ன சலசலப்பு. அமராவதி மெல்ல எழுந்தாள்.

கபிலர் குரல் மீண்டும் கேட்டது. "தலைவியின் பிரிவு தலைவனை வாட்டுகிறது. தலைவியின் துன்பத்தை உணர்ந்த தோழி தலைவனுக்கு அறிவுரைப் புகட்ட விரும்புகிறாள். ஒரு நாள் தலைவன் இரவில் கொல்லையில் வேலிப்புறமாக வந்து நிற்கிறான்...தோழி கூறுகிறாள்...

"குணக்கடல் முகந்த கொள்ளை வானம்
பெருமலை மீமிசை முற்றினை ஆயின்..."

கபிலரின் குரல் மெல்ல மெல்லத் தேய்ந்தது.

அமராவதியின் கால்கள் கொல்லைப்புறம் சென்றன. அவள் காண்பது கனவல்லவே!

ஆம்... மணிமாறன்! மணிமாறன்தான் அங்கு நின்றிருந்தான். அவளைச் சந்திக்காத ஏக்கத்தை முகத்தில் தேக்கி, அவளைக் காணாததால் ஏற்பட்ட விரக தாபத்தைத் தீர்த்துக்கொள்ள வந்திருக்கின்றானா?

"நீங்களா?"—அமராவதி மெல்லக் கேட்டாள். மணிமாறன் படபடத்தான்.

"ஏன் சில தினங்களாக உன்னைக் காணவில்லை? நான் எப்படித் தவித்துப் போய்விட்டேன் தெரியுமா? உனக்கென்ன, என்மேல் கோபமா?"

இரவின் மென்காற்றின் சிலிர்ப்பில் அவன் குரல் அவள் காதுகளின் மிகச் சமீபமாகக் கிசுகிசுத்தது அமராவதி தன்னையும் அறியாமல் கண்களை மூடிக் கொண்டாள். நெஞ்சம் எதை எதையோ வெடித்துக் கொட்டத் துடிதுடித்தது.

அவன் காதல் எத்துணை உயர்வாக இருந்தால் அந்த இரவு நேரத்திலும் எத்தனையோ இடர்களைத் தாண்டி அவளை... அவள் இல்லத்திலேயே சந்திக்கும் துணிவு கொள்வான்? முன்பின் தெரியாத யாராவது இந்தக் காட்சியைக் காண நேர்ந்தால்...

அமராவதி பேச வாயெடுப்பதற்குள்... திடீரென ஒளி... எங்கிருந்து வருகிறது இந்த ஒளி? கபிலர்தான் கையில் தீவர்த்தியுடன் வந்துகொண்டிருந்தார்.

"என்னம்மா, அமராவதி, இந்த இரவு நேரத்தில் தோட்டத்தில் என்ன செய்கிறாய்?"

'சட்'டென மறைவிடத்தில் பதுங்கினான் மணிமாறன்.

ஒன்றுமில்லையப்பா..."—அமராவதி திணறினாள். சிரித்துக்கொண்டே வந்தாள் காவேரி.

"ஐயா...... பாதிக் கதையில் என்னை விட்டுவிட்டுப் போய்விட்டீர்களே ஏதோ சப்தம் கேட்கிறது என்று... தலைவி தாய்க்குத் தெரியாமல் வேலியின் பக்கம் தினம் தினம் தலைவனைச் சந்திக்கிறாள். ஐயம் கொண்ட தாய் தோழியிடம் கேட்கிறாள். தோழியிடம் என்ன சொன்னாள்... உண்மையைச் சொல்லிவிட்டாளா?"

அமராவதி திடுக்கிட்டுக் காவேரியைப் பார்த்தாள். காவேரியின் முகம் சலனமற்றுக் கிடந்தது. உண்மையில் காவேரி குறிப்பிட்டது கவிதையைத்தானா?

"சரி... சரி உள்ளே வாம்மா அமராவதி... நான் உன்னைக் காணாமல் ஒரு கணம் துடித்துப் போய் விட்டேன்"

அமராவதி பேசாமல் உள்ளே நுழைந்தாள்.

காவேரிதான் திடீரென அந்த மோனத்தைக் கலைத்தாள்.

"ஐயா... செல்வச் சிறப்பு மிக்க பூம்புகார் நகரத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். பொதியமும், இமயமும் நடுங்குவதில்லை, நிலை குலைவதில்லை; அத்தகையது பூம்புகார் எனப் பெரியவர்கள் சொல்லுவார்கள். அந்தச் சிறப்பு வாய்ந்த நகரில் சித்திரைத் திங்களில்

சித்திரை நாளில் இந்திரவிழா நடக்கவிருக்கிற தாமே... பொன்னிவள நாடான் கரிகாலன் இந்த விழாவை அதிஅற்புதமாகக் கொண்டாடுவாராமே... நாமும் போகலாமா? முக்கியமாக கடலாட்டு அன்று போய் அந்த நாட்டின் வளத்தைக் காணவேண்டும்.''

காவேரி இப்படிச் சொன்ன காரணம் இருந்தது சித்திரை மாதத்தில் சித்திரை நட்சத்திரம் கூடிய நாளில் இந்த இந்திர விழாவிற்கான கொடி ஏற்றப்படும்.

இந்த விழா இருபத்து எட்டு நாட்கள் நடக்கும். இருபத்து ஒன்பதாவது நாள் கொடி இறக்கப்பட்டு மறு நாள் கடலாட்டு நடக்கும்!

இந்த விழாவைக் காணவேண்டும் என்று காவேரி தன் விருப்பத்தை வெளியிட்டால் கிட்டத்தட்ட இன்னும் ஒரு மாத காலம் அவள் இங்கே கண்டிப்பாய்த் தங்கிச் செல்லவேண்டி நேரிடும். அதற்குள் பரணரும் வந்து விடுவார். அதற்குள் மணிமாறனையும் மடக்கு வதற்கு ஒரு வழி தேடலாம்.

இப்போதெல்லாம் அமராவதி மணிமாறனை முன் போல் சந்திக்க ஓடுவதில்லை.

அவர்களுக்குள் என்ன பிணக்கோ? காதலில் ஊட லுக்கு ஒரு தனி மகிமை உண்டல்லவா?

காவேரி தனக்குள் எண்ணியபோது கபிலரின் குரல் கேட்டது.

''காவேரி... உன் வருகை என் சூன்ய இதயத்திற்கு ஒரு சுவை தரும் தேன் விருந்தாய் இருக்கிறதம்மா. நீ இன்னும் இங்கு எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் தங்கிப்போகலாம். இது உன் வீடு. கட்டாயம் நாம் அனைவரும் காவிரிப்பூம் பட்டினத்திற்குப் பயணமாக லாம், விரைவில் அதற்குரிய ஏற்பாடுகளைச் செய்

கிறேன். என் மனம் இப்போதுதான் சில நாட்களாக ஒரு வசத்தில் இருக்கிறது. இல்லையெனில் இப்படி இன்றுபோல் நான் கவிதை எழுத உட்கார்ந்து எத்தனை நாட்கள் ஆகிவிட்டன?''

காவேரி மெல்லச் சிரித்தாள்.

''ஓ... பாரி மகளிரின் திருமணத்திற்கு ஔவையார் அவர்கள் வழி வகுப்பதாய்ச் சொன்னதால் ஏற்பட்ட மன நிறைவோ?''

''இருக்கலாம்... அந்த தமிழ்க்கிழவி ஒரு அற்புத சக்தி படைத்தவள். தமிழ் இருக்கும் இடத்தில் எல் லாம் ஔவை என்ற திருப்பெயர் கட்டாயம் இருக்கும். அவள் ஒருத்தியல்ல...... ஓராயிரம் ஔவைகள் இது போல் தோன்றுவார்கள்... தோன்றிக் கொண்டே இருப் பார்கள்...''

எச் காரணத்தாலோ கபிலரின் கண்கள் நிறைந் திருந்தன. காவேரி மெல்லப் பேசினாள்.

''உண்மைதான் ஐயா... சற்றுமுன் வருணித்தீர்களே ஒரு கவிதையில்; வாழைக் கனிகளும், பலாச் சுளைகளும் சுனை நீரில் கலந்து புளித்து முதிர்வதால் அந்நீரில் மது போன்ற சுவை ஏறுகிறது. அந்நீரைக் குடித்த குரங்கு மது மயக்கத்தில் தன்னை மறந்து சந்தன மரத்தில் ஏற முயன்று கால் தவறிக் கீழே விழுகிறது. அது விழுந்த இடமோ பூக்கள் உதிர்ந்து கிடப்பதால் 'மெத்'தென்று இருக்கிறது. அதன்மேல் குடி மயக்கத்தால் தன்னை மறந்து குரங்கு உறங்குகிறது. இதே உணர்வுதான் எனக்கு. எங்கெங்கோ ஓடிப் பறந்த என் மனமெனும் குரங்கு தங்கள் கவிதை என்கிற கள்ளால் தன்னை மறந்து இலக்கியவானில் ஏறிப் பறந்து இப்போது அன்பு

என்கிற மென்படுக்கையில் படுத்து உறங்கிக்கொண்டிருக்கிறது..."

அமராவதி கவிதைபேசும் அவ்விருவரையும் வியப்புடன் பார்த்தாள். அவள் மனமோ...?

அது எங்கோ பறந்து கொண்டிருந்தது.

## 10. இந்திர விழா

புகார் பட்டினம் விழாக்கோலம் பூண்டிருக்கிறது இந்திர விழா! அருள் செல்வம் மிக்க புகார் நாகலோகம் போல லோகத்திலும், தேவலோகம் போலப் புகழிலும் சிறந்து விளங்கியது.

குடி மக்களேயே உயிரெனப் போற்றிய வேந்தர்கள் வாழ்ந்த காலம் அது.

பழந் தமிழகத்தின் தலைசிறந்த பெருநகராய் விளங்கிய பூம்புகார் நகரம் காவிரியாறு கடலொடு கலக்குமிடத்தே தலை நிமிர்ந்து எழுந்து நின்றிருந்தது.

'பட்டினப் பாக்கம்', 'மருவூர்ப் பாக்கம்'-என இரு பெரும் பிரிவுகளாய்ப் பிரிந்து பரந்து விரிந்து கிடந்தது. பட்டினப் பாக்கத்தில் அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் வாழும் பெரும் வீதிகளும், முத்து, மணி முதலியவற்றால் மாலை தொடுப்போரும், சங்கு, பவளம் முதலியவற்றை அறுத்துக் கடைவோர் வாழும் வீதிகளும், நாடகக் கணிகையர் உறையும் தெருக்களும் இன்னும் பல்வகை இசைக் கருவிகள் இசைக்கும் வல்லுனர் வாழும் வீதிகளும் இருந்தன.

கடற்கரைப் பகுதியில் அமைந்த மருவூர்ப் பாக்கத்தின் வாணிகச் சிறப்பு பெருமை வாய்ந்தது.

கொள்வதும் மிகை கொளாது, கொடுப்பதும் குறை கொடாது வாழ்ந்த தமிழர்கள் காலம் அக்காலம். ஈதல், இசைபட வாழ்தல் - என்கிற பண்பாட்டில் ஊறித் திளைத்திருந்தனர் தமிழர்கள்.

பூம்புகார் நகரின் கீழ்மேல் பகுதியின் நடுவில் இருந்த இடை நிலத்தில் அமைக்கப்பட்டிருந்த 'நாளங் காடி' — என்ற பகற் கடைகளில், அழகுற விளங்கிய *ஐவகை மன்றங்கள் பொலிவுடன் திகழ்ந்தன.

இங்கு அமைந்திருந்த காவல் தெய்வத்திற்கு அமைக் கப்பட்ட பலி பீடிகையில் அம் மறவர் குல மகளிர் தூவிய மலர்களும், எள்ளுருண்டைகளும், நிணச்சோறு, பொங்கல் முதலியவைகளும் அங்குச் சிதறிக் கிடந்தன.

ஒருபுறம் கொற்றவைக் கூத்து நடந்துகொண்டி ருந்தது. விண்ணவர் தலைவனான இந்திரனுக்கு எடுக்கப் படும் விழா இவ்விழா. இந்திரன் தன் வச்சிரப்படையால் அரக்கரை வென்று அமரரைக் காத்தவன்.

அதனால் அகத்திய முனிவர் ஆணைப்படி தூங்கெயில் எறிந்த தொடித்தோள் செம்பியன் காலம் முதல் வழி வழியாகச் சோழ வேந்தர் இந்திரனுக்குத் திருவிழா எடுத்து வந்தனர்.

*'இந் நல் விழாவில் நாடும், அரசும் நலமுறும். இப்பெரு விழாவை மறுத்தால் - மறந்தால் மன்பதை பாழ்படும்' - என மக்கள் நம்பினர்.

---

* ஐவகை மன்றங்கள் : 1. வெள்ளிடை மன்றம் 2. இலஞ்சி மன்றம் 3. நெடுங்கல் மன்றம் 4. பூதச் சதுக்கம் 5. பாவை மன்றம்.

* தாலமி என்ற யவன ஆசிரியர் தாம் எழுதிய பூகோள நூலில் புகார் நகரின் பழம் சிறப்புக்களைக் கூறும் போது இவ்விழாவைப் பற்றியும் கூறியுள்ளார்.

இந்திரன் கோவிலில் காப்புக் கட்டி விழா ஆரம்பமாகிவிட்டது. நிலைபெற்ற கற்பகத் தருவின் கோட்டத்திலுள்ள மங்கல நெடுங்கொடி வானுறப் பறந்து கொண்டு இருந்தது.

புகார் நகரின் வீதியில் பசும் பொன்னால் செய்த பூரண கும்பங்களும், பாலிகைகளும், பாவை விளக்குகளும், பசும் பொற்கொடிகளும், தூய மயிற்பீலிகளும், அழகிய சுண்ணப் பொருள்களும் செறிந்து கிடந்தன. ஆயிரத்து எட்டுக் கலசங்களில் தண்ணறுங் காவிரியின் புண்ணிய நன்னீர் கொண்டு மண்ணகமும், வானகமும் வியப்ப விண்ணவர் தலைவனுக்கு விழுநீர் ஆட்டினர்.

விழா முரசு முழங்கிக்கொண்டிருந்தது. சோழ வேந்தன் அருள் கொண்டு தன் பகைவரை எல்லாம் இவ்விழா நாளின் நல்லதொரு இனிய நினைவாகச் சிறையிலிருந்து விடுதலை செய்தான். பண்ணும், பாடலும் எண் திசையும் முழங்கின.

எல்லாவற்றையும் பெருவியப்புடன் பார்த்துக் கொண்டே வந்தனர் அமராவதியும், காவேரியும்.

அந்தச் சிறு பெண்களுக்கு இணையாக நடக்க முடியாத கபிலர் ஆங்காங்கே சிறிது தங்கி இளைப்பாறினர். சத்திரங்களும், நீர்ப் பந்தல்களும் நிறைந்த அவ்விடத்தில் அன்பின் பெருக்கம் தெரிந்தது.

தம் துன்பங்களையெல்லாம் மறந்து அந்த இரு பெண்களும் நீண்ட நாட்களுக்குப் பிறகு அன்றுதான் மனம்விட்டுச் சிரித்தனர்.

புகார் நகரத்து அழகையெல்லாம் காணவேண்டி *'நகர்காண் ஏணி'யில் ஏறிச்சென்று பார்த்துக் களித்தனர். கபிலர் கீழேயே தங்கி விட்டார்.

---

* நகர்காண் ஏணி — லைட்ஹவுஸ்.

"அடேயப்பா இப்போது எவ்வளவு உயரத்தில் இருக்கிறோம்" என்று சின்னக் குழந்தைபோல் ஆர்ப்பரித்தாள் காவேரி. அமராவதி மனத்துள் சிரித்துக்கொண்டாள்.

'என்னைவிட என்றுமே நீ உயரத்தில்தான் இருந்திருக்கிறாய்...' மனத்தில் எத்தனையோ நினைவுகள்.

அன்று இருளின் அந்தச் சந்திப்புக்குப் பிறகு மணிமாறனை அவள் காணவேயில்லை.

இனம் புரியாத எதிரிகளால் தான் சூழப்பட்டிருப்பதாகக் கூறினானே...... ஒருவேளை மணிமாறனுக்கு மீண்டும் ஆபத்தோ?

அமராவதியை உலுக்கினாள் காவேரி.

"என்ன அமராவதி சிந்தனை?"

"ஒன்றுமில்லையே..." அவள் சிரிக்க முயன்றாள்.

"மேலே இருந்து கீழே பார்க்கும்போது மனிதர்கள் எல்லாம் எவ்வளவு சிறியவர்களாகத் தோன்றுகிறார்கள் என்று நினைத்துப் பார்த்தேன்." - அமராவதி மெல்லச் சமாளித்தபடி கூறினாள்.

காவேரி மனத்துள் சிரித்தாள். 'உன் மனத்தை எட்டாதஉயரத்தில் நிறுத்தி வைத்துக் கொண்டு மற்றவர் உள்ளத்தை எடை போடும்போது அவைகள் அற்பப் புழுக்களாகத்தான் தெரியும்!'

"என்னைச் சொல்லிவிட்டு நீ என்ன செய்கிறாய்?" அமராவதி சிரித்தபடி கேட்டபோது காவேரி சுய உணர்வு பெற்றாள். பரணிடமிருந்து ஒரு தகவலும் வரவில்லை.

நாட்கள் கடந்ததுதான் மிச்சம். அவள் எழுதிய இலை போய்ச் சேர்ந்திருக்குமோ? அல்லது... நாட்களைக்

கடத்திக் கடத்திக் கடைசியில் இந்திரவிழா முடிவு கட்டத்தை நெருங்கியபோது கபிலர் பரபரத்தார்.

''விழாவைக் காணவேண்டும் என்றுயே அம்மா'' - என்று கூறி அவர்களைப் புகார் நகரத்திற்கு அழைத்து வந்துவிட்டார். வந்ததும் நகரின் சிறப்பு அவள் இதயத்தை நிறைத்தது என்னவோ உண்மை... ஆனல் மனமோ? ஒருவேளை இப்போது அப்பா கபிலரைத் தேடி வந்திருப்பாரோ? காவேரி மீண்டும் கற்பனையில் மூழ்கினுள்.

ஆம்! யாரோ கபிலரைத் தேடி வந்திருந்தனர். பரணரின் ஓலையை எடுத்துக்கொண்டு வந்த அந்த வீரன் பூட்டிய வீட்டின் கதவுகளைக் கண்டு திகைத்தான். அவன் தகவல் சேகரித்துச் சோர்ந்த உள்ளத்துடன் அந்த மரத்தின் அடியில் இளைப்பாறியபோது.........

குதிரையின் குளம்படிச் சப்தம் கேட்டு நிமிர்ந்தான் அவன். வந்தது மணிமாறன் தான்.

இளைப்பாறும் அந்தப் புதிய வீரனைக் கண்ட மணி மாறன் இயற்கையாய் எழும் ஆவலால் உந்தப்பட்ட வனுக விபரம் கேட்ட போது.........

அந்த வீரன் கூறியதைக் கேட்ட மணிமாறன் திகைத் தான். பரணா படுத்த படுக்கையாகக் கிடக்கிருர்!

அவன் காட்டிய ஓலையில் சிரித்தவை பரணரின் எழுத்துக்கள் தாம்.

காவேரிக்கு அழைப்பு விடுத்திருக்கிருர் ஊர் திரும்பச் சொல்லி. அப்படியானல் காவேரி இங்கு தான் இருக்கிருளா? மணிமாறனுக்கு ஒரே வியப்பு. இந்தத் தலைப்பாகை வீரனை நம்பினுல் அவ்வளவுதான் போலிருக்கிறது. என்ன என்னவோ திட்டம்போட்டான்.

அமராவதியைக் காதலிப்பதுபோல் நடி என்றான். மணி மாறனும் துணிவுடன் செயலில் இறங்கினான். இப்போது அவனையே காணவில்லையே! காவேரி இங்கிருப்பதை ஏன் அவன் மணிமாறனிடம் கூறவில்லை?

எக்காரணத்தாலோ வழக்கமாக வரும் அமராவதி சில தினங்கள் வராமற் போகவே அவளைக் காணவேண்டி அன்று... அன்று கொல்லைப்புற வழியாக அவள் இல்லம் போனபோது...... நினைவுகளால் மெய் சிலிர்த்தது.

அவன் மறைவிடத்தில் பதுங்கியபோது ஒலித்த அந்த இன்னொரு குரல் காவேரியினுடையதா?

இருட்டில் பதுங்கிக் கிடந்ததால் கண்களுக்கு உண்மை தெரியாமல் இருந்திருக்கலாம். ஆனால், இந்த இதயத்திற்கு எப்படி அது உறைக்காமல் போயிற்று?

காவேரியின் பிரிவால் மனமுடைந்து கிடந்த அவன் உள்ளத்திற்கு அமராவதியின் நட்பு இதமாக இருந்தது என்னவோ உண்மைதான். உறங்கிக் கிடந்த அவன் உணர்வுகளைத் தட்டி யெழுப்பி அமராவதியைக் காதலிக்கத் தூண்டியதே அந்தத் தலைப்பாகை வீரன் தான்!

ஏன்? அதனால் ஏற்பட்ட அந்த மன விகாரங்கள்... அவளோடு பேசிக்கொண்டிருந்தாலாவது உள்ளத்தின் புகைச்சல் தீரும் எனக் கருதித்தானே அமராவதியை அன்று அந்த இரவு நேரத்திலும் தேடிப் போனான்.

தான் ஏதோ ஒரு கண்ணியில் சிக்கிக்கொண்டதாக அவனுக்குத் தோன்றியது.

அவன் நினைவுகள்... அவன் கனவுகள்... எல்லாம் பாழாகிப் போன உணர்வு...

சிதைந்த எண்ணங்கள்... ஒரு பெருமூச்சு விட்டான் மணிமாறன். கபிலரும், அமராவதியும் இந்திர விழா பார்க்கப் புகார் பட்டினம் போயிருப்பதாகத் தகவல் தெரிந்தது.

ஒருவேளை அவர்களுடன் காவேரியும் போயிருப்பாளோ? இனி என்ன ஆனாலும் இங்கே தாமதிப்பதில் அர்த்தமில்லை. அவன் காவேரி இங்குதான் இருக்கிறாள். எனவே அவன் சேரநாட்டில் புகுவதால் அவளுக்கு எவ்வித இடையூறும் ஏற்பட நியாயமில்லை.

பரணரைக் கண்டுவிட்டுச் சேரநாடு வந்த சுவடு தெரியாமல் மறுபடியும் இங்கே திரும்பிவிடவேண்டும்.

அந்த ஓலை... ? அப்பப்பா ... என்ன பயங்கரமான செய்தியை அது அறிவிக்கிறது!

அதனால்தானே இளவரசன் என்ற பட்டத்தைக் கூடத் துறந்து அவன் இப்படி அல்லல்பட வேண்டி இருக்கிறது! ஒரு வேளை... ஒருவேளை அவன் சேரநாட்டில் அடி எடுத்து வைப்பதால் காவேரிக்கு ஏதும் ஆபத்து நேர்ந்துவிட்டால்... அவனிடம் அப்படித்தான் அறிவிக்கப்பட்டது. நேராது... நேரக்கூடாது.

அதற்குள் அவன் ஊர் திரும்பி விடவேண்டும். முடியுமானால் புகாருக்கே போய்க் காவேரியை காண வேண்டும். மணிமாறன் தெளிவு பெற்றான். அடுத்த கணம் — அவன் ஏறி இருந்த குதிரை காற்றினும் கன வேகமாகப் பறந்தது.

"என்னடி சிந்தனை?" - அமராவதி காவேரியை உலுக்கினாள்.

"ஒன்றுமில்லை......" - என்ற காவேரியின் முகம் ஒரு கணம் வெளிறியது.

"அமராவதி...... அதோபார்... கடந்த சில தினங்களாக நானும் கவனிக்கிறேன். நாம் இந்த நகரத்தில் நுழைந்ததிலிருந்து அந்த ஆள் நம்மை அடிக்கடி கண்காணிக்கிறான். இன்று அவனுடன் இன்னொருவன் வேறு." அமராவதி தூரத்தில் தெரிந்த அந்த இரு உருவங்களையும் பார்த்தாள்.

ஒன்று...?

திருக்கண்ணன்!

அந்த மற்றவன்...? அவன்தான் புதியவனோ? அவளுக்குத் தெரியாது.

எக் காரணத்தாலோ அவள் தேகம் நடுங்கியது.

நாம் இருவரும் இங்கே தனியாக இருப்பது சரியில்லை. வா கீழே போய்விடலாம்." — அமராவதி அவசரப் பட்டாள்.

அந்த இருவரில் ஒருவன் மற்றவனின் காதுகளில் என்னவோ சொல்லிவிட்டு உடனே ஓடி மறைந்தான்.

அந்த மற்றவன்...

ஐயோ .. அவன் நகர்காண் ஏணியை நோக்கி அல்லவா வருகிறான்?

ஊரே விழாக் கோலம் பூண்டிருந்தாலும் அவர்கள் இருந்த அந்த இடம் தனிமையாக இருந்தது.

ஊரின் கோலாகலத்தைத்தான் அவர்களால் காண முடிந்தது. ஆனால் அவர்களின் துன்பத்தை ஊரால் காணமுடியவில்லை. அமராவதியும், காவேரியும் வேகமாக அப்படிகளின் வழியே இறங்கினர்.

திடீரென ... அவர்களின் முன் ஒரு கரிய கரம் மறை விடத்திலிருந்து நீண்டது. அது கரமா? இல்லை. நச்சுப் பாம்பின் கொடிய நாக்கு!

''வீல்''- எனக் கத்தியபடி காவேரி மூர்ச்சையானாள். தோழியைத் தோளில் சுமந்து கொண்ட அமராவதி செய்வதறியாது திகைத்து நின்றாள்.

வெளியிலோ...? விழா முரசின் வெற்றி ஒலி கேட்கிறது. மகிழ்ச்சி ஆரவாரத்தில் திளைத்த மக்கள் சுண்ணப் பொடிகளை வாரிவாரி இறைத்தபடி மகிழ்வாட்டம் போட்டுக்கொண்டு செல்லும் ஓசை கேட்கிறது.

காவேரியின் அவல ஓலம் அந்த மகிழ்வின் ஓசையில் அடங்கிப் போய்விட்டது!

ஓலமிடும் சக்தியையும் இழந்து... அப்படி ஓலமிட்டாலும் அது வீண்தான் என்கிற நினைப்பின் வசத்தில் அமராவதி கற்சிலையாய் நிற்கிறாள்!

யுகம் யுகமாகத் தான் அப்படியே நின்று கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது அவளுக்கு!

# 1. அன்றிற் பறவை

இரவு நேரத்தின் கருமை இருளின் கனமான போர்வையுள் மூங்கிய அந்த வெள்ளைப் புரவிகூடக் கறுத்துப் போயிற்றே?

ஆனால் அதன் சீரான காலடி ஓசை... பனைமரத்தின் மேல் இருந்து இரவு நேரத்தில் கேட்கும் அன்றிற் பறவையின் கூக்குரல் மணிமாறனை ஏனோ ஒரு கணம் திகைக்க வைத்தது.

அன்றிற் பறவைகள் ஒன்றையொன்று பிரியின் உயிர் வாழ்ந்திராத தன்மை உடையன ஆயிற்றே! ஒரு பறவைக்கு இருக்கும் காதல் உணர்வும், அன்பின் நெருக்கமும் மனிதர்களுக்கு ஏன் இல்லாமல் போயிற்று?

பறவைகளுக்கு அரசியல் கிடையாது... ஆனால் மனிதர்கள் அப்படிப்பட்டவர்கள் அல்லவே! மணிமாறனின் எண்ணங்கள் எங்கெங்கோ கடந்து சென்றன. அவன் பாதை கூடத்தான்! மலை நாடாம் குறிஞ்சித் திணையைக் கடந்த அந்தப் புரவி முல்லை வனத்தையும் கடந்தது.

ஆண் மகனாகிய தலைமகன் தனக்குரிய கடமை உணர்வுகளால் தலைவியை விட்டுப் பிரிந்து செல்கிறான் கார் பருவத்தே தவறாமல் வந்துவிடுவதாக உறுதி கூறிச் செல்கிறான். இந்த ஒழுக்கத்தினை உணர்த்தும் முல்லை வனம்...

மணிமாறன் காவேரியை அப்படியா விட்டுப் பிரிந்தான்? இல்லையே! அன்று...

குதிரையில் கட்டப்பட்டிருந்த நிலையில் காவேரி எப்படி வீடு போய்ச் சேர்ந்தாளோ என்பதை அறியும் ஆர்வத்தில், துடிப்பில், தன் அன்புத் தாயாம் ராணியிடம்கூடச் சொல்லிக் கொள்ளாமல் அந்தப்புரத்தின் மாடத்தின் வழியாக அவன் தப்பிச் சென்றது தவருே?

அவன் அப்படி தலைதெறிக்க ஓடிக்கொண்டிருந்த போதுதானே அந்தத் தலைப்பாகை வீரன் அவனை இடைமறித்தான் குதிரையில்! அது மட்டுமா? அவன் யாரிடமும் சொல்லிக் கொண்டு போக முடியாதபடி அல்லவா செய்துவிட்டான்.

அவன் அறிவித்த அந்தச் செய்தி! பரணர் செய்த தவறினால் காவேரியை ஆபத்து சூழ்ந்திருக்கின்றதாம்! மணிமாறன் அவர்களை விட்டு விலகவில்லை என்றால் காவேரி கொல்லப்படுவாளாம். பரணருடைய தவறினால் எத்தனை பேர் பலியாகப் போகிறார்கள்!

மணிமாறன் எண்ணிய எண்ணங்கள்... கட்டிய கோட்டைகள்... அவ்வளவும் பாழ்! பாழ்!!

அத்துடன் அவனை விட்டானா அந்தப் பொல்லாத வீரன்! காவேரி, பரணர் இருவரின் நன்மைக்காகத் தானே மணிமாறன் சேரநாட்டைத் துறந்தான்! மீண்டும் அதே பயமுறுத்தலுடன் பறம்பு நாட்டிற்கும் அல்லவா பின் தொடர்ந்து வந்துவிட்டான்!

வந்தது மட்டுமல்ல... என்ன என்ன குழறுபடிகள் செய்து விட்டான்!

மணிமாறன் பெருமூச்செறிந்தான். இன்னும் கொஞ்சம் தூரம்தான்... இந்த இரவுப்பொழுது தேய்வதற்குள்... ஒளியின் கிரணங்கள் உலகில் படர்வதற்கு முன் அவன் பரணரைக் கண்டுவிட வேண்டும்.

அந்தத் தெய்வத்தின் காலடியில் கண்ணீர் சோர நின்று கதறி அழவேண்டும். யாரும் காணுமல் இதைச் செய்து முடிக்க வேண்டும். முடியுமா?

தன் 'உண்மை' நிலையினை அவரிடம் கூறி மன்னிப்புக் கேட்கவேண்டும்.

மணிமாறன் தனக்குள் சிரித்துக் கொண்டான். பாவம்... பரணர் ... அவரும் இதில் சம்பந்தப்பட்டவர் தாமே!

மணிமாறனுக்கு அப்போதுதான் தோன்றியது. தான் செய்தது பெரிய தவறென்று.

குற்றவாளிகளான 'அந்த' இருவருமே சேர்ந்து தவறுக்குப் பிராயச்சித்தம் செய்வதை விட்டுவிட்டுத் திடீரென எதிர்பாராத உண்மையின் சந்திப்பைக் கண்டு திகைத்துப் பரணரைத் தனியே விட்டுச் சென்றதுதான் பெரிய தவருே?

பாவம்... அந்தக் கலைக்கிழவர்! அரசியலின் சூதுக்குத் தம்மையும் அறியாமல் சிக்கிக்கொண்டு என்ன தவிப்பு தவித்தாரோ? எப்படிச் சமாளித்தாரோ?

நல் ஆசானின் நல்ல சீடனுக இருந்து, குருதக்ஷிணை தர வேண்டிய சமயத்தில், மணிமாறன் திடீரெனத் தோற்றுப்போய் ஏன் கோழையாக மாறினுன்?

அவனுக்கே புரியவில்லை! காவேரியின்மீது அவன் கொண்ட அளவுகடந்த பாசத்தாலா? அல்லது... அல்லது... அந்த ஓலை தந்த திடீர் அதிர்ச்சியாலா?

எண்ணங்கள் முடிவடைவதற்குள் பாதை முடிந்து விட்டதை உணர்ந்த மணிமாறன் மெல்லக் குதிரையை விட்டுக் கீழே இறங்கினுன்.

இனி நடந்துதான் செல்ல வேண்டும்! குதிரையை அந்த மரத்தடியில் கட்டியவன் மெல்ல நடக்க ஆரம்பித்தான்......

பழைய நினைவுகள். பழைய பாதைகள். ஆனல் பழைய உறவுகள் அற்றுப்போன தனிமை! அவனுக்கு மட்டும்தான் சொந்தமோ?

அதோ... அதோ பரணர் குடில். குடிலின் முன்னே பூத்துக் குலுங்கிய தோட்டம் ஏன் இப்போது பொலிவிழந்து காணப்படுகிறது? கரிய மேக மூட்டத்திலிருந்து விடுபட்ட நிலவின் திடீர் ஒளி மணிமாறனின் கண்களைக் கூச வைத்ததுபோல் இருந்தது.

காவேரியின் மென் கை பட்டுத்துளிர்த்த தோட்டம் ஏன் இப்படி வெறுமைக் கோலம் பூண்டிருக்கிறது? மணிமாறன் மெல்ல... மெல்ல ஒற்றையடிப் பாதை வழியே நடக்க ஆரம்பித்தான்.

இதென்ன... இதென்ன...? பரணர் வீட்டைச் சுற்றி இவ்வளவு ஆட்களின் நடமாட்டம்?

ஒருகணம் மணிமாறன் உற்றுக் கவனித்தான். மாற்றுடையில் இருந்தாலும் அவ்வளவுபேரும் அரசாங்க ஆட்கள் என்பது புரிபட வெகு நேரமாகவில்லை. அவனுக்கு மணிமாறனின் இரத்தம் கொதித்தது.

பரணர் கவியாக இல்லை... கைதியாக... கௌரவக் கைதியாக இருக்கிருர்!

ஆஹா! மணிமாறன் எவ்வளவு பெரிய தவறைச் செய்துவிட்டான்! பரணர் நன்மைஎனக் கருதி அவரைப் பார்க்காமலே இருந்துவிட்டது எத்தனைத் தவருன செயல்!

அவன் பரணரின் அன்புச் சீடன்! அவன் கற்ற கல்விக்குக் கைம்மாறு செய்யவேண்டிய காலம் இதோ... இதோ இப்போது கிடைத்திருக்கிறது. மணிமாறன் எதிர்க்க வேண்டியது...? சேரனையா? இருக்கட்டுமே! கடமைதான் பெரிது! மணிமாறன் ஒரு முடிவு எடுப்பதற்குள் பரணரின் குடிசைக் கதவுகள் திறந்தன.

வெளியே வந்தது...? மணிமாறனால் தன் கண்களை நம்ப முடியவில்லை!

## 2. மூங்கில் முத்து

கடலிலிருந்து நல்முத்துக்கள் கிடைக்கின்றன. அதேபோல்தான் மூங்கிற் கணுக்களிலிருந்தும் திரட்சி கொண்ட முத்துக்கள் கிடைக்கும் என்பார்கள். இரண்டும் ஒன்றாகிவிடுமா? நத்தையின் முத்தும், சிப்பியின் முத்தும் ஒன்றுதானா?

மணிமாறன் தனக்குள் ஓய்வின்றிச் சிந்தித்துக் கொண்டே இருந்தான்.

வேடர்கள் தேனிறால்களை அழித்துக் கொண்டு தேனை மட்டும் எடுத்துச் செல்வார்களாம். அவர்கள் சென்றபின் தேனற்றுச் சிதைந்த தித்திப்பான இறால்கள் தரையில் ஆதரவற்றுக் கிடப்பதைப்போல்... கிடப்பதைப்போல்... எல்லோராலும் சிதைக்கப்பட்ட மணிமாறன் இன்று... இன்று சாறு எடுக்கப்பட்ட சக்கையாக ஆதரவற்றுக் கிடக்கிறானே? அவன் யார் என்ற உண்மை நினைவுப்படுத்தபடாதவரை அவன் எவ்வளவு மகிழ்வுடன் இருந்தான்!

காவேரியுடன் சரிக்குச் சரியாக விளையாடிக் கொண்டு, வேடிக்கைப் பேச்சுக்கள் பேசிக்கொண்டு நேரத்தை எவ்வளவு இனிமையாகக் கழித்தான்.

காவேரி வயதடைந்தபின்தான் ஒருநாள்... ஒரு நாள் ... பரணர் கூப்பிட்டுச் சொன்னார்.

அவன் ... அவன் இளவரசனும்! ... சேர அரசர் செங்குட்டுவரின் அருமை மகனும்...... மறந்துபோனவை நினைவுக்கு வந்தமாதிரி இருந்தது மணிமாறனுக்கு.

உள்ளத்தின் உற்சாகம் திடீரெனக் கரைபுரண்டு ஓடிய மாதிரியும் இருந்தது.

அவன் காவேரியுடன் பழகுவதைப் பரணர் தவருக எடை போட்டிருப்பாரோ? அதனுல்தான் இப்படி எச்சரிக்கை விடுத்திருக்கின்ருரோ என்றுகூட அவன் எண்ணியதுண்டு. ஆனுல்... ஆனுல் காவேரியின் மீது அவன் கொண்ட பாசத்தையும், அன்பையும், காதலையும் அவனுல் துறக்கவே முடியவில்லை!

மதிப்பு திடீரென உயர்வதாலோ அல்லது தாழ்வதாலோ அன்பும், காதலும் வற்றிவிடுமா என்ன?

அவன் இன்ப மிதப்பில் மிதந்து கொண்டிருந்த போதுதான் ராணியை ... அவன் தாயை...... அவன் வணங்க நினைத்த அந்த உருவத்தைத் திடீரெனச் சந்திக்கும் பாக்கியம் நிகழ்ந்தது!

ஆனுல்...... ஆனுல் ...... அந்த மகிழ்வு நீடிப்பதற்குள்தான் அடுத்தடுத்து எத்தனை அதிர்ச்சிகள்! உண்மை இத்தனை பயங்கரமாகச் சுடுமா என்ன? பழியும், பாவமும், பொய்மையும் இப்படிக் கிளையூன்றி நாற்புறமும் பரவுமா என்ன?

மலை உயரத்தில் நடப்பட்டிருக்கும் கொடியின் தோற்றம் எவ்வளவு தொலைவுவரை துல்யமாகத் தெரிகிறது! நல்லதும், நன்மையும் இப்படித் தெரியுமோ? இந்தப் பொய்மையும், வஞ்சனையும் கொண்ட உலகில் எப்படி நன்மையையும், தீமையையும் 'இனம்' பிரித்துக் காண்பது?

மருத வளத்தின் செழுமைபோல் அவனுள் இருந்ததே ஒரே இனிய நினைவு காவேரி! மற்றதெல்லாம் வளமற்றதும், வறட்சிமிக்கதும், வெம்மையானதுமான பாலைவனப் பகுதிதான்!

மணிமாறன் பெருமுச்செறிந்தான். அன்றைய அந்தக் காட்சிக்குப் பிறகு பரணர் வீட்டை எப்படி அடைந்து அவரைச் சந்திப்பது என்று புரியாத நிலை அவனுக்கு. பிறர் சந்தேகிக்காவண்ணம், இதனால் பரணருக்கு ஊறுநேராவண்ணம் அல்லவா அவன் செயல் இருக்க வேண்டும்.

நல்லவேளை... அந்தப் பாழ்மண்டபத்தில் யாரோ ஒரு சன்யாஸி தன் உடைகளை விட்டுச் சென்றதும் ஒரு விதத்தில் நல்லதுதான். இந்தச் சன்யாஸி உடைக்குள் இருக்கும் மணிமாறனை யாரும் அடையாளம் கண்டு கொள்ள முடியாது... தர்மசத்திரத்தில் சாப்பாடு கிடைத்துவிடுகிறது. ஆனால்... ஆனால் பரணரை எப்படிச் சந்திப்பது? அத்தனைக் கட்டுக்காவல்களையும் மீறி அவன் அவரைச் சந்திப்பதைவிட அவரை வெளியே வரவழைத்து அவனால் சந்திக்க முடியுமா?

அவன் யோசித்தான்... அவன் அங்கு நுழைவதால் சண்டை மூளலாம் ... குழப்பம் நேரிடலாம்... சந்தேகங்கள் எழலாம்... பரணருக்கு இடையூறு விளைவிக்கும் இவற்றைத் தடுக்க வேறு வழி...? வேறு என்ன வழி?

நாட்கள் நகர்ந்துகொண்டிருந்தனவேயன்றி வழி புலப்படவில்லை... அன்று...

பாழ் மண்டபத்தின் அந்தத் திண்ணை உடலை உறுத்தியது. ஆனால் உள்ளத்தை உறுத்தும் எண்ணற்ற நினைவுகளை என்ன செய்வது? எங்கே கொண்டு போய்க் கொட்டுவது?

திடீரென... மெல்லிய பேச்சொலி... யாரோ திணறும் ஓசை... வளையல்கள் உரசும் சப்தம்...

மணிமாறனின் உணர்வுகள் விழிப்புற்றன. 'சட்' டென எழுந்து மறைவிடத்தில் பதுங்கினான்.

ஒரு வீரன் ஒரு பெண்ணை கட்டி இழுத்துக்கொண்டு வந்து கொண்டிருந்தான். வாய் கட்டப்பட்ட நிலையில் அவள் இருந்தாள்.

அவள் மூச்சுவிடக்கூட முடியாத நிலையில் திணறிக் கொண்டிருப்பதை அந்த ஒலிகளின் கேவல்களினால் மணிமாறனால் உணர முடிந்தது

மங்கிய நிலவின் ஒளியில் இதைவிட அவனால் பார்க்க முடியவில்லை.

அந்த வீரன் அவளை இழுத்துக்கொண்டு எங்கே போகிறான்? அதோ... அதோ... அந்த மரத்தோரமாகக் கட்டப்பட்டிருக்கும் குதிரையை நோக்கி அல்லவா போகிறான்?

மணிமாறன் சற்றும் முற்றும் பார்த்தான். வேறு யாரும் இல்லை! ஒரே ஒரு வீரன்!

மணிமாறன் சண்டை இடக்கூடாது என்றுதான் நினைத்திருந்தான். என்ன செய்வது? தினவெடுத்த தோள்களையும், துடிக்கின்ற பெண்மையின் அவல ஓலத்

தையும் அவனால் இலட்சியம் செய்யாமல் இருக்க முடிய வில்லை. மணிமாறன் தீர்மானித்து விட்டான்.

அடுத்த கணம் .. சிறிது நேரத்திற்கு அந்த இடம் போர்க்களமாக இருந்தது. மல்யுத்த வீரர்களாக அவர் கள் இருவரும் அங்கே சண்டையிட்டதை, கட்டப்பட்டி ருந்த குதிரையும், அதேபோல் கிட்டத்தட்ட கட்டப்பட் டிருந்த அந்தப் பெண்ணும்தான் வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தனர்.

சிறிது நேரத்தில் அந்த வீரனை வீழ்த்திவிட வெற்றிச் சிரிப்புடன் அந்த வீரனின் சேரநாட்டு உடை களை அணிந்து சேரநாட்டு வீரனைப்போல் உருவம் மாறிய மணிமாறன், அந்தப் பெண் அருகே வந்தான்.

கட்டவிழ்க்கப்பட்டதும் அவனை உற்றுப்பார்த்த அவன் மறுகணம், "நீயா?" என வியப்புடன் கூவினான். அவள் திகைத்து நின்றாள்.

## 3. ராணியின் சிந்தனை

சேரமாதேவி சிந்தனையில் மூழ்கிக் கிடந்தாள்.

அரசர் போருக்குப் புறப்பட்டுப் போய்ப் பல நாட் கள் ஆகிவிட்டன.

நாட்களா அவை? எத்தனை வேதனைமயமான பிரிவு... பிரிவே எப்போதும் துன்பம்தான்...... ஆனால்... இப்படிப்பட்ட சூழலில்... பல பயங்கரங்களின் இடையே ஏற்படும் இந்தப் பிரிவு...

அரசியலில் இருப்பவர்கள் மட்டுமே உணரக்கூடிய வேதனையான பிரிவு!

ராணியின் இதயத்தை ஏதோ ஒன்று முள்ளாக உறுத்தியது. பழைய நினைவுகள் படம் விரித்தாடின...

அந்தத் தலைப்பாகை வீரன் அதன்பிறகு வரவே

ஏன்? ஏன்?

மணிமாறனைக் கண்டவுடன் அவள் உள்ளத்தில் ஏற்பட்ட மகிழ்ச்சி... அது அடங்குவதற்குள் அவள் அறிந்த அந்தச் செய்தி! அதன்பின் மணிமாறனின் மறைவு...! எல்லாமே கனவு போலத்தான் இருந்தது!

இப்போது... இப்போது புதிதாக அறிமுகம் செய்யப் பட்டிருக்கிறானே, ஒருவன் இளவரசன் என்று!

உண்மையில் அவன் யார்? அவனை நம்பி அரசரும் போர்க்களத்திற்கு அனுப்பி இருக்கிறாரே!

அரசர் அறியாததா?

ஏனோ அந்தத் தலைப்பாகை வீரனைப் பற்றி அரச ரிடம் சொல்லும் துணிவு அவளுக்கு வரவில்லை...

ஒன்றைச் சொன்னால் ஒன்பதைக் காணும் கூர்மை யான கண்கள் அரசருடையவை...

ராணியால் தப்பமுடியாது... மனத்தின் இரகசியங் களே தூக்க முடியாத ஒரு சுமையாக, பாரமாக இத யத்தை அழுத்தியது என்னவோ உண்மைதான். தன் சொந்த சுக, துக்கங்களைக் கூடச் சுமக்கமுடியாத அத்தனைப் பலவீனமான இதயமா அவளுடையது?

அப்படியானால் அரசர் நாட்டின் அத்தனை இன்பத் தையும், துன்பத்தையும், இரகசியத்தையும் எப்படித் தான் சுமக்கிறாரோ? ஒருவேளை... ஒருவேளை... மணி மாறனை அவள் கண்டிராவிட்டால் இளவரசன் என

அறிமுகப்படுத்தப்பட்டவனை அன்புடன் வரவேற்றிருப் பாளோ என்னவோ?

ஆனால்··· அரசர் எதிரில் தம் தடுமாற்றங்களையும், வேதனைகளையும் காட்டிக்கொள்ள முடியாமல்தான் அவள் திணறினாள். "மகனே" — எனக் கதறித் துடிக்க மனம் விழைந்தாலும் ஏதோ ஒன்று தடுத்தது!

பழைய சந்திப்பு ஒன்று நினைவுக்கு வந்துவந்து, அவள் எண்ணங்களை ஏன் இப்படிக் கலைக்கிறது?

அவள் எப்படியோ சமாளித்துத்தான் விட்டாள். ஆனால்··· ஆனால்...?

தாய்மை அன்பை முற்றும் அவளால் ஏன் தர முடியவில்லை?

நல்லவேளை... இந்த யுத்தம் வந்ததும்... அதனால் இளவரசன் போர்க்களம் போனதும் ஒரு விதத்தில் நல்லதுதான்··· அரசரும் நாட்டில் இல்லாத நேரத்தில் பிரிவின் இந்தத் தனிமையில் நேரத்தின் சுமை நெஞ்சைப் பாரமாக அழுத்தியபோதுதான் ஒரு யுக்தி தோன்றியது.

ஆ! அப்படிச் செய்தால் என்ன?

அவள் அறிந்த இரகசியத்தை யாரிடமுமே சொல்ல முடியாத நிலை அவள் நிலை! ஏன்? அரசரிடம் கூட···

அதை அறிந்தவன் அந்தத் தலைப்பாகை வீரன். அவனையும் காணவில்லை...

இதே இரகசியத்தை அறிந்த இன்னும் ஒரே ஓர் ஆள்··· வேறு வழியில்லை...... அவரைத்தான் கேட்க வேண்டும்.

அந்த நினைவுடன்தான் அன்று அவள் பரணர் குடிலைத் தேடிப் போனாள்!

ராணி தனக்குள் மெல்லச் சிரித்துக்கொண்டாள்.

அன்று... அன்று அவனைக் கண்டதும்தான் பரணர் என்னமாக ஆடிப்போய்விட்டார்!

சேரமாதேவி அந்தச் சின்னஞ் சிறு குடிலுக்குள் வருவாள் என்பதை அவர் கற்பனைக்கூடச் செய்து பார்த்திருக்கமாட்டார்!

ஆனால்... ஆனால்...

அவர் 'அந்த' உண்மையை மறுக்கவில்லை! ஒப்புக்கொண்டு விட்டாரே!

ராணிக்கும் இந்தச் செய்தி தெரியும் என்றதும் என்னமாய் துடித்துப் போய் விட்டார்!

ராணியின் காலிலே வீழ்ந்து கெஞ்சாத குறையாக, "எனக்குக் கொஞ்சம் அவகாசம் தாருங்கள்... அரசரிடம் மட்டும் இதை அறிவித்து விடாதீர்கள்... நான்... நான் மணிமாறனைக் கண்டுபிடித்துத் தருகிறேன்" - என்று கதறித் துடித்தாரே!

ராணிக்கு ஒருபுறம் அவரைப் பார்க்கப் பாவமாகவும், மற்றொருபுறம் வேதனையாகவும் இருந்தது. இந்தக் கிழட்டுப் புலவரால் எத்தனைக் குழப்பங்கள்! மனத்தின் மூலையில் சினமும்கூட எழுந்தது.

அரசரோ மணிமாறனைத் தம் மகன் என உணராமல் எதிரி என நினைத்துச் சினம் கொண்டிருக்கிறார்! அரசரிடம் உண்மையைச் சொல்லிவிடலாம் என்றாலோ மணிமாறன் நாட்டிலேயே இல்லை! மணிமாறன் என்ற பெயரில் இன்னொருவன் அரண்மனைக்குள் புகுத்தப்பட்டிருக்கிறான்!

அரசர் மன்னிப்பாரா?

"தேவி... பாரதப்போர் நடந்து கொண்டிருந்த போது சத்தியத்தின் திருஉருவங்களாக இருந்த பஞ்ச பாண்டவர் பக்கத்திலிருந்து துணைபுரிந்தவர் உதியஞ் சேரல் என்ற சேர அரசர். அந்த வம்சத்தில் உதித்தவர் நம் மன்னர். நல்லவர்களுக்குத் துணைசெய்ய என்றும் தயங்கமாட்டார். என் போதாத காலம் என்னை இப் படிச் சித்திரவதை செய்கிறது. எனக்குத் தயவுசெய்து ஒரு சந்தர்ப்பம் தாருங்கள், தேவி... நான் போட்ட முடிச்சுக்களை நானே அவிழ்த்து விடுகிறேன்..."

பரணரின் கெஞ்சுதல் ராணியின் இதயத்தைத் தொட்டது. அதன் பின்? அதன் பின்...?

"தேவி... தங்களைக் காண நம்நாட்டு ஒற்றன் ஒருவன் வந்திருக்கிறுன்." ஒரு கணம் வியப்பு ராணியி னுள் பரவியது. ஒருவேளை... ஒருவேளை... அந்தத் தலைப் பாகை வீரனுக இருக்குமோ?

"வரச் சொல்"–உத்திரவைப் பிறப்பித்தவள் அந்த ஒற்றனுக்காகக் காத்திருந்தாள் ஆவலுடன்.

வந்தது...? யாரோ ஒருவன்! சாமியார் வேட ஜடா முடியும், சேர நாட்டு வீரனின் ஆடையுமாகத் தோற்ற மளித்த மணிமாறனை அவளால் 'இனம்' கண்டுபிடிக்க முடியவில்லை!

மணிமாறன் நிம்மதிப் பெருமூச்சொன்றை விட்டான்! ராணியின் கண்கள் ஆர்வத்துடன் அவனுடன் வந்திருந்த அந்தப் பெண்ணைப் பார்த்தன. அவள் யார்?

"தேவி!...நான் நம் நாட்டின் ஒற்றன். அரசர் ஆணைப்படி பரணர் மகளான காவேரியை அழைத்து வந்திருக்கிறேன், பறம்பு மலை நாட்டிலிருந்து. தங்கள்

அனுமதியுடன் இவளைப் பரணரிடம் சேர்ப்பிக்க வேண்டும் என்பது அரசர் உத்தரவு.''

ராணி அந்தப் பெண்ணை உற்றுப் பார்த்தாள். சிறு வயதில் பார்த்தது காவேரியை. எவ்வளவு வளர்ந்து விட்டாள்!

ராணியின் பார்வையைத் தாங்கும் சக்தி அமராவதியின் கண்களுக்கு இல்லை! அமராவதி தலை குனிந்தாள். மணிமாறனின் கண்கள் அவளை எச்சரித்தன.

## 4. எதிர்பாராச் செய்தி!

அமராவதியின் தேகம் ஏன் அப்படி நடுங்கியது?

அவளுக்கே தெரியவில்லை... அன்று... அன்று இந்திர விழாவில் நடந்த அந்தச் சம்பவம்...

மயக்கமடைந்த காவேரியை அப்படியே விட்டுவிட்டு அவளை மட்டும் அவர்கள் கடத்தி வந்த மர்மம்

பாவம் அப்பா... மகளைக் காணுமல் என்ன பாடுபடுகிருரோ? பாவம்... காவேரி இன்னேரம் என்னவாகி இருப்பாள்?

அமராவதிக்குச் சிரிப்புத்தான் வந்தது. அவள் நிலைமைதான் இப்போது கவலைக்கிடமானது... ஆனல்... ஆனல் அதைக்கூட மறந்துவிட்டு அவள பிறரைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கிருள்!

சில நாட்கள் எங்கோ சிறை வைக்கப்பட்டிருந்தது. அதன்பின்... அதன்பின் குதிரையில் அவள் கடத்திச் செல்லப்பட்டது... பிறகு... பிறகு... பாழ்மண்டபத்தில் மணிமாறனல் சிறை மீட்கப்பட்டது! இல்லை... இல்லை

அவள் சிறை மீட்கப்படவில்லை... ஒவ்வொரு கையாக அவள் மாறி வந்தாலும் அவள் இன்னமும் 'கைதி'தான்!

மணிமாறனைக் கண்டவுடன் அவள் உள்ளம் துள்ளிய அந்தத் துள்ளல்... ஆனால், அதே சமயம் அவனின் சில மர்மமான நடவடிக்கைகள்! ஏன்? ஏன்?

ஒவ்வொருவரும் ஏன் இப்படிப் புதிதாய் நடந்து கொள்கிறார்கள்?

ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதத்தில் இரகசியங்களை ஒளித்து வைத்துக்கொண்டு ஏதோ இந்திர ஜாலம் செய்வதாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்!

மணிமாறன் கையினால் அடிபட்ட திருக்கண்ணனைப் பார்த்தபோது அவளுக்குப் பாவமாக இருந்தது. அடுத்தகணம் அந்தப் 'பாவம்' பழி தீர்க்கும் 'பாவத்தில்' மாறியது.

இன்னமும் நன்றாக நினைவிருக்கிறது அவளுக்கு... அத்தையின் வீட்டில்... முள்ளூர் மலைப் பகுதியில்தான் அவள் வாழ்வின் பெரும் பகுதி கழிந்திருக்கிறது. அந்த இடம் மலையமான் திருமுடிக்காரியின் ஆட்சிக்கு உட்பட்ட இடம்!

அப்போது... அப்போதுதான் திருக்கண்ணனின் சந்திப்பு அவளுடன் நிகழ்ந்தது.

அவள் இலட்சியங்களில், அவள் கனவுகளில், அவள் பாதைகளில் குறுக்கிட அவன் யார்?

நெருப்பிலே பூ மலருமா? ஏன்கூடாது? வாழ்வின் சில செயல்கள் தியாகம் என்ற நெருப்பிலே தகிக்கப்படும் போதுதான் கடமை என்ற பூ மலருகிறதோ? அவளின் எத்தனை எத்தனை செயல்களுக்கு இந்தத் திருக்கண்ணன் இடையூறாக நின்றிருக்கிறான்.

அவள் தன் அத்தையின் வீட்டில் ஆனந்தமாகக் கழித்த நாட்கள்...

அவள் சந்திக்க நேரிட்ட போர்க்களம்... இதய மாகிய போர்க்களம்.

அப்பப்பா, என்ன பெரிய நெடிய கனவு! எவ்வளவு இடமாற்றங்கள்... மன மாற்றங்கள்... இப்போது?.ஆளே மாற்றம்...! ஏன் இந்த மணிமாறன் அவளைக் காவேரி என நடிக்கச் சொல்கிறான்.

சேரமாதேவி காவேரியை இதற்குமரன் கண்ட தில்லையோ? மணிமாறன் கையால் அடிப்பட்ட திருக் கண்ணன் சுருண்டு விழுந்ததைக் கண்டபோது அவளுள் ஒரு திருப்தி! நன்றாகவேண்டும் என மனத்துள் பழி தீர்க்கும் ஒரு நிம்மதி!

அமராவதியின் எண்ணங்கள் கலைந்தன, ராணியின் குரல் கேட்டு.

''காவேரி... சுகமா அம்மா?''

உண்மையைக் கூற அமராவதியின் உள்ளம் துடி துடித்தது. நான் காவேரி அல்ல எனக் கதற வேண்டும் என்கிற துடிப்பு! ஆனால் மணிமாறனின் முன் பேசத் துணியாத தயக்கம்... அவள்... அவள் இதயத்தின் ஓர் ஓரத்தில் அந்த அன்பு உருவத்திற்கு இருக்கும் ஒரு தனி இடம்! அவன் வெறுத்தாலும் அவளால் அவனை ஒதுக்க முடியாத அன்பு... அவள் தோற்றுப் போய் விட்டாளா?

''என்ன காவேரி, மோனமாய் இருக்கிறாய்? வெளியூர் போய் இருந்தாயாமே? கபிலரைப் பார்த்தாயா? எப்படி இருக்கிறார்? பரணர் அடிக்கடி அவரைப் பற்றிக் கூறுவார்.''

அமராவதியின் கண்கள் நிறைந்தன.

மணிமாறனின் இதயம் படபடத்தது. அவனுக்கு இப்போதே பரணரைக் காணவேண்டும் என்கிற துடிப்பு. அவன் இடையில் குறுக்கிட்டான்.

"மன்னிக்கவும் தேவி... தாங்கள் விரைவில் அனுமதி தந்தால் இந்தப் பெண்ணை அவள் தந்தையிடம் ஒப்படைத்துவிட்டு நான் போர்க்களம் போகவேண்டும். அனுமதி தருகிறீர்களா?"

ஏனோ ஒருகணம் ராணியின் முகம் மாறியது. அவள் அவசரமாகப் பேசினாள்.

"என்னிடம் ஒப்படைத்து விட்டாய் அல்லவா? நான் இவளை அவள் தந்தையிடம் சேர்த்து விடுகிறேன். நீ கவலைப்பட வேண்டாம். நீ போய்க்கொள்."

ராணியின் பேச்சைக் கேட்ட மணிமாறனின் தலை சுற்றியது. அவன் போட்ட திட்டங்கள் அவ்வளவும் பாழாகிவிட்ட பிரமை. சேரமாதேவியை அணுகினால் பல்லக்கு வைத்து அமராவதியை அனுப்புவாள். அவளுடன் எவ்வித இடையூறும் இன்றித் தானும் பரணர் குடியில் நுழைந்து விஷயங்களை விளக்கலாம் என நினைத்தால், இதென்ன புதிய எதிர்பாராச் செய்தி? ஆயினும் அவன் மனம் தளரவில்லை.

"மன்னிக்க வேண்டும் தேவி. நம் அரசரின் குணம் தாங்கள் அறியாததா? தான் சொல்லியபடி நான் செய்யவில்லை என்பதை உணர்ந்தால் அரசரின் சினத்திற்கு ஈடு கொடுக்கும் சக்தி எனக்கில்லை. 'பரணரைச் சந்தித்தாயா?' என்று கேட்டால் அந்தக் கேள்விக்குப் பதில் இல்லாமல் நான் எப்படிப் போவேன்?"

மணிமாறனின் பேச்சைக் கேட்ட ராணி ஒருகணம் திடுக்கிட்டாள்.

உண்மைதான்... அரசரின் சினம் அவள் அறியாதது அல்ல... ஆனால்... ஆனால்... இப்போது..?

ராணியின் திடீர் மோனத்தைக் கண்ட மணிமாறன்

ராணியும் ஏதோ தப்புச் செய்திருக்க வேண்டும். அது என்னவாக இருக்கும்?

சிறிது நேரத்திற்குப் பிறகு ராணியே மோனத்தைக் கலைத்தாள்.

"நீ பரணரைச் சந்திக்க முடியாது."

"ஏன்? ஏன்?"—மணிமாறன் பரபரத்தான்.

"அவர் இப்போது தம் குடிலில் இல்லை..."

"தேவி!..." மணிமாறன் அலறிவிட்டான்.

"நீ சேர நாட்டு ஒற்றன்தானே? உனக்குத் தெரிவதால் தப்பில்லை. பரணரின் சீடன் ஒருவன் மணிமாறன் என்று... அவனைக் கண்டுபிடிக்கத்தான் அவரே கிளம்பி இருக்கிறார். நான்தான் விசேஷ அனுமதி தந்தேன்."

மணிமாறனுக்குத் தலை சுற்றியது.

## 5. கலைந்த வேடம்

'இடுக்கண் வருங்கால் நகுக'-என்று திருவள்ளுவர் கூறியது வேதவாக்காக இருக்கலாம். ஆனால் அந்த இடுக்கண் மணிமாறனின் வாழ்வின்—அவன் வெற்றிப் பாதையின்—ஒவ்வொரு திருப்பத்திலும் நின்று சிரிக்கிறதே!

மணிமாறன் பரணரைத் தேடி வந்திருக்கிறான்! அவரோ அவனைத் தேடிக் கிளம்பி இருக்கிறார்! இந்த

நேர்மாமுன செயலில் இதயங்களின் இணைந்த அன்பின் நெருக்கம் சிரிப்பது என்னவோ உண்மைதான்!

இனியும்... இனியும் உண்மையை மூடி மறைப்பதில் பயனில்லை... இதனால் அரசியாருக்குத் துன்பம் நேர்ந் தாலும் சரி ... உண்மையைக் கூறிவிடத்தான் வேண்டும்.

மணிமாறன் முடிவெடுத்தான். அடுத்த கணம்... அவன் ஜடாமுடியும், வேடமும் கலைந்தன. பழைய மணிமாறனாக ராணியின் எதிரில் நின்றிருந்தான். ராணியோ செய்வதறியாது திகைத்து நின்றாள்.

பாசத்தின் மிகுதியால் அவள் உதடுகள் துடிதுடித் தன.

"மணிமாறு... நீ... நீயா?"

அவனைத் தழுவ அவள் கரம் நீட்டி வந்தபோது 'சட்'டெனக் குனிந்து அவள் கால்களைத் தொட்டு வணங்கினான் அவன்.

ராணியின் கண்ணீர் முத்துக்கள் அவன் சென்னி யில் வீழ்ந்தன.

"தாயே நான்... நான்... உங்கள் மகன் அல்ல... உங்கள் மகனென நினைக்கும் மணிமாறன் நான் அல்ல... நான் அல்ல..."

ராணி அதிர்ச்சி அடையாதது அவனுக்கு வியப்பாக இருந்தது.

அமராவதியோ ஒன்றுமே தோன்றாமல் இந்த நாடகத்தை வியப்புடன் பார்த்துக் கொண்டிருந்தாள். சிறிது நேர மௌனத்திற்குப் பிறகு ராணி மெல்லப் பேசினாள்.

"எனக்குத் தெரியும் மணிமாறு... அரசர் பரணரிடம் ஒப்படைத்த என் பிள்ளை நீ அல்ல... ஆனாலும் நீ அரசர்

அனைவரிடமும் சுட்டிக் காட்டப்பட்டாய். சூழ்ச்சி வலையில் தன்னையும் அறியாமல் சிக்கிய பரணர் தவித்துத் தத்தளித்துக் கொண்டிருக்கிறார். நீ எங்கள் மகன் அல்ல என்றால் :மாற்றப்பட்ட அந்த மற்றவன் என்னவானான்? யாரால் மாற்றப்பட்டான்? அவன் எங்கிருக்கிறான்?''

ராணியின் குரல் மெல்ல மெல்லத் தழுதழுத்தது. மணிமாறனின் உள்ளத்தில் பழைய நினைவுகள் மெல்ல மெல்ல இடம் பெற்றன...

அவன் வாழ்ந்த அந்த மலைப்பகுதி... அவன் அறிந்த சுற்றம்... சின்னஞ்சிறு வயதில் அவன் தன் அன்புத் தந்தைக்குத் தந்த வாக்குறுதி... எல்லாம்... எல்லாம் மெல்ல மெல்ல நினைவுக்கு வந்தன.

தான் யார் என்பதை மறந்திருந்தவனுக்கு அதை மீண்டும் நினைத்துப் பார்க்கும் அவசியம் நேரிட்டு விட்டது. பத்து வயதுவரை வாழ்ந்திருந்த அந்தப் பழைய நினைவுகள்... பழைய இடங்கள்... பழைய உறவுகள்...... ஆனாலும் அவன் இளவரசனாக வேடம் போட வேண்டிய அவசியம் நேரிட்டு விட்டது!

காரணம்...? அவனுக்கே தெரியாது!

அவனுக்குத் தெரிந்ததெல்லாம் ஒன்றே ஒன்று தான்... தந்தையின் வாக்குக்குக் கட்டுப்பட்டுப் பத்து வயதுப் பாலகனாய் இருக்கும்போதே பரணரிடம் வந்தது, குருகுலவாசம் செய்தது, காவேரியின் அன்பைப் பெற்றது... எல்லாமே அழகிய நினைவுகள்...அதன் பின்... அதன் பின்...?

அரசரின் பெருமங்கல விழா வந்தாலும் வந்தது... அரசரின் ஐம்பதாவது பிறந்த நாள் நாட்டிற்கு அத்தனை நல்லதில்லையோ?

பரணரின் நன்மைக்காக என நினைத்து அவன் மேற்கொண்ட செயல்கள் அனைத்தும் பைத்தியக்காரத்தனம் ஆனவையோ? மணிமாறனின் சிந்தனைகளில் ராணி குறுக்கிட்டாள்.

''என்ன மணிமாறு, சிந்தனை? நீ எங்கள் இளவரசன் குட்டுவஞ் சேரல் அல்ல என்றால் நீ யார்? நீ யாருடைய மகன்? உன்னைப் பற்றிய விவரங்கள் பரணருக்கும் தெரிவிக்கப்படவில்லை! இங்கு இளவரசன் என்ற பெயரில் வந்திருப்பவன் யார்? உண்மையில் நீங்கள் யாருடைய கைக் கூலிகள்?'' ராணியின் குரலில் கோபம் தொனித்தாலும் அதில் அன்பின் பாகம் அதிகமிருந்தது.

முதன் முதலில் மணிமாறனைப் பார்த்து அவனையே தன் மகன் என்று நினைந்துவிட்ட அன்பின் பெருமிதம் சுடர்விட்டது.

மணிமாறனின் கண்கள் கலங்கின. கரும்பு கழனியில்தான் விளையும். களர் நிலத்தில் விளையுமோ? அவன் குற்றங்களைக் கூடக் கருதாமல் அவன் மீது தாய்ப்பாசம் கொண்டிருக்கும் ராணியின் பெருந்தன்மையைக் கண்டு அவன் இதயத்தில் ஊற்றுக் கிளம்பியது.

''நான்... நான் யார் மகன் என்று கேட்கிறீர்கள் தேவி? நான்தான் தங்கள் அன்பினுக்குகந்த...''

அமராவதி ஆவலுடன் காத்திருந்தாள் அடுத்த பதத்திற்காக.

அதற்குள் ... வீரன் ஒருவன் ஓலையுடன் வந்திருக்கும் செய்தியைச் சேடி அறிவித்தாள். ராணியின் அனுமதி பெற்று உள்ளே வந்தவன் அந்த ஓலையை ராணியிடம் தந்தான். அரசரிடமிருந்து வந்திருக்கும் ஓலை அது! ராணி பயந்தபடி ஓலையைப் பிரித்தாள்.

# 6. பழைய நினைவுகள்

ஆம்பலும் தாமரையும் கலந்து அழகாகப் படர்ந்து சிரிக்கும் பெரிய நீர்நிலை அது.

பெருங் காற்று வீசுகிறது. பருத்த தாமரை மலர் காற்றின் அலைசலினால் அலைப்புறாமல் இருக்கிறது. ஆனால், ஆம்பல் மலர்களோ தலை அசைந்து இப்படியும் அப்படியும் ஆடுகின்றன. பரணருக்கு இக்காட்சியைக் கண்டதும் வேறொன்று நினைவுக்கு வருகிறது.

சினம் கொண்ட அரச குமாரியை அவள் தோழிகள் தலை வணங்கி வணங்கித் தொழுவதைப் போல் தோன்றியது அவருக்கு.

தான் இருக்கும் நிலையினையும் மறந்து அவர் இப்படி இயற்கைக் காட்சியில் மூழ்கி இருப்பது அவருக்கே வியப்பாகவும், வேடிக்கையாகவும் இருந்தது.

நாட்டிலும், காட்டிலும் வாழ்ந்து பழகியவர். பற்பல அரசர்களையும், குறுநில மன்னர்களையும், வள்ளல்களையும் கண்டு பாடிப் பரிசில் பல பெற்றவர்.

அந்த நாட்கள் ..? கவலையின்றிப் பாணனைச் சுற்றித் திரிந்த அந்த நாட்கள்தாம் எத்தனை இனிமை நிறைந்தவை. பந்தபாசம் இன்றிப் பறந்து திரிந்த நாட்கள்...

கான மயிலுக்குக் கலிங்கம் கொடுத்த பொதினி மலையைச் சேர்ந்த பேகனின் நினைவு, அவன் தன் அன்பு மனையாட்டியைப் பிரிந்தபோது அவனுக்கு அறிவுரை கூறிய நினைவு, நன்னனுக்கு நற்பண்புகள் கூறிய அன்பு, கொல்லி மலை ஓரியின் வில் வன்மையைப் பற்றி வியந்து பாராட்டிய புகழுரைகள் எல்லாமே பழைய நினைவுகள்... மீண்டும் மீண்டும் அவை மெல்ல மெல்ல ஏனோ நினைவுக்கு வருகின்றன.

பாவம் ஓரி... தன் உயிர் நண்பன் *சேரனுக்காக மலையமான் திருமுடிக்காரி இந்த ஓரியைக் கொன்று, கொல்லி மலையைச் சேரனுக்குத் தந்தனனே!

மீண்டும் நினைவுகள் எங்கோ திரும்பின.

இனிமை நிறைந்த சுனை நீரினை உடைய பறம்பு மலை நினைவுக்கு வந்தது. நல்லிசைக் கபிலரின் நினைவும் நயமுடன் வந்ததில் வியப்பில்லை.

வாய்மொழிக் கபிலரின் நட்பு! பாணர் குலத்தில் பிறந்த பாரணருக்கும், அந்தணர் குலத்தில் உதித்த கபில ருக்கும் இடையில் ஏற்பட்ட அழியா நட்பு! முத்தமிழ் கபிலர் அவர் மூச்சின் ஜீவனாய் ஒளிர்ந்த இனிமை!

நட்பு மலர்வது அன்பெனும் இதய மட்டத்தில்... ஏற்றத் தாழ்வெனும் அறிவு மட்டத்தில் அல்ல... பரணரின் கண்கள் நிறைந்தன.

பறம்புமலை முற்றுகை இடப்பட்டிருந்தபோது அறிவிற் சிறந்த கபிலர் கிளிகளைப் பயிற்றுவித்துக் கோட்டைக்கு வெளியில் இருந்து நெற்கதிர்களைக் கொணரச் செய்து மக்கள் பசியைப் போக்கினாராமே! என்னே அவர் அறிவின் திறமை! அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்ற ஐந்து பண்புகளையும்.... சான்றோருக்கு உரிய அந்த ஐந்து பண்புகளையும் பெற்றி ருக்கும் கபிலர் உயிர் நண்பராகக் கிடைக்கப் பெற்றது பரணரின் பாக்கியமே!

நீண்ட நாட்களுக்குப் பிறகு ஏனோ மீண்டும் மீண்டும் பழைய நினைவுகள் வருகின்றன.

---

* "காரி, செல்லா நல்லிசை நிறுத்தவல்வில்
ஓரிக் கொன்று சேரலர்க்கீத்த
செவ்வேர்ப் பலவின் பயங்கெழு கொல்லி..."

பரணர்... பறவைபோல் சுற்றித் திரிந்த பரணர் மாறிவிட்டார்! இல்லை...... மாற்றப்பட்டார்! எப்போதி லிருந்து? காவேரி கிடைத்ததிலிருந்தா? ஆம்; அத்துடன் சேரனின் அன்பு அவரை வளைத்துப் போட்டது என்னவோ உண்மைதான்... மேலும் குட்டுவஞ் சேரலை யும் கண்காணிக்க வேண்டிய பொறுப்பு! பரணர் தம் பொறுப்பைச் செவ்வனே நிறைவேற்றினரா? இன்றும் நன்ருக நினைவிருக்கிறது அவருக்கு...... அன்று...

அரசனைப் புகழ்ந்து பாடிவிட்டு வெற்றிப் பெருமிதத் துடன், பீடு நடை போட்டபடி அரசன் தந்த அன்புப் பரிசில்களைப் பெற்ருரே! அப்போது அரசன் ஏன் தன் அன்பு மகன் குட்டுவஞ்சேரலையும் பரிசாகத் தந்தான்? ஏன்? குருகுல வாசம் செய்வது அக்கால முறையாக இருந்தாலும் பரணர் சரியான குருவாகத்தான் நடந்து கொண்டாரா? இளவரசனையும், பரிசில்களையும் அவர் பெற்றுக் கொண்டு வரும்போது....

வழியில்... வழியில் என்ன நடந்தது? இப்போது நினைத்தாலும் பரணரின் மேனி நடுநடுங்கியது.

திடீரென எங்கிருந்து வந்தனர் அவ்வளவு முகமூடி மனிதர்கள்? பல்லக்குச் சுமந்த ஆட்களை ஈவு இரக்க மின்றிக் கொல்லவும் துணிந்த கயவர்கள்!

பல்லக்கில் அமர்ந்து கொண்டிருந்த இளவரசன் பத்து வயதுப் பாலகன்... பரணர் பொறுப்பில் ஒப்படைக் கப்பட்ட சேரர் குலக்கொழுந்து... அவர் எதிரில் கடத் தப்பட்டான்... பரணர் கட்டப்பட்டிருந்தார். கண் களும், இதயமும் துடியாய்த் துடித்தன. பலன்...?

வந்த கூட்டத்தில் முகமூடி அணிந்தவர்களில் தலைவன்போல் இருந்தவன் கூறினன் ..

"ஓய் புலவரே... இளவரசன் கடத்தப்பட்டது யாருக்கும் தெரிவிக்கப்படக்கூடாது. இதோ இந்தச் சிறுவன்தான் இனி இளவரசன். சில வருடங்கள் வரை இவனை வெளியில் விடக்கூடாது. பிறகு யாருக்கும் அவ்வளவு சுலபத்தில் அடையாளம் தெரியாது. இந்த விஷயத்தை வெளியில் தெரிவித்தீரோ அன்றே உண்மை இளவரசன் கொல்லப்படுவான்... மிக முக்கியமான அரசியல் நெருக்கடிக்காக இப்படிச் செய்ய வேண்டி இருக்கிறது. கவனம்."

பரணர் செய்வதறியாது திகைத்தார்.

"இங்கு நடந்த அவ்வளவு நிகழ்ச்சிகளையும் இதோ இந்த ஓலையில் எழுதிக் கையெழுத்திட்டுத் தாரும். நாளை சமயம் வரும்போது உண்மை இளவரசன் யார் என்பதை நிரூபிக்க இந்த ஓலைதான் பயன்படும்."

வேறு வழியில்லை... பரணர் அவன் வற்புறுத்தலுக் குப் பணிந்தார்.

நடந்த நிகழ்ச்சிகளை அப்படியே அந்த ஓலையில் எழுதினார். பிறகு... அந்தத் தலைவன் ஒப்படைத்த அந்தச் சிறுவனைப் பல்லக்கில் ஏற்றிக் கொண்டார்.

வேறு ஆட்கள் பல்லக்கைச் சுமக்க, சோகத்தை இதயம் சுமக்கத் தம் இல்லம் வந்தார் பரணர்.

ஆனால், அந்தத் தலைவன் ஒப்படைத்த அந்தச் சிறுவன் அப்படி ஒன்றும் பைத்தியக்காரன் அல்ல. புத்திசாலி... அறிவாளி... திறமைசாலி. இல்லையெனில் அவன் யார் என்பதை ஆயிரம் முறை கேட்டபோதும் சிரித்தபடியே, "சத்தியம் செய்திருக்கிறேன் சொல்வ தில்லை என"- எனக் கூறி மறுத்து விட்டானே! அந்தச் சிறுவனின் புத்திசாலித்தனத்தால் பரணர் மெல்ல மெல்ல இந்த நிகழ்ச்சியை மறந்தே விட்டார் எனலாம்.

ஆனாலும் நெஞ்சின் உறுத்தல் ஒரோர் சமயம் அதிக மாகவே குத்தியதும் உண்டு. உண்மை இளவரசன் என்னவானான்? அவனுக்கு ஆபத்து ஏதுமில்லையே - என்கிற சிந்தனை அவருள் எழுந்து கொண்டேதான இருக்கும்.

ஆனால், இளவரசனை ஒப்படைக்க வேண்டிய நாள் நெருங்க நெருங்கப் பரணர் துடித்த துடிப்பு .. போதாக் குறைக்கு அவர் என்றோ எழுதித்தந்த ஓலை திடீரென இப்படி விஸ்வரூபம் எடுக்கும் எனக் கண்டாரா அவர்.

அவரால் மணிமாறனையும் காப்பாற்ற முடியவில்லை; உண்மை இளவரசனையும் கண்டுபிடிக்க முடியவில்லை... இனி இந்த உண்மையை மறைத்து வைப்பதால் என்ன பயன்? யாரிடம் சொல்வது? எப்படிச் சொல்வது? எப்படிக் கண்டுபிடிப்பது?

அரசரிடம் தெரிவிக்க முடியாத நிலை; ராணியின் விசேஷ அனுமதி பெற்று வெளியில் வந்தது என்னவோ உண்மை ... ஆனால் எப்படிக் கண்டு பிடிப்பது? கவிதைக்கு உபமானம் காணலாம்! காணாமல் போனவனுக்கு என்ன செய்வது?

பரணருக்குப் புரியவில்லை.

நேரே அரசர் காலடியில் வீழ்ந்து அன்றே மன்னிப் புக் கேட்டிருந்தால் இன்று இத்தனை விபரீதம் நேர்ந் திராது.

இனி என்ன செய்வது? உண்மையை வெளியில் சொன்னால் உண்மை இளவரசனுக்கு ஆபத்து என அவரிடம் உறுதிமொழி வாங்கியவர்கள் அவர் எழுதித் தந்த ஓலையை ஏன் இப்படிக் காற்றில் பறக்க விட்டு விட்டார்கள்?

பரணர் தம்மையும் அறியாமல் நீண்ட நேரம் சிந்தனையில் மூழ்கிக் கிடந்தார்.

பாவம் காவேரி... ஜனகருக்குச் சீதை பூமியில் கிடைத்ததைப் போல் பரணருக்குப் பொழில் ஒன்றில் கிடைத்த புதையல் செல்வம் அல்லவா அவள்?

பற்றற்று வாழ்ந்திருந்த பரணரைப் பாசத்தின் கயிறுகளால் கட்டிப் போட்டவள் அல்லவா அவள்?

பெருந் மகளுக்குத் தந்தையான பரணர் பெற்ற பாசத்திற்கும் மேலாக அல்லவா காவேரியைக் கவனித்து வந்தார். பேதைப் பெண்... அவளுக்குத் தன்னைப் பற்றி ஏதும் தெரியாது... தெரியவும் வேண்டாம்...

அவள் பரணர் மகளாகவே இருந்துவிட்டுப் போகட்டும். பரணர் ஒரு நெடியப் பெருமூச்சு விட்டார்.

அதே சமயம்... சற்றுத் தொலைவில் இருந்த புதரில் சலசலப்புச் சப்தம் கேட்டது.

பரணர் 'சட்'டென மறைவிடத்தில் அமர்ந்தார். அப்புதரிலிருந்து ஒரு வாலிபன் அங்கும் இங்கும் பார்த்தபடி மெல்ல எழுந்து வந்தான்.

அவன் தலையில் ஒரு பெரிய கட்டு இருந்தது... அந்தக் கட்டில் ரத்தத்தின் கசிவு இருந்ததால் அது சமீபத்தில் உண்டான காயம் எனத் தெரிந்தது. பகல் நேரமானதால் பரணருக்கு அவன் முகம் நன்றாகத் தெரிந்தது.

பரணர் உற்றுப் பார்த்தார்.

திருக்கண்ணன்!

இவன் எங்கே இங்கே வந்தான்! கேள்வியோடு அவர் உள்ளத்தில் மகிழ்வும் பிறந்தது. குழப்பங்களுக்குப் பாதிக் காரணம் இவன்தானே? இவ்வளவு நாட்கள்

காணுதவன் இப்போது கிடைத்திருக்கிருன். இவனையும் விட்டுவிடக் கூடாது என நினைத்தவர்...

"திருக்கண்ணன்!"

அவர் குரல் கேட்ட திருக்கண்ணன் ஒருகணம் வியப்படைந்தான். மறைவிடத்தில் இருந்துவந்த பரணரைக் கண்டு திகைத்தான்.

"நீங்களா? நீங்கள் அரசரின் காவலில் இல்லை?"

அவன் கேள்வி அவருக்குச் சிரிப்பைத் தந்தது. நன்று, அடிக்கடி வந்து போகாவிட்டாலும் விஷயங்களை அவ்வப்போது கேட்டு வைத்திருப்பான் போல் இருக்கிறதே!

"எல்லாம் விவரமாகச் சொல்கிறேன்... உன்னுேடு நிறையப் பேசவேண்டும்... இப்படி வா...

பரணரின் கட்டளைக்கு அடிபணிந்தவன் போல் திருக்கண்ணன் நடந்தாலும் அவன் மனம் தீவிரமாய்ச் சிந்தித்துக் கொண்டிருந்தது.

## 7. மலையமான் தியாகம்

ஓலையைப் பிரித்த ராணியின் கரங்கள் நடுங்கின. ஆனுல் ஓலை அறிவித்த செய்தி...?

மகிழ்வின் தெறிப்புக்கள் ராணியின் முகமண்டலத்தின் நெடுகிலும் சிறுசிறு கீற்றுகளாகப் பரவின.

மணிமாறன் காத்திருந்தான்; அமராவதி காத்திருந்தாள்.

வந்த வீரன் விடைபெற்றுச் சென்று விட்டான். ராணி மெல்ல மோனத்தைக் கலைத்தாள்.

"மணிமாறு! கழனிகள் மிகுந்த சோழ நாட்டில் நம் அரசரின் அம்மான் இறந்த பின், அவன் மகன் ஆட்சித் தலைமை ஏற்றப்படுவதைத் தடுத்து, சோழர் குலத்தில் வந்த சோழன் ஒன்பதின்மர் நாட்டில் அமைதியைக் குலைத்துப் பெருங் கலகம் விளைவித்துக் கொண்டிருந் தனர். அம்மான் சேயான பெருநற்கிள்ளி முள்ளூர் மலைப் பகுதியில் ஓடி ஒளிந்தனன். பெருநற்கிள்ளிக்கு உதவும் பொருட்டு மலையமான் நம் அரசரிடம் படை உதவி கேட்டு வந்ததும் அரசர் அதனை ஒப்புக்கொண் டதும் நீ அறிந்திருப்பாய் என நினைக்கிறேன். ஆனால் அரசர் உடனே போருக்குக் கிளம்பாமல் காலந்தாழ்த்தி வந்தார். ஏதோ பற்பல அவசர வேலைகளில் மூழ்கி இருந்தார். இப்போதோ... அரசர் படை கொண்டு போனபோது...

"எதிரிகள் சின்னபின்னமாகச் சிதைக்கப்பட்டனர்! அந்த வெற்றிச் செய்தியை அறிவித்துத்தான் இந்த ஓலை வந்திருக்கிறது. உறையூருக்குத் தென்பால் உள்ள நேரி வாயில் என்னுமிடத்தே சோழன் ஒன்பதின்மரையும் எதிர்த்துப் போராடி ஒரே நாளில் அவர்களை அழித்த நம் அரசர் இரும்பாதவனமெனும் நகரிலும் இன்னொரு வெற்றிச் செயல் புரிந்து வீரம் காட்டிவிட்டு விரைவில் நாடு திரும்புவதாகச் செய்தி அறிவித்திருக்கிறார். அம்மான் சேயை அரியணையில் ஏற்றிவிட்டால் அவர் கடமைகள் தீர்ந்ததெனக் கூறி ஓலையை முடித் திருக்கின்றார்..."

ராணியின் பேச்சில் வெற்றியின் மதர்ப்பு இருந்தது. தன் வீரக் கணவரின் சாகஸச் செயல்களை எண்ணி அவள் உள்ளம் விம்மித் துடித்த பூரிப்பு தெரிந்தது. மணி மாறன் ஓரளவு மனச் சமாதானம் அடைந்தான்.

குட்டுவஞ்சேரல் எம்மூர் பகுதியைக் காண எனதிருப் பிடம் வந்திருந்தபோது என் மகன்... தற்போது மணிமாறனாக இருப்பவனுடன் நட்பு எற்பட்டது. அந்த இரு சிறுவர்களும் அன்புடன் ஓடியாடித் திரிந்ததை கண்டபோது என்னுள் ஆனந்தம் விளைந்தது. ஆனால் கூடிய சீக்கிரம் இந்த ஆனந்தம் கரைந்தது. குட்டுவஞ் சேரலைக் கொல்ல, பகைவர் தருணம் பார்த்திருக்கின் றனர் என்கிற தகவல் எனக்குக் கிடைத்தபோது துடி துடித்துப் போனேன். அரசரிடம்கூட இச்சேதியை அறிவித்தேன். அரசர் அலட்சியமாகச் சிரித்தார். ஊர் மக்களின் நலனில் அக்கறை கொண்டிட்ட அரசருக்குத் தன் மகனைப்பற்றிய கவலை இல்லையோ? நான் அப் போதே முடிவு செய்து விட்டேன்.

"குட்டுவஞ்சேரலைக் காப்பது என் கடமை மட்டு மல்ல...... என் இலட்சியமும் கூட. அரண்மனைக்குள் இளவரசன் இருந்தாலாவது அத்தனை அபாயம் இல்லா மல் இருக்கும். ஆனால் அரசரோ, ஓர் ஏழைப் புலவரிடம் குட்டுவஞ்சேரலை ஒப்படைக்க முன் வந்தபோது நான் குழம்பிப் போனேன். பகைவர்களுக்கு இளவரசனைக் கொல்வது எத்தனை சுலபமான காரியம்!

"பரணர் அழைத்துச் செல்லவிருக்கும் இளவரசனை எதிரிகள் இடையில் வழிமறித்துக் கொல்விக்கத் திட்டம் போட்டிருக்கின்றனர் என்ற தகவல் கிடைத்ததும் துடி துடித்துப் போனேன். உடனே ஒரு முடிவு எடுத்தேன். இளவரசனின் வயதுடைய என் மகன் மணிமாறனை இள வரசன் இருப்பிடத்தில் இருக்கச் செய்து பகைவர்களை ஏமாற்ற நினைத்துத்தான் அப்படி ஒரு நாடகம் ஆடி னேன். என் அன்பு மகனும் எனக்காக ஒத்துழைத்தான். சில நாட்கள் பழகிய தன் நண்பனைக் காப்பாற்றுவதற் காகத் தான் இறக்கவும் முடிவு செய்தான். மணிமாறன்

இறந்தால் எனக்கு இன்னொரு இளைய மகன் இருக்கிறன். ஆனால் அரசருக்கோ? சேரர் குலத்தின் ஒரே கொழுந்து!

"இளவரசன் மாற்றப்பட்டதற்கு ஆதாரம் வேண்டும்என்பதற்காகத்தான் பரணரிடம் அப்படி ஒரு ஓலையை எழுதி வாங்கிக் கொண்டேன்.

"ஆனால் மணிமாறன் சாகவில்லை... காரணம் இளவரசன் யாராலோ கடத்தப்பட்டான் என்கிற தகவல் எதிரிகளுக்குக் கிடைக்கவே அவர்கள் கவனம் திருப்பப் பட்டது. யாரும் அறியாமல் இளவரசனை நான் பயிற்றுவித்தேன். வித்தைகள் பல கற்றுத் தந்தேன். கல்வி கேள்விகளில் சிறந்தவனுக்கினேன். அவனை என் மகனுகவே வளர்த்தேன். என் இளைய மகன் திருக்கண்ணன் இளவரசனைத் தன் உடன் பிறந்தானுகவே நினைத்து அன்பு செலுத்தி வந்தான். ஆனால்... ஆனால் சில திங்களாகத் திருக்கண்ணன் மனம் ஒரு நிலையில் இல்லை என்பதை உணர்ந்தேன். அவன் அடிக்கடி வெளியூர் போவதும் ஏதோ சில இரகசிய நடவடிக்கைகளில் கலந்து கொள்வதுமாக இருப்பதைக் கவனித்தேன்.

"அப்போதுதான் ஓர் உண்மை எனக்குத் தெரிய வந்தது. பரணரிடம் நான் எழுதிவாங்கி வைத்திருந்த ஓலை...... ரொம்பப் பத்திரமாக ஒரு பேழையில் நான் பாதுகாத்து வந்த அந்த அரிய பொக்கிஷம் எப்படியோ காணுமல் போய் இருக்கிறது! வாலிபம் அடைந்த இளவரசனைப் பிரகடனப்படுத்த வேண்டிய கட்டத்தில் ஆதாரம் தொலைந்து போனதால் ஏற்பட்ட அவமானம், வேதனை என்னை வருத்தியது.

"நான் செய்வதறியாது திகைத்தபோதுதான் திடுக்கிடும் ஒரு தகவல்... ஆனால் நிம்மதியான தகவல் தெரிந்தது. என் மகன் திருக்கண்ணன் எனக்கு எதிரா

கவே சோழர்களுக்காகவே ஒற்று வேலே செய்கிறுன் என்கிற தகவல்தான் அது. ஒருவேளே ஓலேயைக் கடத்தியதுகூட அவனுகத்தான் இருக்குமோ என்னமோ?

"இதில் வியப்பு என்னவென்றுல் உண்மை இளவரசனேயே அரசனிடம் அவனேயும் அறியாமல் அவன் சேர்ப்பித்த விந்தை நிகழ்ச்சிதான்!

"இளவரசனேக் கடத்தியது நான்தான் என அவன் அறியவில்லே போலும்; இத்துடன் தான் அன்பு செலுத்தும் அண்ணன் உறவினில் இருப்பவன்தான் உண்மை இளவரசன் என்பதும் அவனுக்குத் தெரியாது போலும்! சேரவேண்டிய இடத்தில் இளவரசன் சேர்ந்துவிட்ட நிம்மதி எனக்கு.

"இதற்கிடையில் போர் முரசின் ஒலி...... திருக்கண்ணனுக்கு உண்மை தெரிந்தால் அவனுல் உண்மை இளவரசனுக்கு ஆபத்து நேரலாம் எனத்தான் இதுநாள் வரை நான் வாய்மூடி மௌனியாய் இருந்தேன். மேலும் அரசருக்கு உண்மை அறிவிக்க வேண்டிய அவசியம் இல்லாமலே நிகழ்ச்சிகள் ஒழுங்காக முடிந்து விட்டன...... திருக்கண்ணனேக் கண்டுபிடித்து அவனேச் சிறையில் அடைக்க வேண்டியதுதான் பாக்கி.

"அவன் அபாயகரமானவன். அவனுல் இனி துன்பம் ஏதும் நேராது என்று சொல்வதற்கில்லே. அவனேக் கண்டுபிடிப்பதுதான் என் அடுத்த பொறுப்பு......"

மலேயமான் முடித்தபோது அங்கே பயங்கர நிசப்தம் நிலவியது.

ராணியின் கண்கள் குளமாகின. தியாகம், தியாகம் என்கிறுர்களே... இதுதான் தியாகமா? நட்பு நட்பு என்பதும் இதுதானே?

தந்தையும் மகனும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர்!

அப்பப்பா... எவ்வளவு வருடங்களுக்குப் பிறகு ஏற்பட்ட சந்திப்பு... எத்தனை சோதனைகள்!

வாழ்வின் சோதனை ஆஹுதியில் மணிமாறனைப் போட்டான் மலையமான். மணிமாறன் சாம்பலாக ஆகவில்லை! புடம் போட்ட பொன்னாகி விட்டான்.

"அப்பா!"

"மகனே!"

அன்பின் அறைகூவல். மெய்சிலிர்த்தபடி பார்த்து நிற்கும் ராணி. இந்த உணர்ச்சிமயமான கட்டத்தில் அமராவதியை அங்கே காணவில்லை என்பதை அவர்கள் கவனிக்க மறந்தே போனார்கள்! அமராவதி...?

## 8. நீறில் பூத்த நெருப்பு

பரணரும் திருக்கண்ணனும் அந்தப் பாறை மீது அமர்ந்தபடி பேசிக் கொண்டிருந்தனர்.

திருக்கண்ணன் நினைவுகள் எங்கோ சுற்றி வட்ட மிட்டன. முள்ளூர் மலைப்பகுதியில் அமராவதியைச் சந்தித்தது, அவளைக் காதலித்தது எல்லாமே அழியாத இனிய நினைவுகள். ஆனால்... அமராவதிதான் அவனைக் காதலிக்கவில்லையே? உயிருக்கு அஞ்சிக் கோழைபோல் ஒளிந்து வாழ்ந்துவந்த சோழன் பெருநற்கிள்ளியை அல்லவா காதலித்தாள். அவன் சோழன் என்பதை அறியாமல் - அரியணை ஏற வேண்டிய அரசகுமாரன் என்பதைப் புரியாமல் அல்லவா அன்பு செலுத்தினாள்.

பைத்தியக்காரி... அவள் அன்பு அர்த்தமற்றுப் போனதே... அந்தச் சோழன்தான் அவள் காதலை என்னமாக அலட்சியப்படுத்தி விட்டான்! வீறுகொண் டெழுந்த அவள் சினம் பழிவாங்கும் படலத்தில்

போதாக்குறைக்கு அரசனின் மாற்றுந்தாயான பதுமன் தேவியின் பிள்ளைகள் உதவியும் கிடைத்தது.

சேர அரசைக் கவிழ்க்க அந்த மாற்றுந்தாய்ப் பிள்ளைகள் சமயம் பார்த்திருந்தனர். அமராவதியின் பொங்கிய உள்ளம் அவர்களுக்குப் புரிந்தபோது அவளின் பலவீனத்தை அவர்கள் பயன்படுத்திக் கொண்டனர்.

சேரன் அம்மான் சேய் பெருநற்கிள்ளியையும், அவ னுக்கு உதவிபுரியும் சேரனையும் பூண்டோடு அறுப்ப தென அவள் செய்த சபதம்...

திருக்கண்ணனுக்கு எல்லாமே புரிந்தது. ஒரு விதத்தில் பார்க்கப்போனால் இருவருக்குமே ஒரே இலட்சியம்தான். அதாவது சேரனைக் கவிழ்ப்பது! அமராவதி சேரனின் மாற்றுந்தாய்ப் பிள்ளைகளின் ஒற்றாள்! அவனோ...? சோழன் ஒன்பதின்மரின் ஒற்றாள்!

இலட்சியத்தைச் செயல்படுத்தி அதைக் கொண்டு செல்லும் விதத்தில்தான் சற்று வித்தியாசம்.

காதலில் தோற்ற அமராவதி பழி வாங்கும் படலத்தில் இறங்கினாள். கிட்டத்தட்ட அன்பில் தோற்ற திருக்கண்ணனும் அதே நிலையில்தான் இருந் தான். ஆனால்... ஆனால் அமராவதி வெல்வதா?

பெருநற்கிள்ளியைக் கொல்வித்து, சோழர்களுக்கு உதவி புரிந்தால் திருக்கண்ணனுக்கு ஒரு குறுநில மன்ன னாகும் வாய்ப்பாவது கிடைக்கும்.

முடிந்தால் சேரனையும் ஒரு கை பார்க்க முடிந்தால் 'பரிசு'த் தொகை அதிகமாகக் கூட கிடைக்கும். வெற்றி அமராவதிக்குக் கிடைத்துவிட்டால்...?

காதலிலும் தோல்வி போதாதென வீரத்திலும் அல்லவா தோல்வி!

இச் செயல்களால் தன் அன்புத் தந்தையாம் மலையமானை எதிரிக்க நேரிடும். இருக்கட்டுமே...

அப்பா சேரனிடம் பெரும் பற்றுக் கொண்டவர். சேரனுக்கு இடையூறு செய்யும் காரியங்களை விரும்பாதவர். அவர் ஆட்சிக்குப் பிறகு திருக்கோவலூருக்கு அவன் அரசனாவதற்குள் அவன் கிழவனாகிவிடுவான். மேலும் மூத்தவன் இருக்கும்போது இளையவன் எப்படி அரியணை ஏற முடியும்?

தந்தையின் இரகசியக் கருவறைக்குள் கிடந்த அந்தப் பேழையைக் குடைந்ததும் ஒருவிதத்தில் நல்லது தான்! எத்தனைப் பெரிய இரகசியம் அது! ஆனால்... ஆனால், இந்த இரகசியத்திற்கும் அவன் தந்தைக்கும் என்ன உறவு? அந்த ஓலையில் இருந்த வாசகம்...

"என்னிடம் அரசரின் அன்புப் பரிசாக அனுப்பி வைக்கப்பட்ட குட்டுவஞ்சேரல் என்ற சேர இளவரசன், முகமறியாத சில முகமூடி வீரர்களால் கடத்திச் செல்லப் பட்டான். நான் அறிந்த தமிழின்மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன். இது சத்தியம். இளவரசன் தோளில் சேரநாட்டு இலச்சனைச் சின்னம் பொறிக்கப்பட் ருடிக்கிறது."

பரணர்."

திருக்கண்ணன் மீண்டும் யோசனையில் மூழ்கினான். பாவம், பரணர்! அரசரிடமிருந்து தம்மைக் காப்பாற் றிக்கொள்ள யாரோ ஒருவனை இளவரசன் எனக் கூறி வளர்த்து வருகிறார்.

திருக்கண்ணன் துரிதமாகத் திட்டம் போட்டான். இந்த ஓலையைக் காட்டிப் பரணரைப் பயமுறுத்துவது... அந்த யாரோ ஒருவனைத் துரத்திவிட்டுத் தன் அண்ணனையே இளவரசனாக்குவது.

சேரன் மாளிகைக்குள் மலையமான் மகன்... அண்ணன் நல்லவன்... பண்பாடுள்ளவன் ... பரணரின் உதவிக்காக எனக் கூறி அவன் மனத்தை மாற்றி விடலாம்... பிறகு... பிறகு சோழன் ஒன்பதின்மருடன் சேர்ந்து பெருநற்கிள்ளியை அழிப்பது ...

மணிமாறனைத்தான் உண்மைச் சேரனின் மகன் எனத் தப்புக் கணக்கு போட்டிருக்கும் அமராவதியை அவள் வழியிலேயே செல்லவிடுதல்... அவள் சேரன் மகனைக் கொல்லச் சமயம் பார்த்திருக்கும் நேரத்தில் தான் வெற்றிவீரனாய் நின்று அமராவதியைப் பார்த்து எள்ளி நகையாட வேண்டும்...

அவன் காதலைப் புறக்கணித்த அவள் தோல்வியைக் கண்டு அவன் சிரித்து, சிம்மநாதம் செய்யவேண்டும். எல்லாம் கணக்குப்படியே நிகழ்ந்தன, அந்தத் தலைப்பாகை வீரன் வராதவரை! ஓலை தொலைந்தது, அதை அடுத்து மணிமாறன் திடீர் மறைவு, மணிமாறனைப் பழிதீர்க்காமல் அமராவதி அவன்மீதே மையல் கொண்ட ஏமாற்றம், இனியும் அமராவதியை உலாவ விட்டால் ஆபத்தென உணர்ந்து அவன் அவளைக் கடத்தி வந்தபோது மணிமாறனின் திடீர்த் தாக்குதலால் ஏற்பட்ட குழப்பம்... திருக்கண்ணன் மெல்ல மெல்லத் தன் நினைவுகளை மீட்டுக்கொண்டிருந்தான்.

பரணர் அவன் சிந்தனையைக் கலைத்தார்.

"திருக்கண்ணா... உன் திட்டம் என்னை எத்தனை இக்கட்டில் மாட்டி வைத்துவிட்டது பார்த்தாயா..."

"பரணரே!... நீங்கள் செய்ததுதான் முட்டாள் தனம்... இளவரசன் கடத்தப்பட்டான் என்றீர்களே அன்றி... அதே தலைவனால் இன்னொரு சிறுவன் உம்மிடம் ஒப்படைக்கப்பட்டதை என்னிடம் கூறவில்லையே. ஏதோ ஒருவகை ஆள் மாருட்டம் நடைபெற்றிருக் கிறது. எனக்கு இப்போதுதான் உண்மையாகவே தலை சுற்றுகிறது... மணிமாறன் அவன் அவன்..."

'சட்'டென ஒரு பெண் குரல் இடையில் ஒலித்தது.

"மணிமாறன், உங்கள் உடன்பிறந்த அண்ணன்! உடன்பிறந்த அண்ணன் என நீங்கள் நினைத்து ஆள் மாருட்டம் செய்தது வேறு யாரையும் அல்ல... அவன் தான் உண்மையான இளவரசன் குட்டுவஞ்சேரல்."

குரல்கேட்டு இருவரும் திரும்பினர். குதிரை ஒன்றினைச் செலுத்தியபடி அமராவதிதான் கம்பீர மாகப் பேசினாள்.

"என்ன திருக்கண்ணன் அவர்களே! மலையமான் திருமுடிக்காரியின் அன்பு மகனே!... என்னை ஏமாற்றி விட்டதாக இன்பக் கனவு கண்டீரே... உண்மைதான். நான் ஏமாந்தேன்... ஒரு முறை அல்ல... இரு முறை ஏமாந்து போனேன். சோழன் பெருநற்கிள்ளியை மனமாரக் காதலித்தேன். ஆனால், அந்தக் கயவனோ தன் அன்புக் காதலிக்கு என்னையே நானும் அறியாமல் தூதாகப் பயன்படுத்தி என் வெஞ்சினத்தை அதிகப் படுத்தினான். மனமுடைந்த நான் சீறிப் பாய்ந்தேன் பெண் புலியாக... ஆனால் ஆனால் என்னையும் அறியாமல் மணிமாறன்பால் என் மனம் சென்றது. இதற்கு அந்தத் தலைப்பாகை வீரன் ஒரு காரணமாக இருந்தாலும் என் மனமும் ஓரளவு காரணம். ஆனால் இவன்தான் நான் கொல்ல நினைத்த சோழர் பகைவன்... சேர இளவரசன்

குட்டுவஞ்சேரல் என நீங்கள் சுட்டிக் காட்டினீர்... உங்கள் வார்த்தைகளை உண்மை என நம்பிக் காதலுக்கும் கடமைக்கும் இடையில் திணறினேன்... தவித்தேன். அதே சமயம் மணிமாறனுக்கும் காவேரிக்கும் இடையே ஏற்கனவே காதல் உண்டு என்பதை உணர்ந்தபோது துடிதுடித்தேன். முதல்தரம் ஏற்பட்ட ஏமாற்றம் பழி வாங்கும் படலத்தில் மாறியது. இம்முறை ஏற்பட்ட ஏமாற்றம் காவேரியையும், மணிமாறனையும் சேர்த்து வைக்கவேண்டும் என்கிற தீவிரத்தில் இயங்கியது. ஆம்··· நான் பழி தீர்த்துக் கொள்ளத்தான் போகிறேன்··· என் ஆசைகளில்··· என் கனவுகளில்... உம்மை நான் காதலிக்கவில்லையே என்கிற பொறுமையால் உங்கள் உள் எழுந்த நெருப்பின் ஜுவாலையில் நான் தீய்ந்து கருகி மாளத்தான் போகிறேன்... அதற்கு முன்...'' என்று சொல்லிக் கொண்டே இடையில் செருகி இருந்த கத்தியை எடுத்து அவள் வீசப்போனாள். ஆனால் அதற்குள்... அவள் கருத்தினை உணர்ந்து ஊகித்துக் கொண்ட திருக்கண்ணன் 'சட்'டென விலகிக் கொண்டான்.

கத்தி சீறிக் கொண்டு புதரை நோக்கிப் பாய்ந்தது. மறுகணம்—

''வீல்'' - இரத்தத்தை உறைய வைக்கும் சப்தம்! பெண் குரல்... பைத்தியம் பிடித்தவர்கள் போல் அனை வரும் குரல் வந்த திசைநோக்கி ஓடினர்.

அங்கே குருதி வெள்ளத்தில் காவேரி துடிதுடித்துக் கொண்டிருந்தாள்!

''காவேரி'' - பரணர் அலறினார். 'அடிபேதைப் பெண்ணே!... உன்னைப் பலவந்தமாக வீட்டைவிட்டுப் துரத்தினேன் என்பதற்காகச் சேர நாட்டை அடை

வதற்குள் உன் அன்புத் தந்தையையும் கூடக் காணப் பிடிக்காமல் கண்ணை மூடி விட்டாயா என் மகளே?"

"காவேரி!" - அமராவதி கத்தினாள்.

"மணிமாறனை நீயே வைத்துக் கொள்... நான் போகிறேன் முதலில் என எனக்கு இடம் ஒழித்துவிட்டு, என்னைப் பழிக்குத் தள்ளிவிட்டு என்னை விட்டுப் போகிறாயா, என் அன்புத் தோழியே!"

"காவேரி" - கபிலர் துடித்தார். "கவிதை, கவிதை என உயிர் விடுவாயே அம்மா... அந்தக் கவிதையின் கற்பனைச் சிகரத்திலும் காணமுடியா உயரத்திற்குப் போய் விட்டாயே, தாயே!"

"காவேரி" - கபிலருடன் வந்த பாரி மகளிர் இருவரும் கதறினர்.

"காவேரி!" - அந்த இயற்கைப் பிராந்தியம் முழுவதும் 'காவேரி...காவேரி' என அழுதது! எதிரொலித்தது.

## 9. கன்னித் தெய்வம்

ராணியின் கண்கள் கலங்கி இருந்தன. அவள் எதிரில்...?

பரணர், கபிலர், பாரி மகளிர் இருவர், மலையமான், அனைவரும் நின்றிருந்தனர்.

திருக்கண்ணனே கைதியாக எதிரில் நின்றிருந்தான். அவன் எதிரில் அதே நிலையில் அமராவதி!

அழுதழுது அமராவதியின் கண்கள் குளமாகி இருந்தன.

சற்று தூரத்தில்... சூன்யத்தை வெறித்துப் பார்த்த படி மணிமாறன் பைத்தியக்காரனைப்போல் நின்றிருந்தான்.

ஆத்திரத்திற்கும் அவசரத்திற்கும் பலியாகிவிட்டால் ஒரே நொடிக்குள் என்ன என்ன நேரிட்டு விடுகின்றன! மணிமாறனையும் காவேரியையும் இணைக்க நினைத்தவள் தன் கையினாலே அவளைக் கொன்று விட்டாளே!

விதி சிரித்தது என்றால் மதி என்னவாயிற்று?

அரசரின் வருகைக்காக அனைவரும் காத்திருந்த நேரமது. இங்கு நடந்தவை எதுவுமே அரசருக்குத் தெரியாது. அரசரிடம் எல்லாவற்றையும் விவரமாக முதலிலிருந்து கூறவேண்டும்.

மலையமானுக்குத் தன் மகன் திருக்கண்ணனைப் பார்த்தபோது பற்றிக்கொண்டு வந்தது.

ஒருவன் மணிமாறன். மற்றவன் திருக்கண்ணன்.

நட்புக்காக உயிரையும் கொடுக்க முன்வந்த முதல்வன். அரியணைக்காக நட்பையும், நல் உறவையும் கூடக் கெடுக்கத் துணிந்த இளையவன்! ஏன்? தன் அன்பு அண்ணனைக்கூடக் கொல்லத் திட்டம்போட்ட கொடியவன்!

எத்தனை வேறுபாடு! ஒரு தாய் வயிற்றுப் பிள்ளைகளில் இவ்வளவு வேறுபாடுகளா?

"திருக்கண்ணா... உன்னால் எனக்கு எத்தனை அவமானமடா? கடைசியில் உனக்கு அரியணையும் கிடைக்கவில்லை... அன்பும் கிடைக்கவில்லை..."

திருக்கண்ணன் பேசவில்லை. அவனுள் ஒரு பாரதப் போர் நிகழ்ந்து கொண்டிருந்தது. அரியணை, அரசியல், ஆடம்பரம் அனைத்துமே ஓர் அன்புருவின் முன் தூசியாகப்

போய்விட்ட பிரமை! ஒரே நொடிக்குள் துள்ளித் திரிந்த காவேரி என்னமாய் வற்றுப் போய்விட்டாள்! இவ்வளவு தானு? இதற்கா இத்துணைப் போராட்டம்!

அவனுள் கழிவிரக்கம் கசிந்து கொண்டிருந்தது.

"அரசர் வந்தால் என்ன சொல்வேன்? எப்படி என் தூய்மையை நிரூபிப்பேன்? காணுமற் போன அந்த ஓலை..." மலையமான் முடிக்கவில்லை... அதற்குள்...

"இந்த ஓலைதானு பாருங்கள் காரி அவர்களே!" மெய் சிலிர்க்க வைத்த குரல்! அரசருக்கே உரிய கம்பீரக் குரல்! அனைவரும் திரும்பிப் பார்த்தனர். தலைப்பாகை வீரன்! அவன்... அவனு? அப்படியானுல்...? உருவத்தை மட்டும் மாற்றிய அரசன் வேண்டுமென்றே குரலை மாற்ற வில்லைபோலும்...

அனைவரும் திகைத்து நின்ற அந்த வேளையில் அரசன் தம்முடைய தலைப்பாகை வீரன் வேடத்தைக் கலைத்தான்! அங்கு? கம்பீரமாக மாமன்னன் நின்றிருந்தான்.

"பிரபு!" - ராணி பாய்ந்து சென்று அரசர் காலடியில் அடைக்கலம் புகுந்தாள்... அவள் மென்மையான உடல் நடுங்கியது! என்னே அவள் பேதைமை!... கணவனையே ஒற்றனுக நியமித்த அறிவின்மை!

மாமன்னன் மெல்லச் சிரித்தான். ராணியையும், பரணரையும் அவன்தான் எவ்வளவு முறை பயமுறுத்தி இருக்கிறுன், 'அந்த' ஓலையைக் காட்டி! ராணியின் அச்சமும், பரணரின் பயமும் அரசனுக்கு ஒரு விளையாட்டு நிகழ்ச்சியாக இருந்தது! தவிர மணிமாறனை ராணி தன் உண்மை மகனென நினைந்து விடாமல் இருக்க வேண்டும் என்பதற்காக அரசியிடம் ஓரளவு உண்மை சொல்ல நேரிட்டது. அதேபோல் பரணரைப் பயமுறுத்திப் பார்க்கவேண்டும் என்பதற்காக அந்த ஓவியத்தைக்

காட்டி அவரை அயரச் செய்யவேண்டிய அவசியம் நேரிட்டது... ஆனால் உண்மை இளவரசன் யார் என இப்போதுதானே தெரிந்தது.

அரசன் மெல்லப் பேசினன்... "காரி... உன் தியாகத்தை மெச்சுகிறேன் என் மகனைக் காப்பது உன் கடமை என்றால் உன் மகனைக் காப்பது என் கடமை அல்லவா? பரணர் செய்த தவறு, நீ செய்த தியாகம் எல்லாம் சமீபத்தில்தான் தெரிந்தன. அதாவது திருக்கண்ணனிடமிருந்து அந்த ஓலையை நான் பறித்த பிறகுதான்... கணக்குப் போட்டுப் பார்த்தேன். திருக் கண்ணனின் திட்டத்தை ஓரளவு ஊகித்தேன். முள்ளை முள்ளால்தான் எடுக்க வேண்டுமெனத் தீர்மானித்தேன். திருக்கண்ணன் தான் அரசை அடையும் ஆசையில் எதிரி களுக்கு மணிமாறனைத்தான் இளவரசன் என 'இனம்' காண்பித்து வந்த உத்தியைக் கவனித்தேன். என்னைச் சூழ்ந்த எதிரிகள் பலதரப்பட்டனர். மாற்றாந்தாய் வழி எதிரிகள், சோழன் ஒன்பதின்மரின் கைக்கூலிகள் இன்னும் பல தரப்பினர். இந்தச் சிக்கலைச் சிக்கலாலேயே அவிழ்க்க முயன்றேன். மணிமாறன் சேர நாட்டில் இருப்பதைவிட வெளியூர் சென்றால் அவன் பாதுகாப்பு பலப்படும் என நினைத்தேன். ஆனால், மணிமாறனை அப்படி அனுப்பியது திருக்கண்ணனுக்குத் தன் திட்டத் தைச் செயல்படுத்த உதவியாக இருக்குமென அப்போது எனக்குத் தோன்றவில்லை. அமராவதி மணிமாறனைக் கொல்லக் கண்ணி வைத்திருப்பதை உணர்ந்தேன். அவள் பரணரின் சீடனைத்தான் இளவரசன் என நினைத் திருக்கிறாள் என்பது புரிந்தது. எனவேதான் அவனைப் பரணரின் சீடன் பதவியிலிருந்து பலவந்தமாகப் பிரித்து வைத்திருக்கும் அவசியம் நேரிட்டது. மணி மாறனை அவள் உணர்வதற்குள் அவர்களிடையே பல

வந்தக் காதலைத் தோற்றுவிக்க எண்ணினேன். என் அன்புக்கும் மிரட்டலுக்கும் பயந்த மணிமாறன் காவேரி மீது தான் கொண்ட அளவற்ற காதலால் என் ஒவ்வொரு செயலுக்கும் உட்பட்டான்...''

மாமன்னன் சற்று நிறுத்தினான்.

ஒவ்வொருவரும் பழைய நினைவுகளை மீண்டும் மீட்டுக்கொண்டு வந்தனர்.

மன்னன் மேலே தொடர்ந்தான்:

''காதல் வயப்பட்ட அமராவதியால் மணிமாறனுக்கு ஆபத்தில்லை என்பதை உணர்ந்தேன். அமராவதியின் உள்ளத்தில் மெல்ல மெல்ல அன்பு ஊற்றைத் தோற்றுவிக்க முயன்றேன். அவளின் சில இரகசியங்களை நான் அறிந்து வைத்திருந்ததால் நான் சேரர் ஒற்றன் என என்னைக்கூறிக்கொண்டபோது அவள் திடுக்கிட்டாள். ஆனால், அவள் நலனில் அக்கறை கொண்ட என்னால் அவள் சொந்த வாழ்விற்கு இடையூறு வராது என்ற நம்பிக்கைக் கொண்ட அவள் என் கட்டளைக்கு அடிபணிந்தாள். அவளைப் பற்றி நான் அறிந்த முதல் இரகசியம் அவள் என் மாற்றாந்தாய்ப் பிள்ளைகளின் ஒற்றாள் என்பதுதான்! ஆணிவேரையே ஆட வைக்கும் இந்த இரகசியத்தை நான் அறிந்து கொண்டேன் என்பதை உணர்ந்தபோது அவள் ஆடிப் போய்விட்டாள். ஒற்று வேலையை விட்டுவிட்டு உள்ள அன்பினுக்காக அலைந்தாள். அப்போதுதான் நான் உணர்ந்தேன். திருக்கண்ணனுக்கும் இவளுக்கும் இடையில் இருக்கும் போராட்டத்தை... இவர்களின் இடையே பிணக்கைத் தோற்றுவித்தால் அந்தப் போட்டியில் மணிமாறன் காப்பாற்றப்படுவான் என்பது புரிந்தது.

''ஆனால் என் தாயாதிகளுக்கு எப்படியோ புரிந்து விட்டது, அமராவதி முன்மாதிரி ஒற்று வேலை செய்து தகவல் அனுப்புவதில்லை என... அவள் மனத்தை மாற்றி விடும் என்னையும், அவர்கள் கொல்லச் சமயம் பார்த் திருந்தனர்!

''என்றால் முற்றும் மாற்றப்பட்டு விட்ட அமராவதி யின் உள்ளமோ? இந்த அசிங்கம் பிடித்த அரசியலை விட்டு விலகி அமைதியான குடும்ப வாழ்வில் ஈடுபட அவள் உள்ளம் விழைந்ததை உணர்ந்தேன்.

''அவள் நல்வாழ்விற்குப் பாடுபடுவதாக உறுதி கூறினேன்... ஆனால், அவள் மணிமாறனைத்தான் உண்மையாகவே காதலித்தாள். நானே ஏற்படுத்திய சிக்கல்தான் இது! காரணம்...? அவளின் அன்றைய நிலை அப்படி இருந்தது. சீற்றத்திற்கும், வெஞ்சினத்திற்கும் அவள் பலியாவதைத் தடுக்க, காதல் நீரோட்டத்தை ஓட விட்டேன் .. ஆனால் வெள்ளம் பாய்வதற்குள் அணை போட வேண்டிய அவசியம் நேரிட்டது. மணிமாறன் உள்ளத்தில் காவேரிக்கு இடம் இருப்பதை உணர்த்த வேண்டிய அவசியம் நேரிட்டது... நான் நினைத்தது வீண் போகவில்லை.

''அமராவதி பழைய ஆத்திர உணர்ச்சிக்கு அடிமைப் படாமல் அமைதியாக நடந்து கொண்டாள். ஆனால்... ஆனால் மணிமாறனைக் காப்பாற்ற நான் பட்ட சிரமம் அத்தனையும் ஒரே நொடிக்குள் பாழாகி விட்டது. அவன் உயிரினும் இனிய காவேரி ஒரே விநாடியில் அநியாய மாகக் கொல்லப்பட்டாள்.

''மணிமாறன்கூட ஒரு விதத்தில் பார்க்கப்போனால் இறந்தவன் தான்... அவன் உயிரே போய்விட்ட நிலையில்...

இருப்பது நடைப்பிணமான மணிமாறன்தான்··· நான் தோற்றுவிட்டேன்.

"கன்னித் தெய்வமான காவேரிதான் என்னை மன்னிக்க வேண்டும். பரணரே... உமக்கு நான் எப்படி ஆறுதல் தரப் போகிறேன்··· என் மகனை மலையமான் காப்பாற்றினன். அவன் மகனை நான் காப்பாற்றினேன்... ஆனல்··· ஆனல்... அரசியலுக்குச் சிறிதும் சம்பந்த மில்லாத ஓர் ஏழைப் புலவர் மகளை எவராலும் காப் பாற்ற முடியாமல் போய்விட்டது···" தான் அரசன் என்பதையும் மறந்து சேரன் விம்மிவிம்மி அழுதான்.

கபிலரின் கண்கள் நிறைந்தன. அமராவதியையும் காணுமல், பறம்பு மலையிலும் இருக்கப் பிடிக்காமல், பாரி மகளிரையும் அழைத்துக்கொண்டு காவேரியுடன் அவர் கிளம்பிய நேரம் நல்ல நேரம் இல்லையோ?

பாரி மகளிரை மணம் முடிக்க வேண்டி விச்சி என்ற மலைநாட்டு அரசனை விச்சிகோவை அணுகியது; பிறகு அவன் இணங்காமையால் பதினெண்குடி வேளிருள் ஒரு வனை இளங்கோவனை வேண்டியது; அவனும் மூவேந்தர் பகையால் பயந்து மறுக்கவே ஆழியான் செல்வக் கடுங் கோவை அடைந்தது··· அங்கு, நன்றாவென்னும் குன்றே றித் தன் கண்ணிற் கண்ட நாடெல்லாம் காட்டி ஆழி யான் தந்தது— எல்லாமே நினைவுக்கு வந்தன.

ஆனல்... ஆனல்... பாரி மகளிரை ஏற்போர் யாரு மில்லையே!

இதனைக் கண்ட காவேரி மனமுடைந்து போனாள். பாரி மகளிரைக் காணவேண்டும் என்கிற ஆர்வத்துடன் ஓடோடி வந்த அவள் ஆர்வம் என்ன ஆயிற்று? அந்தப் பெண்களின் அவலநிலை கண்டு துடிதுடித்துப் போனாள். வண்டிச் சக்கரம் போல் சுழலும் ஓட்டம் எப்படி ஒரு

நொடிக்குள் மாறிப் போகிறது! இதுதான் வாழ்வின் முடிவா? இதுதான் கடைசி வாழ்க்கைத் தத்துவமா?

அவள் இதயத்தை வேதனை பிழிந்தெடுத்தது. மனமுடைந்த நிலையில் அவர்கள் சேரநாடு திரும்பிக் கொண்டிருந்தபோது... திரும்பிக் கொண்டிருந்த போதுதான்...

காவேரி எதிர்பாராத திருப்பம்.

அவள் வாழ்வின் கடைசித் திருப்பம்... வாழ்வின் கடைசித் தத்துவம்...

அமராவதியா கத்தி எறிந்தாள்? இல்லை... மறைந்திருந்து சிரித்த விதி அல்லவா எறிந்தது?

பரணரும், திருக்கண்ணனும் பேசிக்கொண்டிருந்ததை அவர்கள் புதர் மறைவிலிருந்தபடி கேட்டுக் கொண்டுதான் இருந்தனர்.

மலையமான் திருமுடிக்காரியின் மக்கள் மணிமாறனும், திருக்கண்ணனும்!

குருதி சொட்டும் அந்தக் கடைசி நேரத்தில் அவள் கண்முன் வாழ்க்கைத் தத்துவங்கள் சிரித்தன.

அன்பில் தோல்விகண்ட அமராவதியால் அன்பின்றி வாழ்ந்து விட முடியும்...

ஆனல் .. ஆனல்... உயர் குடியில் பிறந்து சந்தர்ப்ப வசத்தால் கீழ்நிலைக்குத் தள்ளப்பட்ட பாரி மகளிரின் எதிர்காலம்... மூவேந்தரின் பகையால் அவர்களைக் கொள்ள மறுக்கும் சிற்றரசர்களின் அறிவீனம்...

அந்தப் பெண்மை வாழ வேண்டும்; அவர்கள் நலம் பெற வேண்டும். உயிர் துடிக்கும் அந்த நிலையிலும் காவேரி என்ன நிதானமாகப் பேசினள்.

மணிமாறனும் திருக்கண்ணனும் அந்த இரு பெண் களுக்கும் வாழ்வு தரவேண்டும் என்று வாக்குறுதி அல்லவா வாங்கிக் கொண்டாள்!

"அப்பா... உங்கள் மகள் காவேரி இறக்கவில்லையப்பா... இதோ... இதோ இந்தப் பாரி மகளிரின் வாழ்வில் அவள் வாழ்வும் கலந்து சுடர் விடுகிறதப்பா... அமராவதி என்னை மன்னித்து விடு!... நாம் இருவருமே மணிமாறனை அடையக் கொடுத்து வைக்கவில்லை. ஆனால் நீ... நீ துன்பத்தைச் சகித்துக் கொள்வாய்... என்னால் சகிக்க முடியாது... நான் நான் வருகிறேன்..."

அதன் பிறகு... அவள் பேசவில்லை... கன்னித்தெய்வமான அவள் பேசவில்லை... ஒளி மயமாகச் சுடர் விட்டாள்.

அவரவர் நினைவுகளில் அவரவர்கள் மூழ்கிக்கிடந்தனர். அனைவர் இதயத்திலும் காவேரியின் தியாகம் வேதனையின் நெகிழ்ப்பாய்க் கசிந்து கொண்டிருந்தது.

## 10. முடி சூட்டு விழா

சேரனின் அரசவை கம்பீரமாக விளங்கியது. இளவரசன் குட்டுவஞ் சேரல் 'சேரமான் மாரி வெண்கோ' என்ற பெயருடன் அரியணை ஏறி அமரப் போகும் புனிதமயமான பொன் நாள்.

இந்த இன்பமயமான நாளிலே... இந்த ஆனந்தத்தைக் காண அரசவைக் கண்ணே அனைவரும் கூடி இருந்தனர். மணிமாறன், திருக்கண்ணன் அவர்களின் இருமருங்கிலும் பாரி மகளிர், மலையமான் திருமுடிக்காரி

அனைவரும் இருந்தாலும் ஏனோ அவர்கள் இதயத்தை ஏதோ ஒன்று வந்து அடைத்தது.

மகளின் மறைவால் மனமுடைந்த பரணர் க்ஷேத்திராடனம் செய்யப் போய்விட்டார்.

பாரி மகளிரை மணம் செய்து கொடுத்த பொறுப்புத் தீர்ந்த கபிலர் பாரியின் நட்பின் நினைவால், பாரியைப் பிரிந்து இவ்வளவு நாட்கள் உயிர் வாழ்ந்ததே அதிகம் என்கிற வேதனையில் அவன் சென்ற வழியில் தானும் செல்ல நினைத்துத் தென்பெண்ணையாற்றின் திட்டொன்றில் இருந்து, வடக்கிருந்து உண்ணா நோன்பு நோற்று உயிர் விட்டார்.

"மெய்வைத் தியலும் முத்தமிழ் நான்மைத்
தெய்வக் கவிதைச் செஞ்சொற் கபிலன்..."

என்ற அப்பாடலை யாரால் மறக்க இயலும்!

அப்பப்பா... எல்லாம் கழிந்து எத்தனை நாட்களாகி விட்டன! நேற்று நடந்தது போலல்லவோ இருக்கிறது!

தந்தையின் மறைவுக்குப்பின் பைத்தியம் பிடித்தவள்போல் நாட்டிடையே சுற்றித் திரிந்த அமராவதியை அதே பெண்ணையாற்றில் பிணமாகக் கண்டெடுத்த கொடுமை!

அவலம் நிறைந்த பெண்மை! அன்பு செய்யக் கற்றிருக்கும் பெண்மையின் ஒரே குற்றத்திற்காக பிரமன் அவர்களை ஏன்தான் இப்படிச் சோதனைக் களமாக ஆக்கிக் கொள்கிறானோ? ஏன்...? ஏன்...? இன்றும்...

கண்ணகியின் கதைகூட இப்படித்தானோ? சோழ நாட்டில் முகிழ்த்து, பாண்டி நாட்டில் மலர்ந்து, சேர நாட்டில் மணம் பரப்பிய, கண்ணகியின் கதை...

கொள்ளை அழகு குலவிய வடிவம், பெண்ணுலகு போற்றிய புகழ் மிக்கவள், கற்பின் இமயம் ... அவள் கதை என்னவாயிற்று?

சேரன் ஒரு பெருமூச்செறிந்தான். இன்றைக்குச் சற்றேறக்குறைய இருபத்தாறு நாட்களுக்கு முன் திங்கட்கிழமை வளர்மதி மூன்றும் பிறையன்று என்ன நடந்தது . என்ன நடந்தது?

'ஆடித் திங்கள் பேரிருள் பக்கத்து அழல் சேர் குட்டத்து அட்டமி ஞான்று'- மதுரையை எரித்த கற்பின் கனலாள் கண்ணகி சேரநாட்டைச் சேர்ந்து செங்குன்றத்தில் ஏறி நின்றபோது ··· கொலையுண்ட கோவலன் தேவவிமானத்தில் வந்து அவளைக் கூட்டிச் சென்ற காட்சிகளைக் கண்ட மறவர் சேரனிடம் சேதி அறிவித்தனர்.

அப்போதே சேரன் தீர்மானித்துவிட்டான் அப் பத்தினி தெய்வத்திற்குச் சிலை எடுக்க வேண்டுமென··· அத்துடன் மதுரைச் சீத்தலைச் சாத்தனும் காவிரிப்பூம் பட்டினத்தில் நடந்தவைகளை அறியக் கூறினர்.

இளங்கோ அடிகளோ கண்மூடி மோனியாய்க் கதைகேட்டு அமர்ந்திருந்தார். நாளை ஒருவேளை காப்பியமாகக்கூட... அவர் சிந்தனையிலிருந்து கண்ணகி யின் கதை வரலாம். ஆனால் சேரனின் உள்ளுணர்வு கூறியது ··· கண்ணகிக்குச் சிலை எடுக்க வேண்டும். சாதாரணச் சிலை அல்ல;இமயத்தில் கல்லெடுத்துக் கங்கை யில் நீராட்ட வேண்டும். இந்தச் சிலை கண்ணகிக்கு மட்டும் எடுக்கும் சிலையல்ல... கன்னித் தெய்வமான காவேரிக்கும், பேதைப் பெண்ணான அமராவதிக்கும் சேர்த்து எடுக்கப்படும் தெய்வச் சிலை! தென்னாட்டு

அரசர்களை இகழ்ந்துரைத்த கனக-விசயருக்குப் பாடம் கற்பிக்க வேண்டும்.

தமிழர் தம் உட்பகையால் சிதைந்து கிடந்தாலும் வடநாட்டான் இகழ்ந்துரைக்க அவல வாழ்வு வாழ மாட்டார்கள்!

தம் உட்பகையால் ஓயாத போர், மாளாத தொல்லை கள்... ஒரே தமிழர் இனம் கருத்து வேறுபாட்டால் களர் நிலத்தில் கத்தியுடன் மோதிக்கொண்ட பரிதாபநிலை.

அரசவையில் தமிழ் வளர்ந்தாலும், போர்க்களத்தில் இரத்த ஆறல்லவா உடன் பாய்ந்தது! இதுவா தமிழர் பண்பு? இதுவா தமிழுக்கு மன்னர்கள் செய்யும் கைம்மாறு?

வள்ளல்கள் நிறைந்த தமிழ் நாட்டில், அன்புள்ளங் கள் நிறைந்த தமிழகத்தில் இப்படி ஒரு துர்ப் பாக்கிய நிலை வரலாமா? அதை வளர விடலாமா?

கனக - விசயர் என்ற வடவரசர் தமிழர்களைப் பழித்தனர் என்றவுடன் சீறிப் பாய்ந்துவிட்டான் சேரன்! தமிழன் ஒருவன்மீது ஏற்றப்பட்ட பழிச்சொல் அது எதுவானாலும் அது சோழனைக் குறித்தாலும், பாண்டியனைக் குறித்தாலும் அது தன்னைத்தான் குறிப்பதாகக் கணக்கெடுத்துக் கொண்டான் சேரன் செங்குட்டுவன்!

தமிழர் அவ்வளவு பேரின் ஒருமித்த பிரதிநிதியாகத் தன்னைத் தான் நியமித்துக் கொண்டவன் இதோ... இதோ... கண்ணகிக்குச் சிலை எடுக்கும் நோக்கத்தில் வடக்கு நோக்கி வெற்றி விஜயனாய்க் கிளம்பிவிட்டான்.

அவன் திரும்பி வரப் பல வருடங்கள் ஆகலாம்... ஏன்? திரும்பி வராமல் கூடப் போகலாம்... கடமை தவறக் கூடாதல்லவா? அதற்காகத்தான் இதோ இளவரசனுக்கு முடிசூட்டு விழா நடக்கிறது இந்தப் பணி முடிந்ததும் மாமன்னன் வீர விஜயம் செய்யக் கிளம்பிவிடுவான். வெற்றிச் செயல் இன்னும் எத்தனை எத்தனைக் காத்திருக்கிறதோ? இதோ ... இளவரசன் குட்டுவஞ்சேரல் என்ற சேரமான் மாரி வெண்கோவின் அன்பு நண்பர்களாய் அவன் அருகில் நிற்கின்றனர் சோழன் பெருநற்கிள்ளி... சேரனின் அன்பால் அரியணை அமர்த்தப்பட்டவன்... அவன் அருகே பாண்டியன் உக்கிரப் பெருவழுதி...

அனைவரும் இந்த முடிசூட்டு விழாவின் பெருமிதத்தைக் காண ஒருங்கே கூடி இருக்கின்றனர்.

மக்கள் கூட்டம் ஆரவாரம் செய்கிறது.

கவிஞர் கூட்டம் புகழ் பாடுகிறது.

வஞ்சியர் கூட்டம் பூக்களை வாரிவாரி இறைக்கிறது.

கவிஞர் கூட்டத்தில் பரணரும் கபிலரும் இல்லை. வஞ்சியர் கூட்டத்தில் காவேரியும் அமராவதியும் இல்லை. ஆம்... அவர்கள் உடலால் இல்லை... உயிருடன் கலந்து ஒளிவிடுகின்றனர். உடலின் உயிர்ப்பாய் உள்ளத்தில் நிலவி நிற்பவர்கள்...

மா மன்னனின் கண்கள் நிறைகின்றன.

''மா மன்னர் வாழ்க!''

''செந்தமிழ்ச் செல்வர்...வாழ்க!!''

''வானவர் கோமான் வாழ்க!''

''சேரன் செங்குட்டுவ சீமான் வாழ்க! வாழ்கவே...'

(முற்றும்)

